கழக வெளியீடு: அகரு

# சிவஞான சுவாமிகள் வரலாறு

ஆசிரியர்:

**திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,**

எம்.ஏ., எம்.எல்., (அட்வகேட்)

திருநெல்வேலி.



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

நம் அருந்தமிழகத்துத் தோன்றிய தெய்வச் சான்றோருள் நனிமிகச் சிறந்தோர் பலரும் செந்தமிழுக்கும், செந்நெறிக்கும் தனித்தனியாகவும் ஒருங்கிணைந்தும் பெருந்தொண்டியற்றினர். எனினும், ஈடும் எடுப்பும் இல்லாத நம் தமிழ்மொழிக்குப் பேருரை என்னும் பாடியம் இயற்றியோர் எவரும் இலர். அச்சீரிய தொண்டினைத் திருவருளால் முற்றுவித்து முழுப்புகழ் எய்தினார் நம் சிவஞான முனிவரனார். சொற்பாவின் பொருள் தெரிவித்துத் தூய்மை செய்தருளியவர் நம் முனிவரனாரே யாவர்.

அம்மட்டோ, நம் தமிழ்மொழியின் அரும்பெரும் வனப்பினையும், தனித்தியங்கும் ஆற்றலினையும், வடமொழிக்கில்லாத பல சிறப்புக்களுடன் நிலவும் விளக்கத்தினையும் அங்கை நெல்லியென எடுத்து அனைவரும் ஏற்று ஒழுகுமாறு நிலைநாட்டிய அருந்தவத்தோரும் நம் முனிவரனாரே யாவர். அவர்தம் திருவரலாற்றினைக் கற்பதும் கேட்பதும், கற்பிப்பதும் கேட்பிப்பதும், தாயினும் சிறந்த தமிழ்மொழியினைத் தூய்மையுடன் ஓம்பி வளர்க்கும் நன்னோக்கமுள்ள அனைவர்க்கும் கடனாகும்.

அப்பெருந்தகையார் வரலாற்றினை நுணுகியாய்ந்து நடுநிலைவழாது விளக்குவது இந்நூலாகும். இந்நூலைக் கற்பார் பல சீரிய தமிழ் மாண்புகளை எளிதின் உணர்வர். முனிவரனார் இயற்றியருளிய இருபத்தொன்பது நூற்களுக்குமேற்பட்ட நூற்களும் உரைகளும் கற்கும் பயனும் கற்கும் வேட்கையும் இனிதினுறுவர். இந்நூலை ஆக்கி உதவிய பெருந்தகையார், திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்.,

அவர்கள் ஆவர். இவர்கள் இதுபோன்று வரலாறும் நூலாராய்ச்சியுமாக இயற்றிய பிற நூல்கள் வருமாறு: திருஞானசம்பந்தர், மணிவாசகப் பெருமான், சுந்தரமூர்த்தி சுவாமிகள், அப்பர் சுவாமிகள், சேக்கிழாரடிகள், தாயுமான சுவாமிகள், குமர குருபரர் முதலிய அருளாளர் திருவரலாறுகளும் நூல் ஆராய்ச்சியும் ஆகும். இவையனைத்தும் நம் கழக வழி வெளிவந்துள்ளன. இவ்வாசிரியர் இயற்றிய பட்டினத்தடிகள் வரலாறும் தொடர்ந்து வெளியிடப் பெறும்.

இதுபோன்று, சிறந்த நல்லிசைப் பேராசிரியர்களாகிய கச்சியப்ப சிவாசாரியர், வில்லிபுத்தூராழ்வார், பரஞ்சோதியார், கச்சியப்ப முனிவரனுர் முதலியோர் வரலாறுகளும் ஆராய்ச்சிகளும் தொடர்ந்து எழுதி வெளியிட எண்ணியுள்ளோம்.

இந்நூலின் முதற்பதிப்பு ஆசிரியரவர்களாலேயே 1-8-1932-இல் திருவாளர், S. RM. C. T. சம்புலிங்க செட்டியார் அவர்கள் நன்கொடைப் பொருளுதவியால் வெளியிடப் பெற்றுள்ளது. இப்பொழுது நம் கழக வெளியீடாக வெளிவருகின்றது. இதனைச் செந்தமிழன்பர்கள் வாங்கியும் வாங்குவித்தும் கற்றுப் பயன் எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# உள்ளுறை

பக்கம்

பக்கம்



---



சிவஞான மாபாடிய கர்த்தர் :

ஸ்ரீ மாதவச் சிவஞான முனிவரர்

திருவாவடுதுறை ஆதீனம்

உ

திருச்சிற்றம்பலம்

# சிவஞான சுவாமிகள் வரலாறு

## தோற்றுவாய்

### வேதாந்த சூத்திர பாடியங்கள்: சிவ சூத்திரம்

இந்திய நாட்டிலே சென்ற ஆயிரம் ஆண்டுகளாகச் சமயத்தலை நூல்களின் நுண்பொருளை விரித்து விளக்கும் பேருரையாசிரியர்களாலேயே சமயங்கள் நிலை பெறுவன வாயின. நூற்றெட்டு உபநிடதங்களின் சாரமாக, வேத வியாசர் இயற்றிய பிரம சூத்திரம் அல்லது வேதாந்த சூத்திரம் என்ற நூலிற்குப் பல பாடியங்கள் உள்ளன. நீலகண்ட சிவாசாரியார் இயற்றிய பேருரை சிவாத்துவித மதத்திற்குச் சிறந்த தத்துவ நூல். வீர சைவரில் ஒரு சாரார் அதனைத் தம்மதென்பர். சங்கராசாரியரது பாடியம் ஏகான்மவாதப் பெருநூல். அதனைச் சுமார்த்தப் பிராமணர் தமது தத்துவத் தலைநூலாகக் கருதுவர். இராமநுச பாடியம் வைணவரது சிறந்த மெய்ந்நூல். மத்துவ பாடியம் மாத்துவப் பிராமணர்க்குரியது. இவைகள் இவ்வாறிருப்பச் சைவ சித்தாந்தக் கொள்கையானது தமிழ் நாட்டிலே நெடுநாளாக நிலைபெற்று வழங்குவதாய்ச் செந்தமிழ் அருள் நூல்களிலுஞ் சிவாகம ஞானகாண்டத்துள்ளுஞ் சிறப்பாகவும், சைவ உபநிடதங்களிலே பொதுவாகவும் பேசப்படுவதாகலின், வேத வியாசருடைய பிரம சூத்திரம் அதற்குரிய நூலன்று. ஆதலால், அச் சூத்திரத்திற்குச் சைவ சித்தாந்த பாடியம் யாதுமில்லை. வடமொழியிலுள்ள சிவ சூத்திரம் என்பதும் சிவாத்துவிதச் சார்பாயிருத்தலின் அதுவுஞ் சைவ சித்தாந்த நூலன்று.

## சைவசித்தாந்த பாடியம், தமிழ்ச் சிவஞான பாடியம் ஒன்றே என்பது

பண்டைத்தமிழ் மறைகளும், தேவார திருவாசகங்களும், திருமூலர் திருமந்திரமும், பிறவும் சிறந்திலங்கிய காலத்தே சைவ சித்தாந்தக் கருத்துகள் அவைகளிலே அறியக்கிடந்தன. பதின்மூன்ருவது நூற்ருண்டிலே ஆசிரியர் மெய்கண்டார் என்பார், சைவசித்தாந்த சூத்திரமாகிய சிவஞான போதமென்னும் அரிய நூலினை இயற்றியருளித் தமது மாணுக்கர் நாற்பத் தொன்பதின்மருக்கும் அதனை அறிவுறுத்தினர்.

அந்நூலிற்குப் பலவுரைகள் வழங்கினும் எவற்றினுஞ் சிறந்த பேருரை கண்டார் ஆசிரியர் சிவஞான யோகிகளாவர். சுமார்த்தர்கள் சங்கராசாரியரைக் கொண்டாடுவதினும் அதிமாக அவர் சைவ சித்தாந்திகளாலே போற்றப்படுதற் குரியர். சங்கராசாரியர் முதலியோர், தென்ஞட்டிலே பிறந்து விளங்கினும், தென்மொழிப் பயிற்சியில்லாமலே தம் பெருநூல்களை இயற்றினர். ஆசிரியர் சிவஞான முனிவர் தமிழின் மாத்திரமல்ல; வடமொழியினுஞ் சிறந்த பெரும்புலமை வாய்ந்தவர். சங்கரமுனிவர் முதலியோர், வைதிக நூல்களையே பெரிதும் பேணிப் பயின்றவர்கள். சிவஞான யோகிகளோ, வைதிக நூல்களையுஞ் சிவாகமங்களையும் நன்கு அறிந்தவர். செந்தமிழிலே பாடியம் பெற்ற சமயம் சைவ சித்தாந்த சமயமொன்றேயாதலின் அதன் ஆசிரியர், திராவிட மாபாடிய கர்த்தரென்று வழங்கப்பெறுகின்ருர்.

வடமொழியிலே மாபாடியம் என்ற பெயர் ஆசிரியர் பதஞ்சலியார், பாணினியின் இலக்கண நூற் கியற்றிய பேருரைக்கே அமைந்துள்ளது. ஆசிரியர் சிவஞான சுவாமிகள் தமிழ்ப் பேரிலக்கணமாய தொல்காப்பியப் பாயிரத்திற்கும், முதற் சூத்திரத்திற்கும் பாடியம் உரைத்தனர். பிற சூத்திரங்களுக்கு அவர் உரைகாண்டற் குரிய தவம் தமிழ் நாட்டினர்க்கு வாய்த்திலது. உரை

காணும் போாற்றலுடையார் அவரென்பது அவருடைய முதற் சூத்திரவிருத்தியினாலேயே தெளிவாக விளங்கும். ஆகவே வடநூற்கடலும் தென்தமிழ்க்கடலும் நிலைகண்டுணர்ந்து சித்தாந்த மாபாடியமும், இலக்கணப் பேருரையும், இயற்றிய தனி மாண்பு படைத்தவர் ஆசிரியர் சிவஞான யோகிகளே யாதலின், அவரைப் பாடியமுதல்வரென்று வழங்குதல் மிகையாகாது. தெளிவுந் திட்பமும் உடைய செய்யுள் இயற்றுவதிலும், சிறந்த உரைநடையாள்வதிலும், இவர் இணையற்றவர். பிற்காலத்துப் பெரும்புலவர் யாவரும் இவர் உரைநடையைப் பெரும்பான்மையுந் தழுவியே செவ்விய செந்தமிழ் வாசக நூல்கள் வகுத்தனர். செந்தமிழிலே உரைநடை கைவந்தவர்களுள் தலைசிறந்தவர் இவரே; உரைத்தலைவரும் இவரே. ஆதலின், இவரை உரை மன்னரென்னலாம். கரிசற்ற கல்வியிலும் மாசற்ற சிவஞான ஒழுக்கத்திலும் இறையடிப் பேரன்பிலும் தகைசான்ற இப் பெருந்தகையார் தமிழ்ச் சைவ நன்மக்களுக்குக் குலதெய்வ மெனப்படுதற் குரியவராதலின்; இவரது வரலாற்றினையும் நூற்கருத்துக்களையும் ஆராய்தல் நமக்கு ஒருதலையாய கடமையாகும்.

திருவாவடுதுறை ஆதீன மாபெருந் தலைவராகிய உயர் திரு. சுப்பிரமணிய தேசிகர் காலத்தில் திகழ்ந்த குமாரசாமித் தம்பிரானவர்கள் வேண்டுகோட்கிணங்கி அவ்வாதீனப் பெரும்புலவராய திரிசிரபுரம், திருவாளர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சிவஞான சுவாமிகள் சரித்திரம் பாடத்தொடங்கி நூற்றிருபது பாட்டுக்கள் இயற்றினர். சரித்திரத்தை அவர்கள் முற்றுவிப்பதற்குரிய பேறு நமக்குக் கிடைத்திலது. அவர்கள் பாடிய பகுதி துறைசையாதீன பரம்பரை வரலாற்றுடன் முடிகின்றது.

## க. சிவஞான முனிவர் வரலாறு

திரிசிரபுரம், திருவாளர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயம்பிய சிவஞான சுவாமிகள் சரித்திரப் பகுதியைத்தழுவி முனிவர் வரலாறு தொடங்கற்பாலது. தண்டமிழ்ப் பெருமுனிவராய அகத்தியர் வீற்றிருக்கும் பொதியின் மலைச்சாரலிலே பொருநைநதி மலைநின்று சமநிலத்திழியும் இடத்தே பாவநாசத் திருப்பதியுள்ளது. அதற்கணித்தாய விக்கிரமசிங்கபுரமென்று வழங்குஞ் சிங்கைப் பதிக்கண்ணே பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே ஆனந்தக் கூத்தரென்னும் அருமைப் பெரியார்க்கும் மயிலம்மை யென்னும் மாதிற்கும் அகத்தியர் வரத்தாற் பெறலரும் புதல்வராய்த் தோன்றிய முனிவர் முக்களாலிங்கரென்னுந் திருப்பெயர் பூண்டு விளங்கினர். தென்மொழிக்கும் வடமொழிக்குந் திலகமெனச் சிறந்த அண்ணல் ஒருவர் புலவரது வீரசிங்கமென உதிப்பாரென்றும், சிவனடிப் பேரன்பராய அவருடைய திருவடிகளை நினைவாரது பாவம் நாசமாம் என்றும் அறிவுறுத்துங் குறிப்பால் அவர் தோன்றிய திருப்பதி விக்கிரமசிங்கபுரமெனவும், பாவநாசமெனவும், பெயர் பெற்றிலங்கியதுபோலும். முனிவர் பிள்ளைமைப் பருவத்தே இருகையையும் ஊன்றி ஒரு தாள் மடக்கி ஒரு தாள்எடுத்துத் தலையசைத்தாடிய செங்கீரை சைவ சித்தாந்த சமயம் ஒழிந்த பிறசமயங்களை யாம் கொள்ளேமென்று மறுத்தது போன்றிருந்தது. முனிவர் சப்பாணி கொட்டுவது சிவசமவாத சமயத்தாரும் பிறரும் சித்தாந்த சாத்திர உண்மைப் பொருளுணராது முரணுரையெழுதுவதைப் பார்த்து நகையாடிக் கைகொட்டுவது போன்றது. சித்த நிலை திரியாதார்க்கு முத்திக்கு வழி காட்டுவார், பெற்றாரும் உற்றாரும் முத்திமகிழ்வடையச் செய்தார். வருகைப் பருவங் குறிப்பார்,

> "வருக கதிர்மணி விளக்கே வருக குலபூடணமே
> வருக இருளறு சுடரே வருக விளங்கு அருமருந்தே
> வருக முழுமலப் பகையே வருக கருணைக் கடலே
> வருக வருகென அழைப்ப வந்துவப் புச்செய் குவரே."

என்றார். அம்புலியை முனிவருடன் விளையாட வரவழைக்குஞ் செவிலியார் 'மதியுடைய புதல்வருடனே மதியே! நீ ஆடவா, வந்தால் உனக்குக் கலைக்குறைவில்லை, வாராயாயின் முனிவர் வெஞ்சொற் பெற்றுத் துயருறுவாய், ஆதலின் விரைவில் ஓடிவா அம்புலியே' என்றார். முனிவர் சிறுதேருருட்டுதல், இந்திரியமென்னுந் தேரை அரனடியார் உருட்டப் பழகுதல் போன்றது. முனிவர் உரிய பருவத்தே கல்வி தொடங்கப் பெற்றுப் பாடங்களை ஒருமுறை கற்றாலும் மறவாத நினைவாற்றலுடன், நுண்ணிய பேரறிவும் உடையராய்த் திகழ்ந்தனர்.

## அடியார்க்கு அளித்த நல்விருந்து

சின்னாட் கழிந்தபின், பாவநாசத் திருப்பதிக்குத் திருவாவடுதுறை ஆதீனத் தம்பிரான்மார்களிற் சிலர், திருப்பதிகள் தொழுவான் புறப்பட்டு வந்தடைந்தனர். அவர்களை வீதியிற் கண்ட மைந்தர், விரைந்து சென்று வணங்கி அவர்களைத் தமது வீட்டிற்கு எழுந்தருளித் திருவமுது கொள்ளும்படி வேண்டினர். அவர்கள் அவரது அன்பினைக் கண்டு வியப்புற்று, அவருடைய வீட்டிற்குச் சென்று இருக்கையில் அமர்ந்தனர். அருமைப் புதல்வர் அவர்கள் வரவினைத் தமது அன்னையார்க்கு உணர்த்தவே, விருந்தோம்புதலில் தலைசிறந்த அந்நங்கையார் சிவனடியார்களுக்குச் செவ்விய திருஅமுது சமைத்துப் படைத்தனர். அடியாரெல்லாரும், பெருமகிழ்வுடன் உண்டு விடைபெற்றுச் சென்று ஒரு திருமடத்தே தங்கினர்.

அடியார்கள் வந்தபோது, தம் தந்தையார் வெளியே சென்றிருந்தமையால், அவர் திரும்பி வந்தவுடன், முக்களாலிங்கர் அன்னையின் வண்மையை அழகிய ஒரு திருவெண்பாட்டினால் அறிவுறுத்தினர்.

"அருந்ததிஎன் அம்மை அடியவர்கட் கென்றுந்
திருந்த அமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெய்யும்
மானந் தவாத மயில்.

இதனைக் கேட்டு மகிழ்ந்த தந்தையார், திருவாவடு துறைத் தம்பிரான்மார் வைகுந் திருமடத்திற்குப் புதல்வருடன் சென்று அவர்களை வணங்கினர். அப் பெரியார் அவருடைய அருமைப் புதல்வரின் நற்கல்வியையும், கூர்த்த அறிவினையும், சிவனடியார் பத்தியையும், போற்றிப் புகழ்ந்தனர். முக்களாலிங்கர் துறைசையின் பெருமையை அவர்கள்பாற் கேட்டுணர்ந்து, தாமும் உலக நிலையாமை உணர்ச்சியுற்றுத், துறவு பூண்டு ஞான ஒழுக்கத்தினை மேற்கொள்ளப் பெரு விழைவினராய்த் தம் தந்தைபால் விடை பெற்றுக் கொண்டு, தம்பிரான்மார்களுடன், துறைசைக்குச் செல்லக் கருதினர். பெறலரும் பிள்ளையைப் பிரிவதற்கு ஆற்றுர் எனினும், அவர் உயரிய நோக்கத்தை மாற்ற ஆற்றல் இலராய், அவர் கருத்திற் கொருவாறு இணங்கி, அவரைத் தம்பிரான்கள்பால் ஒப்புவித்து வீட்டிற்கு ஏகினர்.

## முனிவர் கல்விப் பயிற்சி

முக்களாலிங்கர், தம்பிரான்மாரோடு தமது ஊரினை நீங்கி, வழியிலுள்ள திருப்பதிகளை வணங்கிக் கொண்டு, திருவாவடுதுறை அடைந்தனர். அவண், ஆதீன முதல்வராய நமச்சிவாய தேசிகர் திருமுன் எய்தித் திருவருள் நோக்கம் பெற்றனர். ஆதீனத்திலே, அக்காலத்தில் சின்னப்பட்டத்தில் எழுந்தருளி யிருந்தபின் வேலப்ப தேசிகரை வணங்கி அவர் திருவுள்ளம் உவப்பக் கல்வி கேள்விகளிற் சிறந்திருக்கும் நாளில் அப்பெருந்தகையாரால், சிவதீக்கையும், துறவு நிலையும் நல்கப் பெற்றுச் சிவ யோகப் பெற்றியொடு திகழ்ந்தனர். ஆதலின் தம் தேசிகரால், ‘சிவஞானயோகி’ யென்ற சிறப்பு நாமஞ் சூட்டப் பெற்றனர். பின்னர், சிவஞான முனிவர் தொண்டை நாட்டுத் திருப்பதிகளை வணங்குவான் போந்து, ஆங்குள்ள சான்றோராற் பெரிதும் பாராட்டப் பெற்றனர். மணலிச் சின்னையா முதலியாரென்ற பெருஞ்செல்வர் சுவாமிகளுடைய வடமொழிப் பயிற்சிக்குரிய உதவி புரிந்தனர் என்ப. அவர் வடமொழி வல்லுநரைக் கூவி, முனிவர்க்கு வைதிக

நூல்களைக் கற்பிப்பான் வேண்டியகாலை சாதி வேற்றுமை கருதி, அன்னோர் அது செய்ய மறுத்தன ரெனவும், கடவுள் திருவுள்ளம் அறியச் சீட்டிட்டுத் துணிக வென வள்ளல் கட்டளையிட்ட காலை அந்நூல்களைக் கற்பித்தல் கூடாதென் றெழுதிய சீட்டு நூறும், கற்பித்தல் கூடுமென்றெழுதிய சீட்டு ஒன்றும் இட்டு, முனிவர்க்கு நலம் பயக்குஞ் சீட்டே வரப்பெற்றெனரென்வும் ஒரு ஐதிக வரலாறு வழங்கு கின்றது.

பின்னர், வேதம், வேதாந்தம், மீமாஞ்சை, தர்க்கம், வியாகரண முதலிய நூல்களெல்லாம் சுவாமிகள் எளிதாகக் கற்றுணர்ந்தனர். வைதிகப் பக்கத்தினர் அறியாத சிவாக மங்களையும் ஓதியுணர்ந்தனர். கல்வி கற்பதிலும் இறைவனை மெய்யன்போடு வழிபடுவதிலும், தம்மையடைந்த மாண வர்க்குக் கல்வி கற்பிப்பதிலும், பல்வகைத்தாய உயரிய நன்னூல்கள் இயற்றி மக்கட்கு உண்மை அறிவுச் சுடர் கொளுத்துவதிலும் முனிவர் தமது பொழுதினைப் பயன் படுத்தினர். தொண்டை நாட்டிலே சென்னையிலும், காஞ்சி புரத்திலும், குளத்தூர், இளங்காடு, தொட்டிக்கலைசை முதலிய சிற்றூர்களிலும், துறைசையிலும் சுவாமிகள் தங்கி யிருந்ததாக அறிகின்றோம்.

## பரிசிற் பாட்டும் பொருளும்

ஒருகால், திருப்பாதிரிப்புலியூருக்குச் சென்றபோது, ஆண்டிருந்த ஒரு வள்ளல், "கரை யேறவிட்ட முதல்வா வுன்னையன்றியுமோர் கதியுண்டாமோ?" என்ற ஈற்றடியை அமைத்து ஒரு செய்யுளியற்ற வல்லார்க்கு நூறு பொன் கொண்ட கிழி யொன்று பரிசளிப்பதாகக் கூறினமை தெரிந்தார். வறியனொருவன் முனிவர்பாற் சென்று, தனக்கு அத்தகைய கவி பாடிக் கொடுக்கும்படி வேண் டினன். அருள் நிரம்பிய சுவாமிகள் அவ்வாறே ஓர் அழகிய செய்யுளியற்றிக் கொடுத்தருளினர். அந்த இரவலன் அதனை வள்ளலுக்குக் காட்டிப் பொற்கிழி பெற்று வறுமை தீர்ந்து வாழ்ந்தனன், அச் செய்யுள் வருமாறு:

"வரையேல் தவிட்டமுதஞ் சேந்தனிட
வருந்தினைவல் லினம்என் றாலும்
உரையேற விட்டமுதல் ஆகுமோ
எனைச்சித்தென் றுரைக்கின் என்னும்
நரையேற விட்டமுதல் நாளவனுக்
கொண்டுநறும் புலிசை மேவுங்
கரையேற விட்டமுதல் வாஉன்னை யன்றியும் ஓர்
கதியுண் டாமோ.

என்பதில் முதல் மூன்றடி பதப்பிரிவு.

"வரையேல் தவிட்டு அமுதம் சேந்தன் இட அருந் தினை. வல் இனம் என்றாலும், உரையே 'ற' இட்ட முதல் ஆகுமோ? எனைச்சித்து என்று உரைக்கின் என் ஆம், நரை ஏறு அவிட்ட முதல்நாளவன் ஆக்கொண்டு நறும் புலிசை மேவும்," என்பதே.

பாட்டின் பொருள்:— சேந்தனுர் பேரன்போடு படைத்த களியமுதினை வேண்டாமென்று நீக்காது ஏற்று உண்டனை! ற ட வென்ற மெய்கள், வல்லினம் என்ற பகுப் பைச் சார்ந்தாலும், மொழிக்கு முதலில் வரக்கூடுமோ? கூடாது. அதுபோல உயிராகிய என்னை அறிவுப் பொருள் என்று கூறுவதால் யாது பயன்? அவிட்டத்திற்கு முற்பட்ட நாளாகிய திருவோணத்திற்குரிய திருமாலை வெள்ளைவிடை யாகக் கொண்டு, நல்ல திருப்பாதிரிப்புலியூரில் வதிந்து, அப்பர்பெருமானைக் கரையேற்றுவித்த முதல்வனே எனக்கு நின்னையன்றிக் கதியுண்டோ? (எ—று.)

முனிவர் சென்னையில் வதிந்த காலையிலே வடமொழிப் பயிற்சி நிரம்பப் பெற்றார் போலும். ஆண்டே அவரைப் போற்றிய முதலியார் பெருந்தகையின் குடும்பம், இன்றுஞ் சீருஞ் சிறப்பும் பெற்றுத் திகழ்கின்றது.

சிவ தத்துவ விவேகத்தினை முனிவர் தமிழிலே அழ காகச் செய்துதவிய காலமும் அதுவே. இந்நூல் உப நிடதங்களின் உட்கோளும், இதிகாசங்களின் கருத்தும், சிவபரத்துவமே என்பதை நிலைநாட்டுவது.

## இயற்றி அருளிய நூல்கள்

அரதத்த சிவாசாரியர் என்பார் விண்டு சமயத்தினின்று, சைவத்திற்கு வந்த பெரியார். அவர் இயற்றிய ஐந்து சுலோகங்களை முனிவர் ஒரு அகவலாக மொழிபெயர்த்தருளினர். அதுவும் சிவ பரத்துவம் நாட்டுவதே. சுவாமிகள் இயற்றிய தர்க்கசங்கிரகம், அன்னம்பட்டீயம் என்னும் இரு நூல்களும், வடமொழித் தருக்க முறைகளையும், விதிகளையும் தமிழ்வாணர்க்குச் செவ்விதின் அறிவுறுத்துவன. குளத்தூரென்னும் பாக்கத்தில் ஆசிரியர் வைகிய போது, சோமேசர் முதுமொழிவெண்பா என்ற அரிய நூல் இயற்றப்பெற்றது. அது திருவள்ளுவர் திருக்குறளின் ஒவ்வொரு அதிகாரத்திலும், ஒவ்வொரு பாட்டினைத் தெரிந்தெடுத்து அதனை இறுதியிலும், அதன் பொருளை இனிது விளக்குங் கதையை; முதலிலும் அமைத்து யாத்த செய்யுள் நூற்றுமுப்பத்து மூன்று கொண்டுள்ளது. இவ்வமைப்பு நீதிநூல் கற்பார்க்குப் பெரிதும் பயன் தருவது. இம்முறையாக, இயற்றப்பட்ட நூல்களுள் முதன்மையுந் தலைமையும் உடையது இம் முதுமொழி வெண்பா ஆகும்.

குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி என்பது அரிய நுண்பொருளைத் தெள்ளிய நடையில் தெரிக்குஞ் செவ்விய செய்யுட்கள் அமையப் பெற்றது. அவ்வூர்ப் பெருமானை அந்தாதியாற் பாடிய ஆசிரியர் அப் பதி அம்பிகைமீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடி வழுத்தினர். தொட்டிக் கலைசையிலே சுவாமிகள் தங்கியகாலை, 'கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்', என்னும் அழகிய துதிநூல்களை உலகிற் கீந்தனர். கலைசையந்தாதி போன்ற மற்றொரு நூல் 'இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி யென்பது. மூன்று பதிற்றுப் பத்தந்தாதிகளும் திருவாசகம் போலக் கற்பார்க்கு எளிதாய் விளங்குவது. அவை இறைவன்பாற் பேரன்பினை வளர்க்கும் பான்மையன. முனிவர் திருமுல்லைவாயிற் பொருமான்மீது பாடிய அந்தாதியானது திரிபு என்னும் சொல்லணி அமையப் பெற்றுப் புலவர்க்கு விருந்தாய் விளங்குவது. அத்தகைய நூல்

பிறிதொன்றுளது. அது மடக்கணி யமைத்துப் பாடிய திரு ஏகம்பர் அந்தாதி யென்பது. காஞ்சியிற் பாடிய 'ஆனந்த ருத்திரேசுரர் பதிகமும்,' திருவேகம்பர் ஆனந்தக் களிப்பும் எளிய இனிய சொல் நடையுடையன. கச்சிப்பதியின் கண்ணே, முனிவர்பிரான் செங்குந்தமரபினரால் பெரிதும் வழிபடப்பட்டனரென்ப. அவர் ஆய்ந்த நூற்கோவை சரவணபத்தர் என்பாரிடமிருந்து, பின் சிதைவுற்றன என்ப.

காஞ்சிப்புராண முதற் காண்டம் ஆசிரியர் சிவஞான யோகிகளாலும், பிற்காண்டம் அவர் முதல் மாணவராய கச்சியப்ப முனிவராலும், பாடப்பெற்றன. காஞ்சிப் புராணத்துள், திருவேகம்பர் துதிக்குமுன், கூத்தப் பெருமான் வாழ்த்தினை யமைத்திருப்பது முறையன்றென்று வாதித்த காஞ்சிப் புலவர்களுக்குக் கச்சியப்ப முனிவர் தக்க விடையளித்து வாயடக்கினர். அவ்வூர் ஓதுவாரைக் கச்சித் தேவாரம் பாடும்படி ஏவி அவர்கள் "திருச்சிற்றம்பலம்" என்று தொடங்கியவுடன் அவர்களைத் தடுத்துக் காஞ்சித் தேவாரத்திற் கேற்றவாறு (பிருதிவியம்பலம்) என்று தொடங்குமாறு கச்சியப்பர் பணித்தவுடன், புலவரெல்லாம் வெட்கமுற்றுத் தாம் செய்தது தவறென்று உணர்ந்தனர். சிறுகாஞ்சியிலுள்ள வைணவப் பாவாணரெல்லாம், 'கம்பராமாயணம் ஒன்றே குற்றமற்ற நற்றமிழ்க் காப்பியம், ஏனையன குற்றமுடையன' வென்று கூறித் தருக்கினர். அவர்கள் செருக்கை அவித்தற் பொருட்டுக் கம்பராமாயணக் காப்புச் செய்யுளாய 'நாடிய பொருள் கைகூடும்' என்ற திருப்பாட்டிற்குப் பலப்பல குற்றங்கூறி அவற்றைப் பரிகரிக்குமாறு அவர்களை வினவியபோது அன்னோர் விடையளிக்க ஏலாது திகைத்து ஆசிரியரை இறைஞ்சி அவர்தாமே விடையளிக்க வேண்டும் என்றனர். பின்னர் அடிகள் தாம் கூறிய தடைகட்கு விடையளித்துதவினர். அத் தடைகளும், விடைகளும் கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி என்ற சிறுநூலுள் தொகுக்கப்பட்டுள்ளன. அவர்கள் பொருள் கொள்ள இயலாதென்று கருதி விடுத்த 'அங்கோழி

மூட்டை' என்ற பாட்டிற்கும், பிறிதொன்றிற்கும் பொருள் கூறிப் பிந்திய பாட்டிலுள்ள இழி வழக்குச் சொற்களையுங் காட்டினர்.

முனிவர் தென்னாடு சென்றகாலை செப்பறை அகிலாண்டேசுவரி பதிகம் பாடினர் போலும். திருநெல்வேலியில் இலக்கணப் பெரும் புலவராய்த் திகழ்ந்த சங்கரநமச்சிவாயரது நன்னூல் விருத்தியை ஆசிரியர் திருத்தியமைத்த காலமும் இஃதேபோலும். பஞ்சாக்கரமாலை, திருத்தொண்டர் திருநாமக்கோவை என்பன திருவாவடுதுறையில் இயற்றப்பட்டிருத்தல் கூடும். மார்கழி மாதத் திருவாதிரைத் திருவிழாப் பத்து நாளும் திருவெம்பாவை மாத்திரம் ஓதும் வழக்கத்தை மேற்கொள்வார், திருத்தொண்டத் தொகையினை அக்காலத்திலே ஓதாராகலின், தொண்டர் நாமங்களை அன்னோர் அக்காலத்திலும் பாராயணஞ் செய்யும் பொருட்டுத் திருத்தொண்டர் திருநாமக் கோவை பாடப் பெற்றதென்ப.

கண்டன நூல்கள் பல முனிவரால் இயற்றப்பெற்றுள்ளன. திருவாரூர் வைத்தியநாத நாவலரியற்றிய இலக்கண விளக்கம், என்னும் நூலின்கண் உள்ள குற்றங்களைச் சுட்டும் பொருட்டு 'இலக்கண விளக்கச்சூறாவளி' என்ற நுண்ணிய நூல் இயற்றப்பட்டது. திருவண்ணாமலை மடத்து ஞானப்பிரகாசர் சிவஞான சித்தியாருரை, சிவசமவாதச் சார்பாயிருந்தமையால் அதற்கு ஒரு மறுப்பும், 'என்னையிப் பவத்திற் சேராவகை,' என்னுஞ் செய்யுளுக்கு வரைந்த சிவசமவாதவுரை மறுப்பும், அச் செய்யுளுட்போந்த 'எடுத்து' என்ற சொல்லிற் கிட்ட வைரக் குப்பாயம், என்ற மறுப்பு நூலும், எழுதப்பட்டன. துறைசையாதீனத்தார், எழுதிய மரபட்டவணை என்ற நூலிற்குத் தருமபுரத்தார் ஒருவர் மறுப்பொன்றெழுதினர். அம் மறுப்பின் மறுப்பாக முனிவர் இயற்றிய நூல், சித்தாந்த மரபுகண்டனகண்டனம் என்பது. சித்தாந்தச் சார்பாக ஆசிரியர் சிவஞான யோகிகள் இயற்றிய உரைநடைநூல் சித்தாந்தப் பிரகாசிகை என்பது. இதற்கு மூலம் வடமொழியிலே சர்வாத்தும

சம்புசிவாசாரியாரரால்யற்றப் பெற்ற 'சித்தாந்தப் பிரகாசிகை' என்ப. சிவஞானசித்தியார் சுபக்கப் பொழிப்புரையும் உரைக்கு எடுத்துக் காட்டாய் இலங்குவதே.

ஆசிரியர் சிவஞான யோகிகள் இரு பெருநூற்குப் பேருரை வகுக்கக் கருதினர்.

> " எழுத்தறியத் தீரும் இழிதகமை தீர்ந்தோன்
> மொழித்திறத்தின் முட்டறுப்பானாகும் - மொழித்திறத்தின்
> முட்டறுத்த நல்லோன் முதற்நூற் பொருளுணர்ந்து
> கட்டறுத்து வீடு பெறும் "

என்றமையால் மொழித்திறத்தின் முட்டறுத்தற் பொருட்டுத் தொல்காப்பியமாகிய இலக்கண நூலிற்கு விருத்தியுரை எழுதுவான் புகுந்து பாயிரத்திற்கும், முதற் சூத்திரத்திற்குமே அகலம் எழுதி முடித்தனர். பிறவற்றிற்கு எழுதுவதன் முன்முதல் நூலாகிய சிவஞான போதப் பொருள் விரிப்பக் கருதி அதனையே முற்றிலும் எழுதி முடித்துப் பெரும்பயன் விளைத்தனர். வீட்டு நூலாகிய இதன்கண் கருத்தூன்றப் பெற்றபின் கருவி நூலின்கண் அது செல்லாமையின், தொல்காப்பியத்துக்கு முழுப்பேருரை எழுதும் பேறுயாம் பெற்றிலம். சுவாமிகள் எழுதிய நூல்கள் இருபத்தெட்டு. சிவாகமமும் இருபத்தெட்டே. புறச்சமயச் சார்பாய கம்பராமாயண முதற் சூத்திரத் தடைவிடை சேர்த்து அவர்கள் நூல்கள் இருபத்தொன்பதாம்.

## காலம்

ஆசிரியர் சிவத்தோடு கலந்த காலம் சாலிவாகன சகாப்தம் 1708-ல் விசுவாவசு ஆண்டிலே சித்திரைத் திங்கள் எட்டாம் நாள் ஆதிவாரம் ஆயிலிய நாளாகும். அவர் தம் ஆதீனத் தலைவராய ஞானாசாரியரையும் இறைவனையும் பேதமற எண்ணிய பெருநன்றி உடையாரென்பது அவர் வீடெய்துங்காலம் நெருங்கியதை அறிந்த ஆதீனத்தலைவர் துயருற்றபோது, அவரை நோக்கி, யோகிகள், தேவரீர் திருவடியின்பாலே சேர்வேனாதலிற் கவலை யொழிய வேண்டும் என்று மொழிந்து அவரைத் தேற்றினமையால் தெளியப்படும். சாலிவாகன சகாப்தம் 1708-க்கு ஈடான

ஆங்கில ஆண்டு 1785-வது ஆண்டாகும். முனிவர் செங் கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் பாடிய ஆண்டு அந்நூல் முகத்துள் ஒரு பாட்டிற் குறிக்கப்பட்டுள்ளது." இலகுசக மீரெட்டு நூற்று நாற்பத்தேழினிற் காங்கும்ப மிருபத் தேழ் இரேவதி வெள்ளி பூர்வபக்கத்துதியை யேர்க்கவுலவ" என்ற அடிகள் கருதத் தக்கன. இதனால் சாலிவாகன சகாப்தம் 1694-ஆண்டு கரவருடம் மாசிமீ 27உ என்று தெரிவதால், கி. பி. 1772-ஆம் ஆண்டிலே அது இயற்றப் பட்டதாகும். அதற்கு முன் எத்துணை காலம் முனிவர் நிலவுலகத்தே வதிந்தனரென்பது அறியக்கூடவில்லை. சிலர் அவர் வயது முப்பத்திரண்டு எனவும், சிலர் அதனி னும் மிகுதிப்பட்டதென்றுங் கூறுவார். முனிவர் குமர குருபரனுர்க்கும், தாயுமானவர்க்கும், பிற்பட்டவரென்பது அவர்கள் இருவர் நூலினின்றும் அவர் காட்டிய மேற் கோளால் தெளிக. சித்தாந்த மரபுகண்டன கண்டனத்துள் 'பாலுண்குழவி பசுங்குடர் பொறுதென நோயுண் மருந்து தாயுண்டாங்கு' என்பது எடுத்தோதி இது தருமையில் வழங்கும் அகவலின்கண் உள்ளதென்றூர். இது குமரகுரு பரனுரது சிதம்பர மும்மணிக்கோவை முதற் செய்யுட்கண் போந்தது. தாயுமானுர், "விரும்புஞ் சரியை முதல் மெய்ஞ் ஞான நான்கும் அரும்பு, மலர், காய், கனிபோலன்றே பராபரமே" என்றனர். ஆசிரியர், சிவஞானயோகிகள், சிவஞானபோத எட்டாம் சூத்திர உரையுள் "அரும்பு, மலர், காய், கனி" யாதல் போல, என்றமை காண்க.

## மாணவர்கள் வாழ்த்து

ஆசிரியர் அகத்தியனுர்க்குப் பன்னிரு மாணவர் இருந் தமை போல ஆசிரியர் சிவஞான யோகிகட்கும் மாணுக்கர் பன்னிருவர் இருந்தனர். அவர்களுள் கச்சியப்பமுனிவர் தலை வர். அவர் தணிகைப் புராணம், விநாயக புராணம் முதலிய புராணங்களுஞ் சிறு காப்பியங்களும் இயற்றிய பெரும் பாவலர். தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர், சுவாமி கள்மீது உருக்கமான பாமாலை புனைந்துள்ளார். சுவாமி

களது கருணைத் திருவுருவத்தைப் பற்றி அவர் செப்பிய பாட்டொன்று வருமாறு:—

"திண்ண இன்பச் சேவடியும் திருவிழியும்
திருமார்பும் செல்வக் கையும்
எண்ணும்அன்பர்க் கருள்கருணைத்
திருமுகமும் பசுங்குழவி நடையே ஆகிப்
புண்ணியத்தின் பொலிவாகி அற்புதக்கோ
லக் கொழுந்தாய்ப் புலோ யேற்குக்
கண்ணைவிட்டு நீங்காத சிவஞான
சற்குருவே கருணை வாழ்வே."

பிறமாணாக்கர்களாவர், இலக்கணம் சிதம்பரநாத முனிவர், காஞ்சிபுரம் சரவண பத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை முதலியோர். மதுரையிலே நான்காவது தமிழ்ச் சங்கம் நிறுவிய பாண்டித்துரைத் தேவர் சுவாமிகள்மீது அளவற்ற பேரன்புடையவர். அவர் சுவாமிகளைப் புகழ்ந்து பாடிய ஒரு சிறு நூல் மிக அழகான பாக்கள் செறிந்தது. ஒரு பாட்டு வருமாறு:—

"கலைதேர் நமச்சி வாயகுரு
கருணைக் கடலில் திளைத்தாடிக்
கலகப் பாசத் தொடர்அறுத்துக்
காமத் தறியை யறவீழ்த்தி
அலையுஞ் சமய தருக்களைக்கீழ்
அடிவேரோடே அகழ்ந்தெறிந்திட்(டு)
அருளின் படாத்தை முகமேற்கொண்
டாதி வேதா கமங்கள்எனும்
தொலையா மணிகள் இருமருங்குந்
தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்கம் உடனே உலகமுற்றுஞ்
சுற்றும் வெற்றி வாரணமே
மலையா தருளும் முனிவர்சிகா
மணியே வருக வருகவே
வளமார் துறசைச் சிவஞான
வள்ளால் வருக வருகவே."

---

# உ. வரலாற்று ஆராய்ச்சி

ஆசிரியர் சிவஞான முனிவர், கி. பி. பதினெட்டாவது நூற்றாண்டிலே சிறந்து விளங்கிய பெரியார். அவர் குடும்பத்திலே அகத்தியர் வழிபாடு சிறப்பாக நிலவிற்றென்றும், ஏழு தலைமுறைகளிலே சிறந்த புலவர்கள் பிறப்பார்களென்ற ஒரு முன்னுரைக் கிணங்க அதன்கண் ஆறு தலைமுறைகளிலே வேறு புலவர்களும், ஏழாவது தலைமுறையிலே நமது பூாடியமுதல்வரும் தோன்றினாரெனவுங் கூறுப. மிக்க இளமைப் பருவத்திலே அடியார்களை முனிவர் வரவேற்றமை, அவர் மரபிலுள்ள நற்பழக்கத்தைக் குறிப்பதாகும். தந்தை, தாயார் நற்பழக்கங்களே மைந்தற்கு எளிதில் வரக்கூடியன. முற்றவத்தாலும், அவை வருவனவே; பெற்றோர் சிவனடியார்மாட்டு வைத்த பேரன்பாற் பலகாலும், பாவநாசத் திருப்பதிக்கெய்துந் துறவிகட்கு அன்னம் இடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்பது தெளிவு. அடியாரை அழைத்துச் சென்றகாலை அன்னையார் யாதுங் தடை கூறாது தமது கணவன் இல்லத்தில் இல்லாதபோதிலும், விரைவிலே உணவு சமைத்து அவர்கட்குப் படைத்தமையால் அது தெளியப்படும். தந்தையார் புறத்து நின்று வீட்டிற்கு ஏகியபோது அடியார் திருவமுது அருந்தியதுகேட்டு மகிழ்ந்து, அன்னோரைக் கண்டு தொழுவான் திருமடம் எய்தினமையாலும் அது வலியுறும். முனிவர் தம் இளம்பிராயத்திலே அழகிய வெண்பாப் பாடும் ஆற்றல் வாய்ந்திருந்தமை, ‘விளையும் பயிர் முளையிலே தெரியும்’ என்ற பழமொழிப் பொருளை இனிது விளக்குவதாகும். அக்காலத்தே ஆதீனங்களைச் சார்ந்த துறவிகள் நல்லொழுக்கத்திற் சிறந்து, இல்லறத்தாரால் பெரிதும் நன்கு மதிக்கப்பட்டமையாலன்றோ ஆனந்தக் கூத்தர் தம் அருமைப் புதல்வரைத் தமதூர்க்கு வந்த சிவனடியார்பால் ஒப்புவிக்கப் பின்வாங்காதிருந்தனர். புதல்வராய முனிவரது துறவுணர்ச்சியும் அதற்கு ஒரு காரணமே. இக்காலத்திலே அத்தகைய

நன்மதிப்புடைய துறவிகளையும் அப்பெற்றித்தாய நற்றவ விருப்புடைய இளஞ்சிறுரையுங் காண்டலரிது.

## திருவாவடுதுறை ஆதீன பரம்பரை

திருவாவடுதுறை ஆதீனமானது மெய்கண்டாரின் முதல் மாணாக்கர் வழிவந்ததாகும். முனிவர் தலைவராகச் சனற்குமாரர், நந்திபெருமான்பால் தாம் கேட்டவற்றைத் தம் மாணாக்கர்க்கு உரைத்தனர். அம் மாணாக்கரின் மாணாக்கராய பரஞ்சோதிமுனிவர், மெய்கண்டாரின் ஞானாசாரியாராய் விளங்கினர். மெய்கண்டார் திருவெண்ணெய் நல்லூர்ச் சைவ வேளாள குல திலகராய்த் தோன்றினவர். அவருக்கு மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மர். அவர்களுள் முதல்வர் அருள்நந்திசிவாசாரியார் என்பார். இவர் மாணாக்கர் மறைஞானசம்பந்த சிவாசாரியார். இவர் மாணாக்கர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார். இவர் மாணாக்கர் பலருள்ளும் சிறந்தவர் அருள்நமச்சிவாய தேசிகர்.

அவர் திருவாவடுதுறையிலே சித்தராய் விளங்கிய சித்தர் சிவப்பிரகாசருக்கு ஞானோபதேசஞ் செய்தனர். சித்தர் சிவப்பிரகாசர் துறைசை ஆதீன முதல்வராய நமச்சிவாய தேசிகருக்கு ஞானோபதேசஞ் செய்தனர். அவர் சிவப்பிரகாசருக்கு ஞானவதி முறைப்படி ஞானதீக்கை செய்து சைவசித்தாந்த நூல்களை அறிவுறுத்தினர். அவர் சிதம்பரஞ்சென்று தில்லைப்பெருமான் வழிபாட்டிற் கேற்பட்ட இடையூறுகளை ஒழித்துத் தாம் நிட்டையில் அமர்ந்தனர். பின்பு நமச்சிவாய மூர்த்திகள் ஆதீன பரம்பரை நிலைத்தற்பொருட்டு மறைஞான தேசிகர் என்பார்க்கு உண்மையுணர்த்த அவர் இடையறா நிட்டையில் அமர்ந்தனர். பின்னர் அவர் அம்பலவாண தேசிகருக்கும் தட்சிணா மூர்த்தி தேசிகருக்கும் ஞானோபதேசம் புரிந்தனர். பட்டத்திலிருந்த தட்சிணாமூர்த்தி தேசிகரவர்கள், தசகாரியம், உபதேசப் பஃறொடை என்னும் நூல்களை அருளிச் செய்து சிவத்திற் கலந்தனர். அம்பலவாண தேசிகர் பத்து ஞான

நூல்கள் இயற்றினர். அவர்பால் வைணவரொருவர் ஞான தீக்கை பெற்று உலகுடைய நாயனர் என்னும் பெயருடன் விளங்கித் தம் ஆசிரியர்மீது தோத்திரப்பாக்கள் இயற்றினர்.

அம்பலவாண தேசிகர், உருத்திரகோடிதேசிகர் என்பார்க்கு ஞானோபதேசஞ் செய்தனர். அவருக்குப் பின் வேலப்ப தேசிகர், குமாரசாமி தேசிகர், பிற் குமாரசாமி தேசிகர், மாசிலாமணி தேசிகர் என்போர், ஞான பரம்பரையைப் போற்றினர். மாசிலாமணி தேசிகர் காலத்தே திருநெல்வேலியிலே வீற்றிருந்த ஈசான தேசிகர் என்பவர் இலக்கணக் கொத்துரை இயற்றினர். தசகாரிய மொன்றும் இயற்றினர். மாசிலாமணி தேசிகருக்குப் பின் இராமலிங்க தேசிகர், வேலப்ப தேசிகர் என்போர் திகழ்ந்தனர். இவருக்குப் பின் பெரிய பட்டத்திலே பின்வேலப்ப தேசிகர் என்பாரும் சின்னப் பட்டத்திலே அப்பெயரிய பிறிதொருவரும் இருந்தனர். பெரிய பட்டத்திலிருந்தவர், திருப்பெருந்துறையில் அடைந்த பின், சின்னப்பட்டத்திலிருந்தவர் ஆதீனத் தலைவராய்த் திகழ்ந்தனர். அவர் தாம் ஆசிரியர் சிவஞான யோகிகளின் ஞானசாரியர். அவர் பஞ்சாக்கரப் பஃறொடை என்ற நூல் இயற்றினர். அதனுள் ஐந்தெழுத்தருள் நிலையினை இனிது விளக்கினராதலின் அவரைத் துதித்த காஞ்சிப் புராணச் செய்யுளிலே முனிவர் அக்கருத்தை நவின்றனர்.

"எவ்வெவர்கோட் படுபொருளும் அஞ்செழுத்தின்
அடக்கியவற் றியல்பு காட்டி
மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை
ஓதுமுறை விளங்கத் தேற்றி
அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச்
சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப
தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்."

பஞ்சாக்கரப் பஃறொடையுள் பெரிய பின்வேலப்ப தேசிகரைப்பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.

"ஈரொன்று வேலப்ப தேவன்எனப் பேர்கொண்
டறியாமை யானீங்கி யன்புருவ மாகப்
பிறியாதே நிற்கும் பெரிய."

என்றது காண்க.

இதனால், பஞ்சாக்கரப்பஃறொடை பாடிய இரண்டாவது பின்வேலப்ப மூர்த்திகளே, சிவஞான முனிவரின் ஆசிரியரென்பது தெளிவு. திருவாவடுதுறை ஆதீனத்திலே பெரிய பட்டத்திலிருப்போர் நமசிவாயரெனவும், சின்னப்பட்டம் உடையோர் அம்பலவாணர் துணை எனவும் கைச்சாத்திடுதல் வழக்கம். முனிவர் நமசிவாய மூர்த்திகளைப் பஞ்சாக்கரமாலையிலும் பிற இடங்களிலும் மிகுந்த பேரன்போடு துதித்தனர். துறைசை ஆதினத்திலே கல்விகற்று ஞானோபதேசம் பெற்ற பின், யோகிகள் தமது காலத்தின் மிகுதிப் பாகத்தைத் தொண்டை நாட்டிலே கழித்ததாக அறிகின்றோம். மாணவர் பலரும் அவண் வைகிய காரணம் பற்றி அவ்வாறு ஆயதுபோலும். துறைசை ஆதீனம் ஆசிரியர் சிவஞான யோகிகள் காலத்தே மிகுந்த செல்வவளம் உடையதாயிற்றென்ப. பின் வேலப்ப தேசிகருக்குப் பின் (1) திருச்சிற்றம்பல தேசிகர், (2) அம்பலவாண தேசிகர், (3) சுப்பிரமணிய தேசிகர், (4) அம்பலவாண தேசிகர், (5) மேலகரம் சுப்பிரமணிய தேசிகர், (6) அம்பலவாண தேசிகர், (7) சுப்பிரமணிய தேசிகர் என்போர், இப்பொழுதுள்ள பண்டார சன்னதிக்குமுன் ஆதீனத் தலைவர்களாய்த் திகழ்ந்தனர்.

சிவஞான சுவாமிகள் இவ்வுலகை நீத்து இன்றைக்கு நூற்று நாற்பத்து மூன்று ஆண்டுகளாகின்றன. அவர் முதன்மாணுக்கராகிய கச்சியப்ப முனிவர் இயற்றிய தணிகைப் புராணம் தமிழ்ப்புலவரின் புலமையைச் சோதித்ததற்குரிய உயரிய சொல்லமைப்பு உடையது. கச்சியப்ப முனிவர் பாடிய பிற நூல்கள் பல. திருவானைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், பேரூர்ப் புராணம், விநாயக புராணம், காஞ்சிப் புராணப் பிற்பகுதி, சென்னை விநாயகர் பிள்ளைத்

தமிழ், கச்சியானந்தருத்திரேசுரர் வண்டுவிடுதூது, ஆனந்த ருத்திரேசுரர் பதிற்றுப் பத்தந்தாதி, திருத்தணிகைப் பதிற் றுப்பத்தந்தாதி, பஞ்சாக்கர அந்தாதி, திருத்தணிகை ஆற்றுப்படை முதலியன. தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவரும் துறைசைக்கோவை முதலிய பல நூல்கள் இயற்றினர். அவர் இயற்றிய சுப்பிரமணியர் திருவிருத்தம் என்பதை ஒரு குட்ட நோயுடையான் பாடி அந்நோய் நீங்கப் பெற்றானெனவும் அவர்பாடிய திருத்தணிகைத் திரு விருத்தம், ஒருவனுக்குக் குருட்டுத் தன்மையை நீக்கிற்று எனவுங் கூறுப. அவர் பின்வேலப்ப தேசிகருக்கடுத்த திருச்சிற்றம்பல தேசிகர் மீது சிந்து ஒன்று பாடியிருப்ப தாலும், அவர்க்கடுத்த அம்பலவாண தேசிகர் மீது ஆனந் தக் களிப்பு இயற்றி இருப்பதாலும் அவர் நெடுநாள் நில வுலகத்து வதிந்தாரென்று கருத இடமுண்டு. இலக்கணம் சிதம்பரநாத முனிவரென்பவர் திருப்பாதிரிப் புலியூர்ப் புராணம் பாடினர்.

---

## ௩. முனிவரது நூல்களின் சுருக்க ஆராய்ச்சி

### சிவதத்துவ விவேக ஆராய்ச்சி

முனிவர் இயற்றிய சிவதத்துவ விவேகம் வடமொழி யிலே அப்பய தீக்ஷிதரென்ற மகா சைவரால் இயற்றப்பட்ட நூலின் மொழிபெயர்ப்பாகும். முனிவரது மொழி பெயர்ப்புத்திறம் இந்நூலின்கண் இனிது விளங்குகின்றது. இதனுள் வேதபுராணம் இதிகாச மிருதி முதலிய எல்லாம் சிவபெருமானுக்கே கடவுட்டன்மை குறிக்குமென்பது நாட்டப்பட்டது. அண்டந்தோறும் அயன், அரி, அரன் என்பார் வெவ்வேறே உளர். அவர்கள் தலைவராகிய சிவ பெருமான் ஒருவரே என்பது "இறைமை இவ்வாறு பகுத் திடத் தகாதேல்" என்ற செய்யுட்கண் விளக்கப்பட்டது. ஒரு சாரார் அயன், அரி, அரன் மூவரும் ஒத்த தன்மை யுடையவர்களே. ஒரு கற்பத்திலே மூவரில் யாராவது ஒருவர் முன் உதித்து மற்றிருவரையும் தோற்றுவிப்பர் எனவும், மாயன்பால் ஏனை இருவரும் உதித்ததாக மகோப நிடதங் கூறுமெனவும் உரைப்பர். நீ மூவருக்கும் வேறா தலின் அக்கருத்து நின்னைப் பற்றியதன்று. மற்றொரு சாரார் அயன், அரி என்னும் இருவரைப்பார்க்கினும் உருத் திரன், உன்னுடைய வடிவுஞ் செய்கையும் பெற்றுளனா தலின் பெரியோன் என்று கூறுவர். இரு திறத்தார் கூற்றுக்களும் எவ்வாறாயினும் பரம்பொருளாகிய நீயே யாவர்க்கும் மேலாங் கடவுளென்பார்,

"தேவர்மூ வருக்குந் தலைமையொப் புமைதான்
செப்புக அன்றிமற் றிவருள்
மேவரு மேலோன் உருத்திரன் எனத்தான்
விளம்புக எந்தவா றேனுங்
காவல நீயே யாவர்க்குமேலாங்
கடவுளென் பதுபெரு வழக்கே
ஓவறு துலகெலாம் பணிசெய்யு
மொருவநீ யாகிநின் றனையே."

என்றார். மனிதர்களை இந்நூலார் இருகாற் பசுக்கள் என் பார். இறைவன்பால் அன்புண்டாவதற்குத் திருவருள் ஒன்றே வேண்டும் என்பார்,

"உன்திரு அடிக்கீழ் உறுதியா மன்பும்
உன்றிரு வருளினாற் கிடைப்ப
தன்றிநூல் பலவும் ஆய்ந்ததா லுரைசெய்
அளப்பருந் திறமையான் மதியான்
மன்றவே கிடைப்ப தன்றுமற் றதனை
மாதவஞ் செய்திலாக் கயமை
துன்றிய புலையோர் யாங்ஙனம்
பெறுவார் சோதியே கருணைவா ரிதியே."

என்றார். சிவதத்துவ விவேகமுடையார் வடமொழியிற் சைவசமயத்தை நிலைநாட்டுதற் பொருட்டு நூற்றிற்கு மேற் பட்ட நூல்கள் இயற்றினரென்ப. அவர் சிவாத்துவித சைவர். நீலகண்ட பாடியத்திற்குச் சிவார்க்க மணிதீபிகை யென்ற ஓர் விரிவுரை இயற்றியுள்ளா ராதலின், அவ ரைச் சைவசித்தாந்தி யென்று கோடல் தவறு.

அரதத்த சிவாசாரிய ரென்பார் சிவாக்கிய சோழ மன்னன் காலத்திலே தஞ்சாவூர் மாகாணத்திலே கஞ்ச னூரிலே பிறந்தவர். அவர் அரிதத்தராயிருந்து அரதத்த ராயினவர். அவர் ஹரிஹரதாரதம்மியம், சதுர்வேத தாற்பரிய சங்கிரக முதலிய சைவநூல்கள் இயற்றினர். அவர் கொள்கை சைவ சித்தாந்தமே.

## காயத்திரிப் பொருள்

அவர் சிவபரத்துவத்திற்குக் காட்டிய ஏதுக்களுள் பல புராணச்சார்புடையன. பிரம காயத்திரிமந்திரத்திற் குரிய கடவுள் சிவபெருமான் என்பது அவர் கருத்தாத லின் "உயர் காயத்திரிக் குரிப்பொருள்" என்றார். காயத் திரியென்பது வேண்டுகோட்குரிய ஒரு வகையான வாய் பாட்டுச் சொற்றொடர். அது சூரியனைக் குறித்து வேண்டு கோள்செய்யும் மந்திரம் என்று பிராமணர் கருதுகின்றனர்.

அத்தகைய மந்திரம் வடமொழியிற் பல மூர்த்திகளுக்கு அவ்வம் மூர்த்திகள் பெயரால் அமைக்கப்பட்டுள்ளன. அம்மந்திரம் இருபத்து நான்கெழுத்தாலாயது. காயத்திரி யென்று பொதுவாக வழங்கும் மந்திரம், பிரமகாயத் திரி அல்லது சூரிய காயத்திரி என்னப்படும். சதாசிவ காயத்திரி, தட்சிணாமூர்த்தி காயத்திரி, கணபதி காயத்திரி முதலியன பிறபலவும் உண்மை காண்க. பிரம காயத்திரி யில் 'பர்க்க' என்ற சொல் சூரியனையுஞ் சிவபெருமானையுங் காட்டும். அச்சொல் சிவபெருமானுக்குரிய பெயரென்று வடமொழி நிகண்டாசிரியர் கூறுகின்றார். ஆதலின் அதனைச் சிவமந்திரமென்று கொள்ளுதல் தவறாகாது. மந்திரமென்ற சொல் நினைப்பவனைக் காப்பதென்று பொருள்படும். அதற்குப் பொருள்நயம் பற்றிய சிறப்பே யன்றி ஒலிநயம் பற்றிய சிறப்பு யாதொன்றும் புலனாக வில்லை. வடமொழி வேதத்தைப் பெருநூலெனக்கருதும் பிராமணர் காயத்திரியைப் பெரிதாகக் கோடலின், அது சிவபெருமானுக்குரியதென்றால் அன்னோர் சிவபரத்துவம் உணர்ந்துய்வரென்ற கருத்துடன் அரதத்தர் அதனைச் சிவ மந்திரம் என்றார்.

## அரதத்தர் சுலோக விளக்கம்

புராணங்கள், திருமால் முதலியோர் சிவபெருமானை வழிபட்டுப் பயன் பெற்றவர்களென்றும், அவரால் அடக்கி யாளப்பட்டோரென்றுங் கூறுதலின், அவற்றை அரதத்தர் தம் சுலோகங்களிலே விதந்தனர். அவற்றின் உட் கருத்து யாதெனில் வழிபடுவோன் கடவுளாகான், வழி படப்படுவோனே கடவுளாவான் என்பதே. முழு முதற் கடவுள் திருமாலே என்னும் இடத்து, அக்கடவுள் ஒரு முதல்வனை வழிபட்டதாகக் கூறும் புராணக்கதைகளுடன், அக்கருத்து முரணுதலின் அது பொருந்தாதென்பதை எடுத்துக்காட்டினர். பிறப்பு இறப்பில்லாதவனே கடவுள் என்பது சைவநூற் கருத்து. பிருகு முனிவர் சாபத்தால் அரி பத்துப் பிறப்புடையராயினர் எனக்கூறும் இராமா

யணக் கதையும் பிறவும் அக்கருத்தோடு மாறுபடுதலின், கடவுளைத் திருமால் என்ற பெயரால் குறித்தல் தெளிவு அன்மைக்கேதுவாம் ஆதலின் சிவனென்ற சொல்லே முழு முதல் கடவுளைப் புராணத்திலும் பிறநூல்களிலும் குறிக் கும் என்று ஆசிரியர் நிறுவுவாராயினர்.

வேதம் புராணம் முதலிய நூல்களின் சார்பாக எச் சொல் மெய்க்கடவுளைக் குறிக்குமென்று ஆராயுமிடத்தே தான் இத்தகைய வழக்கீடு ஏற்படுகின்றது. அந்நூல்களின் சார்பின்றித் தனியே முழுமுதற்கடவுளை எந்த நற்பெய ராலும் நாம் வழிபடுவதாற் போந்த இழுக்கு யாதும் இல்லை. 'விஷ்ணு', என்றசொல் வியாபகத்தைக் குறிக்கும். எங்கும் நிறைந்த முதல்வனை அச்சொல்லாற் குறிப்பின், அது குற்றம் அன்று. இறைவனது எங்கும்நிற்கும் ஆற்றலையே 'விஷ்ணு' என்று கருதுமிடத்து, அச்சொல் சிவசக்தியைக் குறிக்கும் என்றசைவக்கொள்கையுமுண்டு. சிவாகமத்திலே, சிவசத்தி ஆண்வடிவமாக வழிபடப்படுங்காலை 'விஷ்ணு' என்ற பெயர் பெறுமென்று கூறப்படுதலின், விண்டு வழி பாடு அம்மை வழிபாடென்றே கருத இடமுண்டு. அவ் வாறு கொள்ளின், சைவர்க்கும் வைணவர்க்கும் உள்ள சமயப்பிணக்கு மறைந்தொழியும். பரிபாடலிலே 'பிறவாப் பிறப்பில்லை, பிறப்பித்தோரில்லையே!' என்று திருமாலைக் கூறியதும் இக்கருத்துப் பற்றியே போலும்.

## சோமேசர் முதுமொழி வெண்பா

இனி, ஆசிரியர் சிவஞானயோகிகள் இயற்றிய நீதிநூல் ஒன்றே. அது சோமமேசர் முதுமொழி வெண்பா. அது தலைமையான நீதிநூலாகிய திருக்குறளின் பொருளை எடுத் துக் காட்டுக்களால் விளக்குவான் இயற்றப்பட்டது. அத னுட்கதைகள் பலவும் பெரியபுராண முதலிய சைவ நூல் களிலிருந்து எடுக்கப்பட்டன எனினும், பிற நூல்களினின் றும் பல உதாரணங்கள் கையாளப்பட்டன. அன்புடை மைக்கு எடுத்துக் காட்டாகத் தன்மக்கள் மேற் காதலினை அடக்கமுடியாது வருந்திய நளன் கதையினை எடுத்துரைத்

தார். மனைவிபாற் காதல் தற்பயன் குறித்தது. மக்கள் விருப்பம் அத்தகைத்தன்று, களங்கமற்றது. 'மும்மல முருக்கி வெம்பவக்கடல் தொலையக் கடந்துளோர்களும் கடப்பரோ மக்கண்மேற் காதல்' என்றதற்கேற்ப, ஆசிரியர் புதல்வர்பால் எழும் அன்பினையே அன்புடைமைக்கு எடுத்துக்காட்டாகக் கொண்டார். தம் மக்களிடத்து வைக்கும் அன்பு, பிற எவ்வுயிரிடத்தும் ஏற்படுமாயின் அஃதே அருளெனப்படும். 'அருளென்னும் அன்பீன் குழவி' என்றதும் அது. ஆதலால் அருள் பிறத்தற்கு நேரான ஏதுவாய அன்பை எடுத்தோதினர். நளமன்னன் தனது அரசினைச் சூதாட்டத்தால் இழந்து காடு புகுந்த காலைத் தன் மக்களைத் தன் மாமனாரிடஞ் சேர்ப்பித்தனன். மனைவியைக் காட்டில் அலையுங்கால் தனியேவிட நேர்ந்தது. அவள் தன் தந்தை வீட்டினை அடைந்தாள். நளன் பாம்பின் கடியால் உருமாறி அயோத்தி சென்று ஓர் அரசனுக்குத் தேர்ப்பாகனாக அமர்ந்தான். தமயந்தி நளனைக் காண்பதற்கு ஓர் சூழ்ச்சி செய்தனள். தனக்கு இரண்டாவது சுயம்வரமென்று பறை அறைவித்தாள். எல்லா மன்னரும் தமயந்தியின் ஊர்க்கு வந்தபோது, அயோத்தி மன்னனும், தன் தேர்ப்பாகனுடன் வந்தான். தேர்ப்பாகனைக்கண்ட தமயந்தி அவன் நளனாயிருத்தல் கூடுமோ என்று ஐயுற்றுத் தன் மகனையும் மகளையும் ஒரு தோழி வாயிலாக அவனுக்குக் காட்டிவரும்படி பணித்தாள். தன் மக்களைக் கண்டவுடன் தன் அன்பை மறைத்து அதனை அடக்க முடியாமல் அவனுக்குக் கண்ணீர் ததும்பிற்று. அவர்களை எடுத்தணைத்து 'என் மக்கள் போல்கின்றீர், நீர் யார் மக்கள்' என்று கேட்டான். இதனைக் கண்டவர்கள் இவன்தான் நளனென்று துணிந்தார்கள். ஆதலால் முனிவர் கூறியதாவது :

"தோன்றா வகைகரந்துந் தோன்றலைக்கண் டுள்நெகிழ்ந்து
தோன்றநின்றான் முன்புநளன் சோமேசா—தோன்றுகின்ற
அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்."

விருந்தோம்புதல் என்பதன் ஒரு பகுதியாக அடியார்க்கு அமுதளித்தல் ஆகுமென்றும் அறிவுறுத்துவார், ஒரு பொதுமாது அடியார்க்கு அன்னமளித்து நிதிபெற்ற கதையினை எடுத்து மொழிந்தார். திருப்பூவணத்திலே ஒரு கணிகை, தன் வருவாயினை மாகேசுர பூசைக்கே செலவழித்து விடுவதால், பொன்னினால் இறைவனுக்கு ஒரு திருவுருவம் அமைக்கக் கருதிய எண்ணம் நிறைவேறப் பெறாது வருந்தினாள், ஒருநாள் இறைவனருளால், ஒரு சித்தர் அவள் வீட்டிற்குச் சென்று பித்தளைப் பாத்திரம், செப்புப் பாத்திரம் முதலியவைகளைப் பொன்னாக்கிக் கொடுத்தனர். அது கொண்டு தனது கருத்து நிறைவேறப் பெற்றாள். ஆதலின்,

"பொன்னனையாள் அன்பருக்கே போனகமீந் துன்னருளாற்
சொன்னமிகப் பெற்றாளே சோமேசா."

என்றனர். மக்களைப்பாடுதல் சிறந்த வழக்கன்று என்றாலும், செய்ந்நன்றி பாராட்டு முகத்தால், அவரைச் சிறப்பித்தல் பொருந்துமென்பார், ஔவையார் அசதிக் கோவை பாடியதை விதந்தனர். நடுவுநிலைமைக்குத் திருவெண்ணெய் நல்லூர்ச் சபையாரை எடுத்துக்காட்டி அச் சபையார் அந்தணர்க்கு அந்தணர் அடிமையாதல் இல்லை என்பதைப் பொருட்படுத்தாது, உடன்படிக்கையால் அமைந்த வழக்கையே ஏற்றுக்கொண்டார்கள் என்றார். திருஞான சம்பந்தர் காலத்தே சமணர் கழுவேற நேர்ந்ததற்கு ஏது அவர்கள் அரன் அன்பர்பாற் கொண்ட அழுக்காறே.

"அன்பரைக் கண்டழுக்கா றுஞ்சமணர் தம்வாயால்
துன்பமுற்றார் வெங்கழுவிற் சோமேசா."

என்றது காண்க. சிவபெருமான் திருக்கோயிற்குரியதை அந்தணருக்குக் கொடுத்து ஓர் அரசன் துன்புற்றானென்ற கதையை ஆசிரியர் வெஃகாமைக்கு உதாரணமாகக் கூறினர். மறையவரை நடமாடுங் கோயிலாகிய சிவனடியாராக முனிவர் கருதவில்லை போலும். குலநலத்தினுங் கல்வி நலனே சிறந்ததென்பதற்குத் தமிழ்ச்சங்கத்தாரை வென்ற

திருவள்ளுவர் கதையை முனிவர் எடுத்தியம்பினமையால் திருவள்ளுவர் தாழ்குலத்தவரென்பது அவர் கருத்துப் போலும். கல்வியும் நற்பயனுடையதாக வேண்டுமாகலின் காமச்சுவையை மிகுதிவிளைக்குஞ் சிந்தாமணி முதலிய நூல்களைப் பலகாலும் பயிறல் தீதாகலின், "சேக்கிழார் சிந்தாமணிப்பயிற்சி தீதெனவே, தூக்கிஉப தேசித்தார்" என்றார். அதனை ஒருகாற் கற்று அதன் செவ்வியுணர்தல் குற்றம் அன்று. பயிலுதலே தவறென்றவாறும். ஏனெனில் இங்ஙனங் கூறிய முனிவரே சிந்தாமணி முழுதுங்கற்றவர் தான். அவர் அதன்கண் நின்று எடுத்த மேற்கோள்கள் பலஉள. சங்கோத்தர விருத்தியுள் 'நற்பொருள் செய்வார்க்கும் அஃதிடம் பொருள் செய்வார்க்கும் அஃதிடம்' என்றதுகாண்க. "பொய்ம்மையும் வாய்மை யிடத்த" என்பதற்குச் சிறுத்தொண்டர் உயிரிழந்த தம் புதல்வனை அடியாருடனுண்ண அழைத்தமையை எடுத்தோதினர். அது பொய்யான நடையோ சொல்லோ என்பது ஆராயற்பாற்று. அடியர், பிள்ளை இழந்தமை அறிந்தே அவனை அழைப்பித்தார். தொண்டரும் உண்மையறிந்தும் பொய்மையாக அழைத்தமை அவரது செய்கையாகும். இதனைல் சொல்லொடு செயலும் 'பொய்மை' யென்ற மொழியிற் குறிக்கப்பட்ட தென்பதுணரற்பாற்று. வெகுளாமைக்கு முனிவர் எடுத்துக்காட்டிய உதாரணத்திலும் சிறந்தது உலகத்தில் இல்லை. தனக்குப் பேரிடுக்கண் பல விளைத்த மன்னன் தன்னைப் பணிந்தபோது அவனை ஏற்றுக்கொண்ட அப்பர் பெருமான் பொறுமையே,

> இணரெரி தோய் வன்ன இன்னா
> செயினும், வெகுளாமையாகும்"
> செல்லிடத்துச் சினங்காத்தலும் அஃதே.

கேள்விக்குச் சிறந்த உதாரணம் கண்ணப்பரே. வேடர்குடி முதலிய தாழ்ந்த மரபுகளிலே நூற்கல்வி யாதும் இன்மை தெளிவு. அறிவன எல்லாம் கேள்வியால் பெறுவனவே. அது பெரும்பயன் விளைத்தல் கண்ணப்பர் வரலாற்றிற் காணப்படுதல்போலப் பிற யாண்டுமில்லை. ஊனுக்கு ஊனிடு

தல் வேண்டுமென்ற கேள்விச்சொல் திண்ணனார் கண்ணை இடந்து அப்புதற் கேதுவாயிற்று. சிறு சொல்லும் பெரியோர்பாற் பெரும்பயன் தருமென்பதற்கு இஃதே சிறந்த காட்டாகும். நல்லினத்திற் சிறந்த துணையுமில்லை; தீய இனம்போல அல்லல் விளைவிப்பதும் வேறு யாதும் இல்லையென்ற உண்மைக்கு எடுத்துக்காட்டாகப் பாண்டியன் தன் நன்மனைவியாய மங்கையர்க்கரசியார் சொற்கேட்டு நற்கதியடைந்தமையும் சமணர் சார்பால் துன்பமடைந்தமையும் குறிப்பித்தனர். இதன்கண் நல்லினம், தீய இனம் என்பது ஆண், பெண் என்பதைப் பொறுத்ததல்ல வென்பது குறிப்பான் உணரக் கிடக்கின்றது. மனைவியானவள் கூறிய தீய சொற்கேட்டு இறந்தமைக்குத் தசரதனையும், மனைவியின் நன்மொழி கேளாது மடிந்தமைக்குச் சலந்தரனையும் எடுத்து விதந்தார்.

ஒருவனுக்கு மனைவியாயிருப்பவள், நல்லதொன்றைக் கூறினால் அவள் ஒரு பெண்தானே என்ற காரணம்பற்றி அதனைப் புறக்கணியாமையும், சமயக் குருக்களாயுள்ளவர்கள் தவறியவற்றைக் கூறினால், அவர்கள் பதவிபற்றி அவற்றைப் போற்றாது ஒதுக்குவதே சாலும் என்பதும் இதனாற் போதருதல் காண்க. வரும்படி கருதிக் கையிலுள்ள முதலையும் இழந்து போதற்கேதுவாய முயற்சியை அறிவுடையோர் மேற்கொள்ளார் என்ற கருத்திற்கு இராவணன் கதையை முனிவர் எடுத்து இயம்பினர். சீதை வாயிலாக இன்பமாகிய ஊதியத்தைப்பெற விரும்பி முதலாகிய தனது உயிரை இலங்கை மன்னன் இழந்தனன் என்றனர். உடம்பை முதலாகவும் சிற்றின்பத்தை ஊதியமாகவுங் கொள்க. இற்றைக் காலத்து ஆராய்ச்சியாளர் இராவணன் வடநாட்டரசருடன் போர் புரிவதற்குத் தொடங்குங்கால், பசு நிரைகவர்தல்போலக் காட்டிலிருந்த பெண்ணைச் சிறைசெய்தனனேயன்றிக் காமங்காரணமாகச் சீதையைக் கவரவில்லை யென்பர். எவ்வாறாயினும் சீதையைக் கவர்ந்தமை பிறர்பொருளைக் கவர்ந்தமையேயாம். ஆகவே அவள் ஊதியமும், தன்னரசும் உயிரும் முதலுமாதலின் முனிவர் எடுத்துக்காட்டுப் பிழைபடுமாறில்லை.

விபீடணன், பகைவர்பாற் செல்லுதற்குக் காரணம் இராவணன் அவனைத் தழுவிக்கொள்ளாமையாம் என்பது முனிவர் கருத்தாதலின் அதனைச் சுற்றந் தழுவாமைக்குக் காட்டாக்கினர். தம்பி தமையனை நீங்கிச்சென்றதனையே இக்காலத்தார் குறைகூறுவர். முற்காலத்திற்கேற்ப இராவணன்பாலுள்ள குறையையே ஆசிரியர் குறித்தனர். "உருவுகண் டெள்ளாமை வேண்டும்" என்பதற்கு அழகாகிய உதாரணம் ஒன்று முனிவர் எடுத்து இயம்பினர். சூரனைப் பார்க்கிலும் தோற்றப் பொலிவுடையவனுமில்லை; குமரனைப்போல என்று மினையோனு மிருப்பவனுமில்லை. சூரன் குமரனுருவங்கண்டு அவரை இகழ்ந்தமையால் அவன் இன்னல் எய்தினன். "கோலமா மஞ்ஞைமீது குலவிய குமரன் றன்னைப்—பாலனென் றிருந்தேன் அந்நாட் பரிசிவை யுணர்ந்தி லேன்யான்—மாலயன் றனக்கு மேனை வானவர் தமக்கும் யார்க்கும்—மூலகா ரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றோ" என்ற கந்தபுராணச்செய்யுள் இதனை வற்புறுத்தும். மருந்து என்ற அதிகாரத்திலே சிறந்த செய்யுளாய "நோய்நாடி நோய் முதல்நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செயல்" என்பதற்கு உதாரணமாகச் சமயத் தொடர்பான வரலாற்றினை யெடுத்துரைத்தார். திலகவதியார் மொழியை நம்பி நாவரசர் வெவ்விய சூலை நோய் நீங்கப்பெற்றார் என்ற இடத்து மருந்துகளால் தீராது வினைகாரணமாக எழுந்த நோய் அருளாளர் திருவாக்கால் விலகும் என்ற கருத்துப்போந்தமை காண்க.

ஆண்மக்களினும் பெண்மக்கள் அடக்கமிக்கவர்களாதல் பற்றிச் சிறந்தவரென்பதை ஆசிரியர் திருவள்ளுவனார்,

"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்"

என்றவிடத் தறிவுறுத்தினர். அதற்குக் காட்டாகப் பரவையார் நம்பியாரூரர் விடுத்த தூதை மறுத்தமையை முனிவர்

எடுத்தியம்பினர். அவர்பாற் காதல் மிக்கிருந்தும் தூதினை மறுத்தமையே பரவையாரின் திண்மையைக் காட்டிற்று. உலகத்திலே தோற்றவர் வெற்றியுடையர் ஆகார். அதற்கு மாறாக ஊடலிலே தலைவிக்குத் தோல்வியுற்ற தலைவன் வெற்றியடைதல் காணப்படும். அதற்கும் பரவையாரை யும் நம்பியாரூரரையுமே, எடுத்துக் காட்டினர். இந்நூலிற் பல உதாரணங்கள் பெரியபுராணத்தினின்று எடுத்தனவே.

ஆசிரியர் பிறவற்றை உபதேசகாண்டம், பிரமோத்தர காண்டம், பிரபுலிங்கலீலை, இராமாயணம், பாரதம், சூத சங்கிதை, கந்தபுராணம், நைடதம், திருவிளையாடற் புராணம், புலவர்வரலாறு, பாகவதம், காசிகாண்டம், காஞ்சிப்புராணம், கூர்மபுராணம் முதலிய பல நூல்களி னின்றும் எடுத்து அமைத்தனர். ஒரோவொரு இடங்களிலே கதை கூறாது, நூல் உண்மைகளையும் உதாரணம் போல அமைத்துள்ளார். தாயின் கருவிலுள்ள சேய், பிறவா மையை விரும்புமென்ற கருத்தைக் கதைபோல் அமைப் பார்,

"தாய்கருவில் வாழ்குழவி தாமெல்லாம் வேண்டுவது
தூயபிற வாமையொன்றே சோமேசா—ஆயதனால்
வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்."

என்றார். கருப்பையில் வாழும் உயிர்க்கு முற்பிறவிகளின் நினைவு உண்டென்றும், அதுபற்றிப் பிறவாமையை வேண் டும் என்றும் சூதசங்கிதை ஓதுகின்றது.

## அந்தாதிகளின் ஆராய்ச்சி

இனி, முனிவரின் அந்தாதிகளில் எளிய நடையில் அமைந்துள்ள அந்தாதிகளின் ஆராய்ச்சி ஒரு சிறிது செய் யற்பாலது. குளந்தைப் பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி, கலசைப் பதிற்றுப்பத்தந்தாதி என்ற மூன்றும், யார்க்கும் எளிதில் விளங்குஞ் சொல் நடையும், இலக்கணத் திட்பமும் செவ்விய ஆற்றொழுக்கும்

உடையனவாய் விழுமிய கருத்துக்களைத் தெரிவிக்கும் இயல்பின. இறைவனைக் கண்டு தொழும் பேறுடையார் யாவரெனின் "உண்டிலை யென்ற வுணர்ச்சிக ளகன்றோர்" என்றார், (இளசை 48). இதனால் எப்படி ஐம்பூதங்களுளவோ இலவோ என்ற ஐயப்பாடின்மைபோல இறைவனுண்மையைப்பற்றியும் ஐயப்பாடின்மை அமைந்த காலத்திலேதான் அவனை வழிபடற்குஉரியர் ஆவோமென்பது கருத்து.

இறைவன் தன்மையைப்பற்றிக் கூறுமிடத்து அது நம்மால் வரையறுக்கப்படாதென்பார், "புதியான், பழையான் புறத்தான், அகத்தான், முதியான் இளையான் முதலான், பதியாங் கலசைப் பகவன் பெருமை, மதியாலெவர்தே ரிடவல் லவரே" என்றார். (இளசை 84)

இறைவன் எல்லாமா யல்லதுமாயிருக்குந் தன்மையைக் கலசையந்தாதி 64-ஆம் பாட்டிலே அழகாகத் தெரிவித்தனர்.

இறைவன், நூல்உணர்ச்சியால் காணப்படாதவனென்பார். (கலசை 52)

"அன்றுதொட் டின்றுகாறும் அருமறை நான்குந் தேடி
நின்றலந் தோல மிட்டுங் காண்ஒணு நிமல மூர்த்தி."

என்றார்.

## மும்மூர்த்திகளுக்குந் தலைவன்

முழுமுதற் கடவுளின் தன்மையைப் பலசமயத்தாரும் தத்தம்கடவுளர்க்கு இருப்பதாகக் கூறுவர். அப்பெற்றி வாய்க்கப்பெறாத பிறதெய்வங்களை முழுமுதற்கடவுளென்று கூறுதல் மயக்கம் பற்றியே என்பார்.

(கலசை 30)

"வாழ்வு மிக்க தென்கலைசை வாண னேநின் னையேசிலர்
ஆழி அங்கை மாயன்என்பர் அம்பு யத்தன் என்பர்தேன்
வீழ்க டுக்கை ஈசனென்பர் வெய்ய அங்கி யென்பர்மா
ஏழ்ப ரித்த தேரின்அண்ணல் என்பர் மாயை யால்அரோ"

என்றார். இதனுள் உருத்திரன், மால், அயன், நெருப்புத் தெய்வம், கதிரவன்முதலியோரின் வேறாக உள்ளவர் கடவுள் என்பது உணர்த்தப்பட்டது. பிற தெய்வங்களினும் மும்மூர்த்திகள் உயர்ந்தவர்கள். அம்மூர்த்திகளோடு அத்துவிதக்கலப்புடையவனும் எல்லாவற்றையும் நடத்துகிறவனும், அம்மும்மூர்த்திகளைப் படைத்தோனுமாகிய கடவுள் ஒருவனேயாதலின்,

> "மாய னாயினை மறையவன் ஆனாய்
> மன்னு யிர்த்தொகை யனைத்தையும் ஒடுக்கும்
> பாயு மால்விடை உருத்திரன் ஆனாய்
> மூவர்க்கு மூலமாய் நின்றாய்."

என்றார். (கலைசை-31)

சிலர் மும்மூர்த்திகளும் இறைவனே என்பர். அது பொருந்தாது. என்னை? மும்மூர்த்திகளும் முக்குணச் சார்பாய திருமேனி உடையவர்கள், இறைவன் முக்குணத் தொடர்புடையவன் அல்லன். இக்கருத்தினை வலியுறுத்துவார், (கலைசை-32)

> "முக்கு ணங்களின் மூவரைத் தோற்றி
> மூவ ருக்குமுத் தொழில்வகுத் தருளி
> அக்கு ணங்களுக்கு அதீதமாய் நிறைவா
> யத்து வாக்களைக் கடந்தமே லுலகில்
> தக்க நற்கண நாத ரேத்தெடுப்பச்
> சத்தி யம்பிகை யுடன்அரு ளுருவாய்த்
> தொக்க கோடி சூரியர் உதயம்போல்
> தோற்றி நின்றனை கலைசைவிண் ணவனே."

என்றார்.

ஒரு கற்பத்தினில் அரனையும், பிறிதொரு கற்பத்தினில் அரியையும், வேறொன்றில் அயனையும் முதலிலே படைப்பாய் (கலசை 34) என்றமையால் அவ்வக்கற்பத்திற்கு ஏற்றவாறு அன்னோர்கட்குச் சிறப்புக் கூறப்படும் போலும். (கலசை 36) "தாணுமாலயற்குத் தம்முள்ளே யுயர்ச்சி

தாழ்ச்சிகூறிடும்புராணங்கட்-கேணுறுங் கற்பப் பிரிவினுற் போக்கென் றியம்பிடு மச்சபுராணம்" என்ற சிவதத்துவ விவேகமும் காண்க.

ஆன்மாக்களாகிய மும்மூர்த்தியின் குறைபாடு புராணத்துட் காணப்படுவனவேயன்றி, இறைவன்பாற் குறை யாதுங்கூறப் புராணம் வல்லதல்ல என்று தெளிக. ஒவ்வோர் அண்டத்திற்கும் மும்மூர்த்திகள் உளர். இறைவன் அண்டத்திற்கு அப்பாற்பட்டவன். அவன் மண்ணகத்திலும் விண்ணகத்திலும்விளையாடல் புரிவானேன் என்று கலசையந்தாதி 49-ஆம் பாட்டிலே வினவிய முனிவர் அவ்வந்தாதி 51-ஆம் பாட்டிலே இறைவன் திருவிளையாடல் புரிவதெல்லாம் விளையாட்டு விருப்பத்தாலன்று, 'சிற்றுயிர்களின் மேல் வைத்த கருணையால்' என்றார்.

இறைவன் அத்துவிதமாய் உலகத்தோடு கலந்து நிற்கின்றானென்பார், "யாரும் யாவுமாஞ் சராசரத் தொகுதியிலிரண்டறக் கலந்தோங்கிப், பாரும் விண்ணு மற்றனைத்துமாய்நிறைந்ததோர் படரொளிப் பரப்பு" என்றார்.

## எண்வடிவு

இறைவன் எண்வடிவுடையானென்பதன் கருத்தை முனிவர் (கலசை யந்தாதி 69)-ஆம் பாட்டில் விளக்கினார் இறைவனது முழுமையும் பெருமையும் இனிது விளக்குவார், "உறைவானை எவ்விடத்தும் உயிர்க்குயிரா யங்கங்கே நிறைவானை அஞ்சவின்றி நிற்பானை" "உயிருணர்வா யெங்கும், ஒழிவற நிறைந்து" என்றார். (இளசை 58, 12-ல்) இறைவன் வரம்பி லின்பமுடையானென்பார்,

> "அண்டர் அண்டம் ஊடறுத்து அகம்புறமும் ஏகமாய்
> மண்டி யெங்க ணும்பரந்த இன்பவாரி தன்னுள்ளே."

> "அருவுருவங் கடந்துநிறைந் தானந்தப் பரவெளியாய்
> மருவுபெருஞ் சிவபோக வாரிதியில்."

"பொன்றிடாப் பரமானந்த வெள்ளமாய்ப் போக்கொடு வரவின்றி, என்றுமோரியல்பாகிய பராபரம்." என்றார் (இளசை 77).

"இன்பச்சுவை குறிக்கும் அடையாள மொழிகளால் இறைவனை வழுத்துவார்," (குளத்தூர் 3) "கண்ணுண் மணியைக் கனிதேறலை," "ஊனே உயிரே உணர்வே யென் றொக்கக் கலந்த சிவானந்தத் தேனே யானதிருக் குளத்தூர் இறைவன்." (குளத்தூர் 13).

"நுவலற்கரிய பரானந்தப் பால்." (குளத்தூர். 18)

"அண்ணிக்குங் கரும்பாய் அமுதமாய்." (இளசை. 3)

"பருகுவார்க் கினிக்கும் பசுந்தேறலே." (இளசை. 4)

"ஆனந்தமயமாய் நின்ற அரும் பெருஞ் சோதி (இளசை. 59)

"உண்ணிறை அமுதே யென்றும்
உயிரினுக் குயிரே யென்றும்
பண்ணினல் லிசையே என்றும்
பழத்திடைச் சுவையே யென்றும்." (கலைசை. 58)

"பற்றிக் கிடந்த பசுபாசப்
பரப்பைக் கடந்த பரவெளியின்
முற்றிக் கிடந்த சிவானந்த
முழுத்தே னுகர்வார்க் ககவிளக்காம்."

என்றது காண்க. (இளசை 30).

இறைவன் உலக முழுதும் அடக்கி மேல் திகழும், ஒளி வடிவினன் என்பார், (இளசை 20) "உலகமெங்கும் ஒரு வடிவாகி நின்றிலகு பேரொளி போலும்" என்றார். அறிவு வடிவமாய்ச் சுட்டிறந்த பேரின்ப நிறைவாகிய கடவுள் உயிர்களுய்யும் பொருட்டுத் திருவடிவங் கொண்டருளின மையை மக்கள் உணர்கின்றார்கள் இல்லை யென்பார், (குளத்தூர் 41) 'எம்மனோர் பிறவித் துன்பத்தைத் தவிர்த் தருளுதற் பொருட்டே, நான்கு திருக்கரங்களும் மாதொரு பாகமும் கறைமிடறும், முக்கண்ணும், பிறைமதியும், உடைய திருவடிவுகொண்டு எழுந்தருளினன்' என்றனர். இறைவனுடைய பெருவடிவத்தை உருப்பின் வைத்து விளக்குவார்,

"காளை யாய்க்குளத் தூர்அமர்ந் தருளிய
கண்ணுதற் பெருமாற்குத்
தோள்கள் ஆயிரந் திருமுடி ஆயிரந்
தொழில்கள்ஆ யிரஞ்செய்ய
தாள்கள் ஆயிரம் விழிகளும் ஆயிரந்
தானம்ஆ யிரம்பேரின்
கோள்கள் ஆயிரங் குணங்கள்ஆ யிரமெனக்
கூறுவ ருணர்ந் தோரே." (குளத்தூர் 58)

"ஆயி ரஞ்சிரம் ஆயிர முடிக ளாயி ரஞ்செவி
யாயிரம் விழிகள்
ஆயி ரம்புயம் ஆயிரஞ் சரணம் ஆயி ரங்குணம்
ஆயிரந் தொழில்கள்
ஆயி ரம்பெய ருடையநின் பெருமைஐய வென்மொழிக்
கடங்கு மோபத்தி
ஆயி ரந்தவர்க் காயென உதவும் அங்க ணதிருக்
கலசைமுக் கணனே." (கலசை 33)

என்றார். இக்கருத்து வடமொழிச் சிருத்திரத்துட் காணப் படும் என்ப.

## திருவருட்சிறப்பு மிகும் இடம்

இறைவன் சிறப்பாகத் திருவருள் சுரக்கும் இடங்களை முனிவர் அழகாகச் சில பாடல்களில் எடுத்தியம்பினர். முதன்மையாக அன்பர் திருவுள்ளத்தையே கூறினர்.

"உடைந்து நைந்து நெக்குநெக்
குளங்கு ழைந்து சின்மயத்
தடைந்து கண்அ கம்பி ருந்து
தாரை பாய அன்புநீர்
குடைந்து வாழும் அன்பர் சிந்தை
கோயில் கொண்டு வாழ்வரான்
மடந்தை பாக மாய்க்க லசை
வாழ்சி தம்ப ரேசரே."

"கொண்டது விடாது பற்றிக்
குருமொழி தவாது நின்று
தொண்டுசெய் அடியார் ஞானச்
சுடரினைத் தீண்டு முள்ளப்
புண்டரீ கங்கள்கோயி லென்பரால்."

என்றதுமது.

"உணர்ந்து ளோர்உளத் தகரபுண் டரீகமுந்
துவாத சாந்த முழும்பர்
வணங்கு மாதித்த மண் டல நடுவுநான்
மறைகளின் முடிவுஞ் சீ
ரிணங்கு சோ மலோ கமுந்திரு வம்பலத்
திடமுந்தென் குளத்தூர்வாழ்
குணங்க டந்தவர் சிறப்பிடம் ஆம்எனக்
கூறிடு மறை நூலே." (குளத்தூர். 59)

இப் பாட்டின் குறிப்பு வருமாறு: தகரம் என்ற சொல் சிறிது என்னும் பொருட்டு; புண்டரீகம், தாமரையென்னும் பொருட்டு; இருதய கமலத்திலே இறைவன் நுட்பமாக நடஞ்செய்கின்றானுதலின் பெரியோர் அதனைச் சிற்றம்பலம் என்றனர், ஞானிகள் இறைவனை ஆண்டு வணங்குவர். அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உண்டென்பது அறிஞர் கருத்து. உடம்பிலே மூலாதாரமுதல் உச்சிவரை ஏழிடங்கள் சிறப்பாகக் கூறப்படும். உச்சிக்குப் பன்னிரண்டு அங்குலத்திற்கப்பால் தத்துவங்கடந்த தனிமுதலை நினைந்து வழிபடுவது யோகியர் அருஞ்செயல். அந்த இடத்தைத் துவாதசாந்தம் என்ப. ஆண்டும் இறைவன் சிறப்பாக விளங்குகின்றானென்றார். கதிரவனே உலகம் அனைத்தும் செவ்விதின் வாழ்வதற்குரிய சூட்டினையும் ஒளியையும் பிறநலங்களையும் அளிக்கின்றான். அண்டத்திற்கு நடுவாக விளங்கும் வெஞ்சுடர் மண்டிலத்தின் நடுவேயுள்ள சோதிப்பிழம்பானது சதாசிவமூர்த்தியின் வடிவாக வுள்ளது. அங்கே இறைவன் தோன்றாத் துணையாய் நின்று உலகச்செயல் நிகழுமாறு பணித்தலின், அதன் கண்ணும் இறைவன் சிறந்து திகழ்கின்றானென்றார். நான்

மறையென்றது நால்வகை வாக்கினை, அவற்றின் முடிவு நாததத்துவம். அத் தத்துவம் இறைவனது ஞானநோக்காற் புனிதமான மாமாயையினின்று எழுவதால், நான்மறைகளின் முடிவும் சிவபெருமானுக்குச் சிறப்பிடம் என்றனர். பயிர்களுக்குத் தண்மையுதவும் மதியும், இறைதிருவருளினாலே அக் குளிர்ச்சியைப் பெற்றுடைமையால் சிவசத்தி நிலையம் ஆய திங்கள்மண்டிலத்தை இறைவன் சிறப்பிடங்களிலொன்றாகக் கூறினர். நிலவுலகத்தின்கண்ணே தில்லையம்பலமானது, இறைவன் ஐந்தொழில் இயற்றுவதற்கேதுவாய திருவருட் பரவெளியைக் குறிப்பதாகலின், அதனை இறைவனுக்குரியதென்றார். செந்தழலோம்புவார் செம்மேனியுடைய எம்மானையே அதன்கண் தொழற்பாலராகலின் 'ஆரழற்சிகை நுனி அமர்வோய்' என்றனர் (குளத்தூர்70). இறைவன் சிறப்பிடங்கள் சிலவற்றிலே மக்களால் வழிபடப் படினும், முத்தி விருப்பமுடையார், அவனை எவ்விடத்தும் வழிபவோராகலின் "முத்திக் கமலாகர முன்னவனை எத்திக்கினு மேத்தியிறைஞ்சுதுமே" என்றனர். முனிவர் இறைவனது பேரொளி வடிவத்தைக் கண்டவரென்பது "படரொளிப் பரம்பூடே எம்பிரான் கருதரும் பல் கோடி-சூரியப்பிரகாச நேருருவமுந் தோன்றுமா கண்டேனே" என்றமையாலறிக; (குளத்தூர். 73)

## அம்மையப்பர் வடிவம்

இறைவனது திருவடிவம் தமதுள்ளத்தை விட்டு அகலுவதில்லையென்ற முனிவர்க்கு, எங்கெங்கும் பார்க்கினும் அப் பெருமானது சிவஞ்சத்தி வடிவமே தோன்றுதல் இயல்பே. அது,

"கண்ட கண்டவெள் ளிடையெலாம்
　　இளசைவாழ் கருணையங் கடல்காளம்
உண்ட கண்டமு நான்குதிண்
　　டோளும்வே ளுருவினை யருவாக்க
விண்ட கண்தழ லுருவமும்
　　உமையவள் மேவிய விடப்பாலுங்
கொண்ட கண்டமாய் நின்றதோர்
　　குறியன்றிப் பிறகுறி காணேனே." (இளசை. 73)

என்றமையாலறிக. இக்கருத்தினைக் கலைசை யந்தாதி 93-ஆவது செய்யுளிலுங் குறித்தமைகாண்க. மாட்சிமிக்க சிவயோகப் பயிற்சிப் பயனாய் முனிவர் பேரின்பந் துய்த்தவ ராகலின்,

"பெருகிக் கிடத்த நிராலம்பப்
    பேரா னந்தப் பெருங்கடலுட்
பருகித் திளைந்து திளைத்தாடிப்
    பதைப்பற் றிருக்க வரமளித்தான்" (இளசை. 22)

என்றார்.

## நிட்டை

"நேயமாகி நினைதொறும் நெஞ்சகம்—மாய்விலா இன்ப வாரியுண் மூழ்குமால்" என்ற தமது சிறந்த நிட்டை யாவது, பிராணனை யொடுக்கி உடலை வருத்திப் பெறுவ தன்று; இறைவன்பால் வைத்த பேரன்பால் உடற்பற்றற்று, உள்ளப் பதைப்பின்றி, அதீதநிலையுற்று இறைவனது அகண்டிதமாய வடிவினை நினைந்திருப்பதே ஆம் என்பார்,

"நிட்டை யாவது நெட்டுயிர்ப் பறஉடல்
    நிமிர்த்துவார் விழிமூடிப்
பட்ட வாயில்நீர் வறந்திட வடதிசை
    பார்த்துறைந் திடும்யோகோ
சட்ட கத்தினைப் பிரித்துளப் பதைப்பறச்
    சாக்கிரா தீதத்தே
சுட்டி றந்துநின் றிளசைநா யகன்கழல்
    சூழ்ந்திடுஞ் செயலன்றோ." (இளசை. 76)

என்றார். உயர்ந்த நிட்டையுடையோரே இறைவன் திரு உருவங் காண்பாரென்பார்,

"ஒன்றிக் கிடந்து பதைப்பறநின்
    றுணர்வார் தமக்கே அல்லாமற்
கொன்றைச் சடிலத் திருமவுலிக்
    குழகன் இளசைக் கடிநகரான்

மன்றற் கமலச் சேவடிகள்
பயிற்றிப் புற்றாய் மரமாகி
நின்றற் புதமாந் தவஞ்செயினுங்
காண்பார்க் கெளிதோ நெறிதேர்ந்தே."
(இளசை. 28)

என்றார். அத்தகைய அதீத நிலையிலே இறைவனது பேரறிவும் உயிரினறிவும் கதிரவனொளியுங் கண்ணொளியும் அத்துவிதமாய்க் கலப்பதுபோலக் கலந்து நிற்குமாதலின், அந்நிலையே தமக்கு வேண்டுமென்பார்,

"காண்கின்ற கண்ணொளியுங்
கதிரொளியும் எனக்கலந்து
பூண்கின்ற அதீதநிலை
புலையேற்குங் கிட்டுவதோ."

என்றார்.

"இறையு நீங்கிடா ஆனந்த வெள்ளமாம் இன்பத்
துறையிலே படிந்தெனை மறந்ததீத மாந்தொன்மை
நிறைவு வேண்டினேன்."

என்றதுமது.

## சைவசித்தாந்த நுகர்யோகம்

பிற சமயங்களை யெல்லாம் ஆய்ந்து முடிவாகச் சைவசித்தாந்த நெறியெய்திச் சிவயோகம் பயின்று அதன் பயனாய சிவபோகப் பேற்றினை முனிவர் இம்மையிலேயே எய்தினாரென்பது

"மாறினேன் சமய பேத
வழிப்படும் புன்மை யெல்லாந்
தேறினேன் வீடு சேர்க்குஞ்
சைவசித் தாந்தம் என்றே
ஏறினேன் சிவலோ கத்தே
இரண்டறக் கலந் தொன்றாகி
ஆறினேன் வருத்த மெல்லாங்
கலைசைக்கோ அருளி னாலே." (கலைசை. 56)

சிவபெருமான் உயிர்களின் பக்குவத்திற்குத் தக்கபடி குருவாக எழுந்தருளி யருள் புரிவானென்பார்,

> "பருவங்கள்கண்டு குருமேனி கொண்டு
> கதியுய்க்கும் ஆதி பகவன்."

என்றார். இறைவன் இருவினையொப்பு ஏற்பட்ட உயிர்கட்குக் குருவாய்வந்து கட்டு அவிழ்ப்பானென்பார்,

> "வாய்த்தவினை யொத்துழி மலப்பிணி அவிழ்த்து
> மூர்த்திகொடு வந்தருளி முத்திநல நல்கும்
> ஆத்தனிள சைப்பதியின் ஐந்தொழின் நடிக்குங்
> கூத்துடையன் யாவன்அவன் யாங்கள்தொழு கோவே."
>
> (இளசை. 61)

என்றார். ஞானநிலையே எவற்றினுஞ் சிறந்ததென்பது முனிவர் கருத்தாமாயினும் யோகம், ஞானத்திற்கு முற் சாதகமாய்த் திகழ்தலின் அதனியல்பை ஒரோ வொரிடங்களில் முனிவர் விதந்தோதினர்.

> "களிறான ஐந்தும் வயமாஅடக்கி
> ஒருபா லிருந்து தனியாய்
> வளியூடெழுப்பி இடைபிங் கலைக்கண்
> மருவாத வண்ணம் ஒருவித்
> தெளிவான குண்ட லினிசத்தி யோடு
> செறியிந் துவட்ட மதுவுண்
> டொளியாய் உறங்க அருளுங் குளந்தை
> உடையான் கடைக்க ணருளே." (குளத்தூர். 21)

என்றது காண்க. சிறந்த ஞான யோகமுடையார்க்கு உடம்பு கற்பூர தீபம்போல் வயங்கும் என்ப. தாயுமானப் பெருமான், "வெளியாயுருவில் விரவுமன்பர் தேகம்—ஒளியாய்ப் பிறங்கியதும் உண்டோ பராபரமே" என்றார். நம் முனிவர், "அல்விளக் காகிய ஆக்கை தன்னைநான்—எல் விளக் காயிடக் காண்ப தெந்த நாள்" என்றார்.

## அடியார் பெருமை

நம் முனிவர் சிவயோகத்தை மேற்கொண்டதுடன் நாடோறும் இறைவனை அன்பினாற் பூவும் நீருங்கொண்டு

பூசனை புரிந்தனரென்பது, "பூவால் நீரால் அனுதினமும் போற்றப் பெற்றேன்" என்பதாலறிக. மூவர் தமிழ்மாலை பாடித் திருப்பதிகள்தோறும் சென்று தொழும் அன்பர்கள் கூட்டத்துள் ஒருவனாய்த்திகழும் பெருவிருப்பு உடையராய முனிவர்,

"பதிகடொறுஞ் சென்றேத்திப் பயின்மூவர் தமிழ்மாலைப்
பதிகமெலாம் அங்கங்கே பாடிஉளங் களிகூரும்
பதிகரொடும் எனைக்கூடப் பணித்தருளாய் இமையவர்தம்
பதிகளுக்கும் பதியாகிப் பதிக்கலைசைப் பதியானே."
(கலைசை. 19)

என்றருளிச் செய்தனர்.

சிவனன்பர் திருவடித்தொண்டு பூண்பதனையே முனிவர் தமக்குப் பெரும்பேறாகக் கொண்டாராதலின், அவரது எல்லையற்ற பத்தியிலே இனிது விளங்கும்.

"உறையு ளாகத் திருக்குளத்தூர்
உறையும் பெருமான் பதாம்புயத்தை
இறையும் வழுவா தகங்குழைய
எத்திப் பரசும் அடியவர்க்கு
முறையே தொண்டு செய்திருக்கு
முடியாப் பேறு தனைப்பெற்றுக்
குறையா இன்பப் பெருங்கடலிற்
குளித்தேன் என்றுங் களித்தேனே. (குளத்தூர். 20)

"உனதன்பர் தங்கள் பணிசெய்து மெய்ம்மையுணருந் திறத்தைதயருள்வாய்" (குளத்தூர். 25) "தணிவொன்று சிந்தையொடு பாடுமன்பர் சரணென்தலைக்கு மலரே' (குளத்தூர். 29) என்றும் வருவன காண்க. அடியார்க்கு ஒழுக்கம் இன்றியமையாததென்பார், வாய்மை, ஒழுக்கம், தவஞ்சிலம், வணக்கம், பொறுமை, அறிவடக்கம், தூய்மை தவறு மெய்யடியார் தொழும்புக் கிரங்கி ஏனோர்க்குச் சேய்மையவனாய்" என்றார். மெய்யன்பர் பெருமையை, முனிவர்போல எவரும் சுருக்கமாகவும், விளக்கமாகவும் எடுத் தியம்பிற்றிலர்.

(குளத்தூர். 93) அன்பரின் திருவடிகளை வணங்கி அவர் ஏவிய தொழிலை விண்ணவர்கள் இயற்றுவர். (கலைசை. 22—23) கலைசைநாதருடைய அன்பர் நாமங்களைச் சொல்லி அவர்கள் ஏவிய தொழிலைச் செய்வோர், செல்வம், புகழ், சித்தி, கல்வி என்பவற்றின் பயனைக்காணவல்லவர்கள். இறைவனுக்கு அடிமைத்தொழில் பூண்ட அன்பர் ஐந்து பூதங்களையும் நிலைமாறி இயங்கும் வண்ணம் ஏவவல்லவர்கள்; அவர்களே எம்மையாளும் வித்தகர்கள். அவர்கட்கு உலகம் முழுதும் ஒருகுடைக்கீழ் ஆளும் வேந்தன் செல்வமு மொருபொருளன்று.

## அடியவரை இகழாமை

இறைவன் அடியார்களை இகழ்வார், எத்தவத்தினராயினுங் கீழ்மக்களே. மனமொழிகளின் பயன் இறைவன் வழிபாடே யென்பார். (குளத்தூர். 92)

"துதிப்பதற்கு வாய்அமைத்தாய்
சூழ்வதற்குத் தாள்அமைத்தாய்
மதிப்பதற்கு மனம்அமைத்தாய்
வணங்குதற்குத் தலைஅமைத்தாய்
கதிப்பதற்கு நூல்அமைத்தாய்
கடிக்குளத்தூர் அமர்ந்தறிவின்
உதித்தஉனக் கடியேங்கள்
உதவுவதென் கைம்மாறே." (குளத்தூர். 72)

இறைவழிபாட்டுடன் கலவாத எத்தவமும் பயன்படாது. இறைவன் திருவருட்பேறே எவற்றினும் சிறந்ததென்பார்,

"வனஞ்தோ றலைந்து விரதங்கள் பூண்டு
சடைகட்டி வாடலுறினும்
தனஞ்சேர்ந் துயர்ந்த குலத்திற் பிறந்து
சதுர்வேத மோதி வரினுங்

தினஞ்சாத் திரங்கள் பலகற்று வாது
செயவல்ல ரேனு மெவனோ
மனந்தாதி யான கலைசைச்சி வன்றன்
அருளைப் பெறாது விடினே." (கலைசை. 70)

என்றார்.

சிவ நாமம் நவில்வார் எத்தகையரெனினும் அவரைச் சிறப்பாகப் போற்றுதலே நற்கதி தருவதென்பது முனிவர் கருத்து.

"சிவனெனு மொழியைக் கொடியசண் டாளன்
செப்பிடி னவனுட னுறைக
அவனொடு கலந்து பேசுக வவனோ
டருகிருந் துண்ணுக வென்னும்
உவமையில் சுருதிப் பொருள்தனை நம்பா
வூமரோ டென்பயில் கொடியோ
னிவனெனக் கழித்தா லயனே கதிவே
றெனக்கிலை கலைசையாண் டகையே. (கலைசை. 76)

"தானை யாமெனக் குயவரி யதளினைத்
தரித்துமன் றிடையாடும்
வானு ளோர்களுக் கறிவரும் பரம்பொருள்
மண்ணிடை யெளிவந்து
தேனு லாம்பொழி லிளசையிற் குடிகொண்டு
சிறியனேன் பசுஞானக்
கூனை நீக்கிவந் தாண்டிட யான்முனங்
குயிற்றிய தவமென்னே. (இளசை. 78)

பிறவிப் பெரும்பயன் இறை வழிபாடு. அதனைப் பெற்ற பின்பு இனி உடம்பிருக்கினும் இறக்கினுந் தமக்குக் கவலை யில்லை யென்று முனிவர் கூறுகின்றார்.

"சாவொரீஇப் பன்னா ளிந்தத் தரணியாண் டிடினு மாள்க
மேவொணா திற்றை ஞான்றே விளியினும் விளிக யாக்கை
காவொடு கழனி சூழுங் கடிநக ரிளசைக் கோமான்
சேவடி வழுத்தப் பெற்றே மினிப்பெறுஞ் செல்வம் யாதோ."
(இளசை. 52)

தன்னை இறைவன்பாலொப்புவித்தபின், அவன் நரகிலிடினும் வீட்டிலிருத்தினும் அதுபற்றிக் கவலையில்லை யென்பார்,

"அடைக் கலம்புகுந் தேனுனக் கடியனேன் றன்னைப்
புடைத்து வெந்நர கிடுவையோ புனிதரா னவர்க்குக்
கிடைக்கு நின்னடிக் கீழிருத் திடுவையோ வறியேன்
மடைக்கண் நித்திலஞ் சொரிதிருக் குளந்தைவாழ் முதலே."

என்றார். (குளத். 38)

"நின்னடிக்கே கூவிடுவாய் கும்பிக்கே யிடுவாய்."

என்ற மணிவாசகர் கருத்தும் இஃதே.

இறைவனே நமக்குத் தலைவன், நண்பன், உறவினன், தந்தை, தாய், மகவுமாய் உதவுவான். தாரமீந்து துணைபுரிவிப்பவனும் அவனே. 'சிந்தை நீ, செய்யுஞ் செயலு நீ, பெருஞ் செல்வ நீ, தொழுந் தெய்வ நீ, கற்கும் வித்தை நீ, எய்ப்பில் வைப்பு நீ, நசை வெறுப்பு நீ யலால் வேறு கண்டிலேம்,' என்றவிடத்து இறைவன் பேராற்றல் விளக்கப்பட்டது. இறைவனை வழிபட்டார்க்கு எவ்வகை நலங்களுமுளவாம் என்பார், (கலைசை. 95)

"வரங்கள்பல வுஞ்சுரர் பதங்களு மயங்கா
வரம்பெருகு சித்திகளும் வித்தைகளு மொக்கத்
திரண்டுவரு வேயிளசை நாதன திருத்தாள்
பரந்தமல ரிட்டுவழி பட்டவர்கள் பாலே."

என்றார். (இளசை. 67)

இறைவன்பால் அடிகட்குள்ள பேரன்பு குளத்தூரந்தாதி பதினொன்றாவது செய்யுளான் இனிது விளங்கும், (குளத்தூர். 85)

"யாது மறிவொன் றில்லாத வெனையும்
பொருளாத் தடுத்தாண்ட
மாது பாகன் திருக்குளத்தூர் வரதன்
கருணைப் பெருக்கத்தை

யோதி யோதி யுன்னுதொறு முள்ள
முருகு மயிர்சி லிர்க்குங்
காதல் பெருகும் புளகிக்கும் கண்ணீர்
ததும்புங் கடியேற்கே." (குளத். 11)

குளத்தூர். 22-ஆம் பாட்டில் இறைவன், அருவம், உருவம், என்ற திருமேனி கோடல் உரைக்கப்பட்டது.

## பிள்ளையார்

இறைவனின் திருவுருவங்களுள் யானை முகவடிவத்தை அந்தாதிக் காப்புத்தோறும் இனிது புனைந்துரைத்தார்.

"மாமாயைத் தொடராறுத்துப் பசுபோதக்
கவளமுண்டு மதமேல் கொண்டு
காமாதித் தறிபிடுங்கி வினைக்கடலை
யுழக்கிவரு களபந் தானே (குளத். காப்பு)

உருத்தெழுந்து மும்மலக்கந் தினைப்பிடுங்கி
யுயிர்ப்போதக் கவள மாந்திக்
கருத்துடைய சிவானந்தக் களிமிகுத்துத்
திரியுமத களபந் தானே." (இளசை. காப்பு)

## கூத்தப்பெருமான்

கூத்தப் பெருமான் வடிவம்—உமைகாணக் கை தழைத்த அம்பலத்தினின்றுடிடும் பெருங்கருணையுந்தானே (குளத்தூர். 52) என்றவிடத்துக் குறிக்கப்பட்டது. அதன் தோற்றம் வர்ணிக்கப்படவில்லை. குளத்தூர்27-ஆம் பாட்டிலே இறைவன் திருமேனிகொண்டு வருதல் குறிக்கப்பட்டது. 'கல்லால் நிழலாய் கலைசைப் பதியாய்' என்றவிடத்து குருவடிவத்திற்குரிய திருப்பெயர் வந்தமை காண்க. இறைவனது மாதொருபாகத் திருவடிவமே மிகுதியாகக் கூறப்பட்டமையின், அஃதே முனிவர் எப்போதும் நினைவிற் கொண்டதுபோலும். பவளக்காடு மொய்த்தது போல் தோன்றுஞ் செவ்விய சடையும், யானைத்தோலும், எண்புயமும் திருநீறும், திருமாலையும், என்பு மாலையும்,

புரமூன்றெரித்த புன்னகையும் புலியதளாடையும் வெள்விடையும் பான்மதியும், பன்னிற மேனியும் பல்லிடங்களில் வழுத்தப்பட்டன (கலைசை. 65). சிவபெருமான் காளைவாகன முடையன்; நமன் எருமையில் ஏறி வருபவன். எருமையினுங் காளை விரைவாய நடையுடைமையால் நமன் வருதற்கு முன் விடையேறும் பெருமான் வருதல் கூடுமாதலின் அவ்வாறு விரைந்தருளவேண்டுமென்று குறையிரப்பார்.

> "பழங்கணுற வெகுண்டெழுந்து பகடேறிப் படையெடுத்துத்
> தழங்கு பெருஞ் சேனையொடுந் தருக்கிவருங் கொடுங்காலன்
> முழங்கு மொலி கேளாமுன் மூரிவிடை மிசையேறி
> யழுங் கேலென் றெதிர்த்தருளா யருட்கலைசைப் பதியானே."

என்றார்.

## மாலின் தொடர்பு

இறைவனொடு திருமாலின் தொடர்பான புராண வரலாறனைத்தையும் ஓர் செய்யுளில் அமைத்தனர்.

> "மாயனைக்கணை யாக வேவினை
> மாயனைவிடை யாக வூர்ந்தனை
> மாயனைத்திரு மனைவி யாக்கிமுன்
> மணந்து சாத்தனைத் தந்த ளித்தனை
> மாய னுக்கொரு பாக மீந்தனை
> மாய னுள்ளமே கோயில் கொண்டனை
> மாய னேத்திர மலர்ந்த தாளினாய்
> வாத போற்றிதென் கலைசை யீசனே."
>
> (கலைசை. 99)

என்றது காண்க.

## மன்னுயிர் இயல்பு

உயிரும் கடவுளும் வேறென்பதை முனிவர் அழகாக உணர்த்துகின்றார். தானல்லாத உடம்பினைத் தானென்றெண்ணி இல்வுலக நிலையா வாழ்க்கையைவிரும்பி அழிங்

துழலும் உயிரும், உனைப்போலப் பேரறிவையுடையது என்று கூறுதல் அறிந்தவர்க்கு அடாது என்றார். உயிர் எப்போதும் தன்வயமில்லாத தென்பார், உடல்பொருள் ஆவி மூன்றினையும் ஞானோபதேசம் நிகழும்போது இறைவனுக்குக் கொடுத்துவிடுவதை உணர்ந்திருந்தும் ஆன்மாவைத் தன்வயமுடையதென்று கூறுபவர்கள் சிறந்தவரல்லர் என்றார். அருள் நூல்களெல்லாம் எவற்றினும் பெரியவன் நீயென்றும் உயிரானது உன் முன்னே சாலவுஞ் சிறியது என்றும், ஓதுவதறிந்தும், உனக்கும் உயிர்க்கும் ஒப்புக் கூறுவாரை எத்தன்மையரெனக் கூற ஒண்ணும் என்றதும் காண்க. மும்மலங்களைப்பற்றிப் பன்முறை முனிவர் பேசுவது யார்க்கும் வெளிப்படை. "மருவு மாணவக் குறும்பினை வேரற மாற்றி" "இருவினைப் பிணக்கைவிட்டேன்", (குளத்தூர். 51)

"அன்றுதொட் டிதுநா ளளவுமா ணவத்தா
னறிவிழந் தழுங்கிய நெஞ்சே
உன்றனக் குயிரா யுடனிருந் துணர்த்து
முண்மையை யின்னமு முணரா
யென்றினித் தெளிவா யெதிர்ந்தவர் புரங்க
ளெரியெழக் குறுநகை முகிழ்த்த
கொன்றைவார் சடையான் திருக்குளத் தூரிற்
குலாவினேன் திருவருள் கொண்டே." (குளத்தூர். 99)

"களிம்புதோய் செம்பெனக் கலந்த மாசினிற்
பளிங்கெனக் கிடந்தஇப் பாவியேன்." (குளத்தூர். 84)

"மனைமக் கள்கடும் புமடந் தையர்பொன்
னெனவிப் படியெய் திமயக் கியிடுந்
தனையொப் புறுமா யைவிலா சமெலாம்." (கலைசை. 6)

"யானென்று மெனதென்று மிச்செருக்கி லெழும்வினையால்
ஊனென்றிப் பொறிவழிபோ யுலவாத யோனிதொறும்
தானென்றி யிதுகாறுந் தளர்ந்தொழிந்தேன் இனியிரங்காய்."
(கலைசை. 20)

என்றும் வருவன காண்க.

உயிரின் தீக்குணங்களைத் தொகுத்துரைப்பார்,

"இனியிலாக்களவு பொய் காம, மதம், மாற்சரியம் ஆங்காரம்
வெகுளி............பன்னெடுங்காலம் அழுங்குமாறெவனே."

என்றார்.

முனிவரது மனத்தாழ்மை—

"நான்போலு மடிமையுமற் றுன்போலு நாயனுந்தான்
மீன்போர்செய் வயற்கலைசை வித்தகனே கிடையாதே."
(கலைசை. 13)

என்பதால்தெளிக. மனத்தின் இயல்பைப் பல பாடல்களில் அடிகள் குறித்துள்ளார். தாயுமானசுவாமிகளைப் போல, இவரும் மனத்தைக் குரங்கென்பார்.

"பரந்து வானமுந் திசைகளுங் கணத்தினிற் படர்ந்து
கரந்து செல்லுமென் னெஞ்சினைக் குவித்துநின் கழற்கீழ்
நிரந்த வன்பினு லிருத்திட நிறுத்துநா ளுளதோ
இரந்த வன்பருக் கெளியனுங் குளந்தைவா ழிறையே."
(குளத்தூர் 35)

"எவ்வமு மகந்தையு மிழிவு மானமு
மவ்விய நெஞ்சமு மனைத்து நீங்குமால்
நவ்வியங் கரத்தவ னிளசை நாயகன்
செவ்விய பொலங்கழல் சிந்தை செய்யினே."(இளசை 81)

"ஒருமதிப்பட நிலைபெறு தனுதின முழிதரு கறங்கேய்ப்பத்
திரியும் வன்மனக் குரங்கினை நிலைபெறத் திருத்துவதெவ்வாறே."
(இளசை. 80)

என்றமையால், மனத்தின் சஞ்சல நிலையும் அதனைக் குவித்தல் இன்றியமையாததென்பதும் இனிது உணர்த்தப்பட்டன.

தன்னெஞ்சின் இழிவினைக் குறிப்பானுணர்த்துவார், (குளத்தூர். 33) "இறைவன் என்னெஞ்சிற் குடியிருந்து கொடும்பாம்பணிந்து சுடுகாட்டிலாடுவாரென்றால் அவரைத் தெய்வமென்றார் தொழுவார்" என்றார்.

"உன்னுமுன் கடலும் மலையும்வா னகமு
மோடுவை மீளுவை வறிதே
பன்னிடு மெல்லாங் கிடைத்ததாய் மதித்துப்
பாவனை செய்துதேக் கிடுவா
யென்னிதிற் பயனென் றோர்ந்திலாய் கலைசை
யீசனைப் பணிந்திலா யெளியென்
றன்னையு முடன்கொண் டிழுத்திழுத் தலைத்தாய்
தக்கதோ மனக்கருங் குரங்கே."

(கலைசை. 74)

என்றதுங் காண்க.

உடம்பின் இழிவையும் உலக நிலையாமையையும் தமது நெஞ்சிற் கெடுத்துரைப்பார், "நெஞ்சமே, மன்னிய அழுக்குங் குருதியு மெலும்பு மச்சையு மிறைச்சியு மயிருந், துன்னிய முடைத்தோல் மலப்பொதி யிதனைச் சுகமெனவிரும்பி மேவினையே, நின்னையும் பெரியோர் பொருளாய் மதிப்பரோ? பெற்றவர், பிறந்தார், உடன் பிறந்தவர்கள், பெயர், குலம், காணி செல்வங்கள், உற்றவர், என்னு மயக்கிவை யனைத்தும் உடம்பது கழிந்தபின் உளவோ, சிலநாள் வாழ்க்கையை நிலையாப் பரிந்தனைபோலும் மனமே, வா, நீ மாயமாம் உலக வாழ்க்கையைக் கடந்து பேரின்ப எல்லையைத் தலைப்பட்டிருப்பதற்கு உறுதியானவற்றைக் கூறுகின்றேன். அவையாவன: சிவபெருமானடியார் பணியை மேற்கொள்ளுதலும், பெண்டிர்மயலை யொழித்தலுமாம். எலும்பினை நரம்பிற்கட்டி மேலே தோல் போர்த்து, இறைச்சியும், மூளையும் அடைத்த புழுக்கூட்டினை இகழ்ந்தொதுக்காது ஆடையாலும் மணியாலுந்தோன்றும் அழகினை நச்சி மயல் கொள்ளும் நின்னை இறைவனன்பர் மதிப்பரோ' என்றனர். நெஞ்சமானது உலகர் மதிப்பைப் பொருட் படுத்தாது கடவுள் திருவுள்ளத்திற்கு உவப்பாக நடத்தலே நலமென்பார், (குளத்தூர். 95).

"அறிவிலா மாந்தர் நல்லனென் றுரைக்க
வல்லனென் றுரைக்கமற் றவராற்
செறிபய னுளதோ நெஞ்சமே குளத்தூர்ச்
சிவபிரா னொருவனே யகத்துப்

பிறிவிலாத் துணையா யுடனிருந் தறிந்து
பெரும்பய னளிப்பவ னவனே
நெறியினு லறிய வேண்டுமென் றிதனை
நினைந்திடாய் நன்றுநின் னறிவே."

(குளத்தூர். 95)

என்றார்.

உடலின் இழிவினைக் கூறுமிடத்து, அது நாய்க்கும் நரிக்கும் பேய்க்கும் கழுகினுக்கும் ஈயினுக்கும் பிறவற்றிற்கும் இரையாகும் புழுக்கூடென்றனர், (இளசை 92). உடம்பின் அழகைப் பார்த்து மயல் கொள்ளாது அதனை எலும்பு, நரம்பு, மூளை, இறைச்சி, குருதி முதலியவற்றின் கூட்டம் என்று பிரித்துணர்ந்து, மயக்கமொழிப்பதே நன்று. பெருந்தவறு செய்தவனை ஒறுத்தற்பொருட்டு, அவன் கழுத்தினிற் புழுத்த நாயினைக் கட்டினால் அவன் முகஞ் சுழித்தழுங்கி அருவருத்து அரசனை இரந்து, அக் கட்டினை அவிழ்க்க முயல்வனல்லது அதனை நன்றென்று நினைப்பானோ? அவ்வாறே உத்தமர்கள் உடற் கட்டவிழப் பெற நினைவரேயன்றி இதனை ஓம்பமாட்டாரென்றனர்.

"ஐம்பூதத் தோற்குழிசியாய், உதிரமும் ஊனும் பிசைந்துவைத்த பாழுஞ் சுவராய் ஒன்பது வாயிலினும் அழுக்கொழுகுங் கூடாய்த் துயரத்திற்குக் கொள்கலனு யிருப்பது இவ்வுடம்பு," என்றார். உடற்குக் கேடுவந்தால் துயருறுதல் தவறென்பதை ஓர் அழகிய செய்யுளால் முனிவர் விளக்குகின்றார்,

"எத்தனை யுடல மும்மையி லெடுத்தே
மெத்தனை யினியெடுப் பனவு
மத்தனை யன்றோ விவ்வுடற் பயனென்
றறிந்திடா திதனையே பொருளாக்
கத்தியு மிதற்கோ ரூறுவந் துற்றாற்
கலுழ்ந்துவெந் துயர்க்கடல் குளித்தும்
பித்தரின் மயங்கித் திரிவதென் னேயோ
பேசிடா யகத்தியீச் சுரனே."

(இளசை. 95)

உயிர்கள் மாறிமாறிப் பிறப்பதும் இறப்பதுமுடையன என்பதை ஓர் அழகிய செய்யுளில் முனிவர் இனிது உரைத்தார், அது வருமாறு:—

"மாய்வதும் பிறப்பதும் வளர்ந்துமங்கை மார்முலைத்
தோய்வதும் புலன்வழிச் சுழல்வதும் பிணியினால்
தேய்வதும் பவந்தொறு மெனக்கமைத்த செல்வனே
யாய்கலைக் கலைசை மேவு மைய வாழி வாழியே."

(கலைசை. 29)

சமயப் பிணக்கால் வரும் துயரத்தையும் முனிவர் பலவிடங்களிற் குறித்தனர். பிறருக்குத் துயர்வந்தகாலை வினைப்பயனென்று கூறி இரங்காமையும், தனக்குத் துயர் வந்தபோது வினைப்பயன் என்பதை மறந்து பெருந்துன் புறுவதும் சுயநல மிக்க மனத்திற்கியல்பு என்பார்.

இதனால், முனிவர் மக்களியற்கையை நன்குணர்ந்தா ரென்பது புலனாம்.

பிற பெரியார் கூறியது போலவே, நம் முனிவரும், இறைவன் தமக்கு ஒரு மொழி செப்பியருளியதாகக் கூறினர்.

"மனமும் முரையும் மதியுஞ் செயலும்
எனதும் தனதும், இடருந் நலனும்
சினமுங் கெடவோர் மொழிசெப் பியவா
கனமொன் றிளசைப் பதிகா வலனே."

(இளசை. 40)

தம் குரு, தனக்குணர்த்தியது அஞ்செழுத்தென்று முனிவர் காஞ்சிப் புராணத்துட் கூறுதலின், ஈண்டு ஒரு மொழி யென்றது திருவைந் தெழுத்தையே என்னலாம்.

இவ்வந்தாதிகளிலே சொல்லழகுகள் பல அமைந்துள்ளன. சிலவற்றையே ஈண்டுக் குறிக்கின்றோம். பெண்கள் கண்கட்குவமை தரக்கூடிய பொருள்கள் அனைத்தையும் ஒரு செய்யுளுள் முனிவர் தொகுத்துரைத்தமை நய மிக்கது; அது வருமாறு :—

"வேலிற் றிகழ்ந்து கயலிற் பிறழ்ந்து
விடமொப்ப வெப்ப மருவிப்
பாலிற் றெளிந்து பிணையைத் துரத்தி
யரிசூழ் பரந்து படைவேள்
கோலிற் பயின்று குமிழின் மறிந்து
குழையூடு செல்லும் விழியார்
மாலிற் படாதுன் னடியே வழுத்த
வருளாய் குளந்தை யரனே." (குளத்தூர். 26)

தேவாரத்துள், நாதனும நமச்சிவாயவே, என்றது போலவே முனிவரும்,

"எற்றுவன் குழந்தையின் இளம்பி றைச்சடை
நாற்றிய பிரான்பெயர் நமச்சி வாயவே."

என்றார்.

"தெள்ளத்தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத்தேற லமுதவொளி வெளி."

என்ற தேவாரக் கருத்தை இளசை 9-ஆம் பாட்டிலே முனிவர் அமைத்தனர். "கலைசையந்தாதி 4-ஆம் பாட்டிலே எல்லாமற என்றனை யெய்துவதே" என்பது "எல்லாமற வென்னையிழந்த நலம்," என்ற அருணகிரியார் திருவாக்கை நினைவூட்டுகின்றது. (இளசை 60)

"ஊற்றமாய் அயரா அன்பினுன்னடி நிழற் கீழ்த் துஞ்சும்," என்றஅடி "அயராவன்பி னரன்கழல் செலுமே" என்னுஞ் சிவஞானபோதச் சூத்திர அடியை யொத்திருக்கின்றது. இத்தகையன பல, (இளசை 68).

"பார்ப்பதி யணங்கினொரு பாற்பதியு மெம்மான்" என்றவிடத்து பார்ப்பதி என்ற சொல்லோடு ஒத்த ஒலிநய முடையதாய்ப் 'பாற்பதி' யென்பதமைந்து, 'பகுதியிலே பதிந்துள்ள' என்னும் பொருளைத் தந்ததனோடு, அம்மையின் பகுதியாய் அப்பன் இருக்கின்றான் என்று கூறும் புது முறையும் புலனாதல் காண்க.

உயிர்கள் மாறிமாறிப் பிறப்பதும் இறப்பதுமுடையன என்பதை ஓர் அழகிய செய்யுளில் முனிவர் இனிது உரைத்தார், அது வருமாறு:—

"மாய்வதும் பிறப்பதும் வளர்ந்துமங்கை மார்முலைத்
தோய்வதும் புலன்வழிச் சுழல்வதும் பிணியினால்
தேய்வதும் பவந்தொறு மெனக்கமைத்த செல்வனே
யாய்கலைக் கலைசை மேவு மைய வாழி வாழியே."

(கலைசை. 29)

சமயப் பிணக்கால் வரும் துயரத்தையும் முனிவர் பலவிடங்களிற் குறித்தனர். பிறருக்குத் துயர்வந்தகாலை வினைப்பயனென்று கூறி இரங்காமையும், தனக்குத் துயர் வந்தபோது வினைப்பயன் என்பதை மறந்து பெருந்துன் புறுவதும் சுயநல மிக்க மனத்திற்கியல்பு என்பார்.

இதனால், முனிவர் மக்களியற்கையை நன்குணர்ந்தா ரென்பது புலனாம்.

பிற பெரியார் கூறியது போலவே, நம் முனிவரும், இறைவன் தமக்கு ஒரு மொழி செப்பியருளியதாகக் கூறினர்.

"மனமும் முரையும் மதியுஞ் செயலும்
எனதும் தனதும், இடருந் நலனும்
சினமுங் கெடவோர் மொழிசெப் பியவா
கனமொன் றிளசைப் பதிகா வலனே."

(இளசை. 40)

தம் குரு, தனக்குணர்த்தியது அஞ்செழுத்தென்று முனிவர் காஞ்சிப் புராணத்துட் கூறுதலின், ஈண்டு ஒரு மொழி யென்றது திருவைந் தெழுத்தையே என்னலாம்.

இவ்வந்தாதிகளிலே சொல்லழகுகள் பல அமைந் துள்ளன. சிலவற்றையே ஈண்டுக் குறிக்கின்றாம். பெண்கள் கண்கட்குவமை தரக்கூடிய பொருள்கள் அனைத்தை யும் ஒரு செய்யுளுள் முனிவர் தொகுத்துரைத்தமை நய மிக்கது; அது வருமாறு :—

"வேலிற் றிகழ்ந்து கயலிற் பிறழ்ந்து
விடமொப்ப வெப்ப மருவிப்
பாலிற் றெளிந்து பிணையைத் துரத்தி
யரிசூழ் பரந்து படைவேள்
கோலிற் பயின்று குமிழின் மறிந்து
குழையூடு செல்லும் விழியார்
மாலிற் படாதுன் னடியே வழுத்த
வருளாய் குளந்தை யரனே." (குளத்தூர். 26)

தேவாரத்துள், நாதனும நமச்சிவாயவே, என்றது போலவே முனிவரும்,

"ஏற்றுவன் குழந்தையின் இளம்பி றைச்சடை
நாற்றிய பிரான்பெயர் நமச்சி வாயவே."

என்றார்.

"தெள்ளத்தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத்தேற லமுதவொளி வெளி."

என்ற தேவாரக் கருத்தை இளசை 9-ஆம் பாட்டிலே முனிவர் அமைத்தனர். "கலைசையந்தாதி 4-ஆம் பாட்டிலே எல்லாமற என்றனை யெய்துவதே" என்பது "எல்லாமற வென்னையிழந்த நலம்," என்ற அருணகிரியார் திருவாக்கை நினைவூட்டுகின்றது. (இளசை 60)

"ஊற்றமாய் அயரா அன்பினுன்னடி நிழற் கீழ்த் துஞ்சும்," என்ற அடி "அயராவன்பி னரன்கழல் செலுமே" என்னுஞ் சிவஞானபோதச் சூத்திர அடியை யொத்திருக்கின்றது. இத்தகையன பல, (இளசை 68).

"பார்ப்பதி யணங்கினொரு பாற்பதியு மெம்மான்" என்றவிடத்து பார்ப்பதி என்ற சொல்லோடு ஒத்த ஒலிநய முடையதாய்ப் 'பாற்பதி' யென்பதமைந்து, 'பகுதியிலே பதிந்துள்ள' என்னும் பொருளைத் தந்ததனோடு, அம்மையின் பகுதியாய் அப்பன் இருக்கின்றான் என்று கூறும் புது முறையும் புலனாதல் காண்க.

## பிள்ளைத்தமிழாராய்ச்சி

இனி, ஆசிரியர் சிவஞானயோகிகள் அருளிச்செய்த இரண்டு பிள்ளைத்தமிழின் நயங்களை ஆய்வாம். இறைவன் அகண்டவடிவமுடைய பரமானந்தப் பொருளாயவன் எனினும், அடியவர்களை ஆளுதற்பொருட்டு, அருளுருக் கொண்டவிடத்து, அவ்வுருவின் இளந்தோற்றத்தை நோக்கித் தொழும் நங்கைமார் கூறுமொழியாகச் செங் கழுநீர்ப் பிள்ளைத்தமிழ் இயமபப்பட்டது.

மனம்வாக்கிற் கெட்டாத சிற்சத்தியாகிய அம்மை மலையரையன் பாவையாகவும் பாண்டியன் புதல்வி தடாதகைப் பிராட்டியாகவும் திருவுருக்கொள்ளுதலால் அவ்வப்போதுகளில் அம்மையின் அணுக்கத்தொண்டராய சேடியர்கள் அவளது இளவனப்பைப் பற்றிப் புகழ்ந்து பாடும் பிள்ளைக் கவியாக, அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் இயற்றப்பட்டது. இப்பிள்ளைத் தமிழ்களிலே சாத்திரக் கருத்துக்கள் அமைந்த கற்பனைகள் பல வந்துள்ளன.

பிள்ளையார் தமது திருக்கரத்திலே பாசமும் அங்குச மும் வைத்திருப்பது தம்மைக் காட்டுவாரும், ஊர்ந்து நடத்துவாரும் இல்லை என்று உலகு உணர்தற்பொருட்டு என்றார். யானைகளெல்லாம் கயிற்றாற் கட்டப்பட்டும் தோட்டியால் நடத்தப்பட்டும் வாழ்வன. யானைப் முகப் பெருமான் பிற உயிர்களை அடக்கியாளுந்தன்மை யுடையராய் ஆனைகளோடு இயல்பால் ஒவ்வாது திருமுகத் தால் மட்டுமே ஒத்திருப்பவர் என்பது தெளிக. சப்பாணிப் பருவத்து மூன்றும் பாட்டிலே உயிர்களை யானைக்கும் பிள்ளையாரை அவற்றின் தலைவனுக்கும் ஒப்பிட்டுரைத்தார். மும்மலமாகிய மதம் பிடித்து அறிவாகிய கட்டுத்தறியைப் பிடுங்கி எறிந்து, அன்பாகிய சங்கிலியை உதறித் தள்ளிப் பெரியாரவையாகிய கூடத்தினின்றும் விலகிப்போய்ப் புவனங்களாகிய கடுவனங்களில் அலைந்து எத்தகையரான பாகர்க்கும் அடங்காதனவாய் இயங்கும் உயிர்யானைகள் ஆனைமுகவனாகிய நின்னைப் பார்த்துத் தம்மைப் பிணிப்

பதற்குப் பாசமும் தோட்டியுந் தாங்குவதை யறியாது, தம்மைபோல உன்னையுங்கருதி உன்பாற் சாருமவைகளைப் பார்த்து நீ கைகொட்டிச் சிரிப்பதுபோலச் சப்பாணி கொட்டியருள்க என்றார்.

## பிள்ளையார் சிறப்பு

பிள்ளையார் இருகைகளையுங் கொட்டி விளையாடுதற்கு ஒரு காரணம் சைவசாத்திரத்தினின் றெடுத்துரைக் கின்றார். பிள்ளையாருடைய ஒரு கையானது, திருவருள் பெற்று வீடடைதற்குரிய தகுதி நிரம்பிச் சிவபுண் ணிய மிகுதிப்பட்டு ஆணவ மலமாகிய அறியாமை கழன் றொழிதற்குரிய மலபரிபாகமும், இருவினைப் பயன்களையும் ஒப்பநாடும் உயர் நிலையாகிய இருவினை யொப்பும் உடை யவர்களது கட்டினை யவிழ்த்துய்விக்கின்றது. மற்றொ ருகை அடியவர்களுடைய உயிர், பொருள், உடம்பு, பந்த முதலிய அனைத்தையும் வாங்கிக் கொள்ளுகின்றது. இரு கையினுக்கும், தொழில் மாறுபாடுண்மையால், பகைமை மிகுதிப்பட்டு அதனை நீக்குவதற்கு அக் கைகளினும் உயர்ந்தோர் இன்மையால், அவைகள் ஒன்றை யொன்று போராடித்தாக்குதல் போல ஓர் அழகிய சப்பாணி கொட்டியருள்க என்றார். இறைவனுடைய ஐந்தொழில் நிகழ்வதற் கேதுவாக, அவன் படைத்து வரிசையாக வைத்த பல அண்டவகுப்புகளையும் விளாங்கனியாகக் கருதி நீ உன் தும்பிக்கையால் வளைக்கும் இயல்பினை. சிறு பறைப்பருவம் 5-ஆம் பாட்டிலே, உலகமனைத்தும் நின் உட லில் அடக்கிய நிறைபொருளே என்றமையுங் காண்க. பிள்ளையார் ஞானமூர்த்தி யாதலின் மலவறமுப் பொரு ளியல்புந் தெளித்தருளொருமுதலே! என்றார். பிள்ளை யார் சிறு பறை முழக்கவேண்டும் என்பார். அதற்குரிய பயனை அழகாகத் தொகுத்துரைத்தார். நின்னுடைய திரு வடித்தாளிணையினை இறைஞ்சாது நீங்கிய மாந்தரை யமன் பொறிபரக்குங் கண்களோடு சீறித்தருக்கிக் கூவும் ஓசை யும் வேட்கைமிகுக்கும் மன்மதனது வெற்றிமுரசின் ஓசை யும், புறச்சமயத்தினர் எழுப்பும் ஒலியும் காதுறுவண்

ணம் அமிழ்தம் சொரிவதுபோல இன்ஞெலி பரப்பும் சிறு பறையை முழக்கியருள்க என்ருர்.

## பூசனை

அம்மை இறைவனைக் காஞ்சிற் பூசனை செய்யும் போது சைவக்கிரியை முறைப்படி கைதட்டுவதை எடுத்துக் கூறிச் சப்பாணி கொட்டியருள்க என்ற விடத்துப் பூசை முறைகள் பலவும் குறிக்கப்பட்டன. பிள்ளைத்தமிழ் வருகைப் பருவத்து மூன்றும் பாட்டிலே ஐவகைச் சுத்தியுங் குறித்தது காண்க. வருகைப் பருவத்து 8-ஆம் பாட்டிலே அண்டகடாகப்பரப்பே சிற்றிலாகவும், உயிர்கள் நுகரும் கருமப்பயனே சிறு சோருகவுங் கொண்டு உயிராகிய பாவைகட்கு மல நோயாகிய பசி நீங்கும்படி அவற்றிற்குப் பலகால் அச்சோற்றினை உண்பித்துப் பரமானந்தப் பெருவீட்டிற் குடி கொண்டிருக்குந் தீங்கரும்பாக அம்மையை வர்ணித்தது காண்க.

## அம்புலிப் பருவம்

அமுதாம்பிகை அம்புலிப்பருவம் ஆரும் பாட்டிலே முறையாக வணங்கித் தனது திருவுளப்படி நிற்கு மாந்தர்க்கு, மலம், மறைப்பு, மாயைப்பிணிப்பு, பற்று, மயக்கம், முதலிய நோயினை யொழித்து, நான்மறை முடிவுக்கும் எட்டாத குணங்குறி கடந்த பேரானந்த வெள்ளக்கொழுங் கடலில் திளைக்கும் பேறு கொடுத்தது மன்றி இவ்வுலகின் கண்ணே முப்பத்திரண்டறங்களையும் இயற்றினதை மதியே! நீ அறிவாய். இவண் நீ வரின் உன்கறையும் போய் நீ வேண்டிய வரமும் பெறுவாய். ஆதலின் அம்மையுடன் வந்து விளையாடு, என்ற விடத்துச் சித்தாந்த நூற் பொருள் போந்தமை காண்க.

## ஊசற் பருவம்

ஊசற் பருவத்திலே மூன்றும் பாட்டிலே அம்மையைத் திருவருள் பொழியுங் கருமுகிலுக்கு உவமித்த

விடத்து நிலத்திலுள்ள உயிராகிய பயிர்கள், மலமாகிய கொடுந்தழலின் வெம்மையால் வாடாது மெய்ஞ்ஞான மலரும் குற்றமற்ற பேரின்பச் செழுங்கனியும் உடைய தாய்த் தழைத் தோங்குமாறு, அருளாகிய கருக்கொண்டு பொன்னணி விளங்கு முறுப்புகள் பச்சையாகத் தோன்றக் கருமையாகிய கூந்தலின் நடுவே ஒளிரும் பிறையானது மின்னத் திருநுதலாகிய வானவில் வளைந்து தோன்றச் சிலம்பொலியானது ஆடைமணி யோசையுடன் கலந்து பெருங்குரலெழுப்ப அம்மை அன்பர் சிந்தைமீது ஊசலாடினள் என்றது காண்க.

## நீதிநூற் கருத்துக்கள்

நீதி நூற்கருத்துக்களை யுணர்த்தும் உவமைகளும் பல, ஆங்காங்கு முனிவரால் அமைக்கப்பட்டுள்ளன. உதாரணங்கள் சில ஈண்டுக் காட்டுதும். திருமால் பாற்கடலிடைப் பள்ளிகொள்ளுவது, அவன் பெருந்தன்மையைக் காட்டுதலின், அவன் புருடோத்தமன் என்னப்படுகின்றான். அஃதெவ்வாறெனில், கருநிறப்பெரு நஞ்சைத் திரைக்கையினால் எடுத்து நீட்டித் துயருறுவித்த பாற்கடலின் பெரும் பிழையைப் பொறுத்து, அமுதமும் திருமகளும் மார்பின் மணியும் தந்தமைக்காக நன்றிபாராட்டி அதன்கட் பள்ளி கொண்டனன் ஆதலினென்க. இது, “நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல தன்றே மறப்பது நன்று” என்ற திருக்குறட் கருத்தை நினைவூட்டுகின்றது: நாலடியாரில், நல்லவர்கள் தமக்கு ஒருவர் செய்த ஒரு நன்றியை உன்னி அவர் செய்த எழுநூறு தீமையையும் பொறுப்பர். கயவர் தமக்குச் செய்த எழுநூறு நன்றியையும் மறந்து ஒரு தீமைகாரணமாகப் பகைமை கொள்ளுவர் என்றதும் இஃதே.

உருவுகண் டெள்ளாமை வேண்டும் என்ற திருக்குறட் கருத்திற்கு உதாரணமாகச் சூரன் போரில் சூரன் முருகப் பெருமானை இகழ்ந்தமையைச் சோமேசர் முதுமொழி வெண்பாவிலே 67-ஆம் பாட்டிலே காட்டியதுபோலப்

பிள்ளையார் பிள்ளைக்கவியுள் முருகன் வணக்கத்திலே அப் பெருமானை இகழ்ந்தமையை இனிதெடுத்தியம்பினர்.

"உரவோர்களு ருவினின் மிகச்சிறிய ரேனுமவ்
வுரனிலாப் பெரியர் தம்மை
உடைந்தழிய வென்று விரல்வாகை சூடுவரெனு
முரைக்கிலக்கிய மாகவே
விரவாது விண்ணம் பொதிந்துய ரடுக்கலின்
வீறழித் தாண்மை கொண்ட
வெற்றிச்சிறு படைச்செய்ய வேல்கை வைத்த
வீரனுக் கன்பு செய்வாம்."

(காப்புப் பருவம் 4-ஆம் பாட்டு)

என்றனர். விருந்தோம்புதலின் சிறப்பினைப் பிள்ளையார் பிள்ளைத்தமிழ்த் தாலப்பருவ முதற்பாட்டின்கண் முனிவர் அழகாகப் பகர்ந்தனர். கலைசைப் பதியானது சோலைப் புது மணத்தை வீசி வெளியே திரியும் வண்டுக் கூட்டங்களை அழைத்து அவற்றிற்குத் தாமரைத் தேனூட்டிப் பகல் விருந்தோம்பி, இரவின் கண் அவற்றிற்குச் செவ்வாம் பலின் தேனை வழங்குதலுடன் புகழ் என்னும் மாதினைத் தூதாக அனுப்பி, உலகத்திலுள்ள இரவலரைக்கூவி அவர் கட்கு மகிழ்ந்தெப்போதும் எவ்வாறும் வழங்கிக் காக்கும் பெருங்கொடையோரையும் உடையது என்றார்.

### சிலவற்றில் புனைவார் வேண்டல்

பிள்ளையார், சிறுமியர் கட்டிய சிறு வீடுகளை அழிக்க வரும்போது, அங்ஙனம் சிற்றிலைச் சிதைத்தல் கூடா தென்று வேண்டுஞ் சிறுமியர் கூற்றுக்கள், நகைச்சுவையும் மெல்லியற்கையும் சொன்முறையழகும் ததும்பியுள்ளன. அவற்றுட் சில வருமாறு :—

(1) "எந்தாய், சிறு வீடு வகுக்குந் தொடக்கத்தே, உனைப் போற்ற மறந்தேம் சிறியேம். அதனால் நீ வெகுளி மீக்கொண்டு உன் குறும்பினைக் காட்டுதல் பொருந்தாது. நாங்கள் செய்த பிழை தீரும்பொருட்டு உனக்குச் சிறு சோறு படைக்கின்றோம். எங்கள் சிற்றில் சிதையேல்'. (சிற்றிற் பருவம் 1)

(2) உன்னை விருந்திற்கு அழைக்கவேண்டுமெனக் கருதுந் தருணத்தில், இவண், நீயே விரும்பிவந்தாயென் றெண்ணி மகிழ்ச்சிமீக்கூர்ந்து நாங்கள் முறுவல்பூத்தோமே யொழிய உன் யானை முகமும் பூதப்பெருவயிறும், குறுகிய தாளால் நடக்கும் வேடிக்கை நடையும் பார்த்து நகைத்தி லேம், இடங்கள் தோறும் மந்திர முழக்கமும் தேவார இசையும் நிறைந்து வளமிக்க கலைசையில் உலாவுஞ் சிறுவா, எங்கள் சிற்றில் சிதையேல்.

(3) 'நேற்று நின்னை விருந்தாக அழைக்கக் கருதி னேம் நின் மதவெள்ளம் சிறு வீட்டினை அழிக்குமென்ற நினைவால் அழையாதிருந்தேம். இதுதான் உண்மை, உன்னை அவமதித்து அழையாதிருந்தோமென்றெண்ணி நீ திருவுள்ளத்திற் சினங்கொண்டு, சிறியேங்களாகிய எம் மைத் துன்புறுத்தல், உன் பெருங்கருணைக் கழகல்லவே.'

(4) நின் பெருவயிறு அசைந்திலங்க மெல்ல நடந்து, உள்ளங்கையிற் பெரிய பணிகாரம் வைத்துக்கொண்டு நீ எம்பால் வருவதைக் கண்டு மகிழ்ந்து, நீ உண்ட சேடத்தை விருப்புடன் எங்களுக்கு அளிப்பாய் என்று கருதி, ஆத்தி ரத்துடன், நின்னை எதிர்பார்த்திருந்த எங்களை வருத்து வது அழகோ? நீ விக்கினத் தலைவன் என்பதைப் பேதையே மாகிய எங்களிடத்திற் காட்டுவது புகழாகுமோ? தெள்ளத் தெளிந்தோர்கள் உள்ளுஞ் சிறுவா சிற்றில் சிதையேல்" என்றும் வருவன காண்க.

சிறு குழந்தைகள் பெற்றோரை உவப்பிக்கும் வகை யினைப் பிள்ளையாரின் வைத்துக்காட்டு முறையினைச் சப் பாணிப்பருவம் (4) ஆம் பாட்டிற் காண்க, அதன் கருத்தா வது :—சிவபெருமானும் உமையம்மையும் உண்ணுதற் கமைத்த வள்ளத்திலுள்ள அறுசுவை உணவுகளையும் தொட்டுத் துழாவி அளைந்து அவ்வுணவுபட்ட தம் கைகளை, அவர்கள் முடி முதல் அடிவரை படும்படி உதறிவிட்டு வெளியே போய் வீதியிலே சிறுவர்கள் கூடிக் குவித்த புழு திக் குவியல்களைக் கால்களால் எற்றிக் கைகளால் உழக்

கினமையால் அப்புழுதிகள் போம்படி கைகளைக் கொட்டு வதுபோல, அழகு பொழியும்படி சப்பாணி கொட்டுக என்றனர். இதன்கண் "படைப்புப் பல படைத்து," என்னும் புறநானூற்றுச் செய்யுட் கருத்து இனிதமைந் தமை காண்க.

## உயர்வுநவிற்சி

இப்பகுதி இயற்கை நயமுணர்த்துவதுபோலச் செயற்கை நயமுணர்த்தும் உயர்வு நவிற்சி உரைகளும் பல. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்க் காப்புப்பருவம் 2-வது செய்யுளிலே பொழிலினுயர்வினைத் தமது மனம் போன அளவு மிகுத்துரைத்தனர். மென்றளிர் நெருங்கி இருள்பட நிழல் செறிந்து, குளிர்ச்சி பொருந்தி, வண்டூதிய பூங்கொத்துக்கள் நிறைந்து, நறுமணங் ததும்பித் தேன் மழை பொழிய வளர்ந்து, மேகத்தின் வயிற்றினை உடைத்து எட்டுத் திசையிலும் நிற்கும் பெரிய யானைகளை ஓட்டுதற் குரிய கருவிகள் இவைகளென்று சொல்லும்படியாகப் பரந்து விரிந்து கதிரவன்மண்டிலத்தையும் உடுக்கள் மண்டிலத்தையும் கடந்து விண்ணுலகம் புகுந்து விண்ண வர் கற்பகப் பூங்காவினுடன் கலந்துறவு செய்து, கிளைகளி லுள்ள பசுங்கிளிகள் உரைக்கு மந்திர ஒலிகளைத் தேவர் கூட்டம் வியந்து கேட்டற்குரியதாய்த் திகழும் பொழில் களையுடைய குளந்தைப் பதியின்கண்ணே புகழ் விளங்க அம்மை வீற்றிருந்தனள், என்றது காண்க.

வாசனை மிக்க நல்ல தாமரைகள் பொழியும் தேன் நீராகவும், அவை உதிர்ந்த மகரந்தப்பொடி, எருக்குவிய லாகவும் பெற்று வளர்ந்த நெற்கதிர்க் குலைகள் பசுங்குதிரை பூட்டிய தேரிலே செல்லும் பகலவனுக்கு இருமருங்கும் வீசும் வெண்கவரித் தொகுதிபோல உயர்ந்தசைந்தன.

(தாலப் பருவம் 7-ஆம் பாட்டு)

பொழில்களிலே குரங்குகள் கரும்பினைச் சுவைத்து வாழைக் குலைகளைத்தாக்கித் தென்னங்காய்களைச் சிதறிப் பசிய நெடிய கமுகின்மீதேறி அதனின்றும் விண்ணுலக

மரங்களில் தாவிப் படர்ந்துள்ள கொடிகளின் வழியாகச் சென்று கழைக்கூத்தர் கம்பத்திற் கட்டிய கயிற்று வழி யாகச் சென்று நடிப்பதுபோலக் கூத்தாடுகின்ற வளமிக்க உயர் பொழிலுடையது குளத்தூர்.

(தாலப் பருவம் 5-ஆம் பாட்டு)

உவமை நயங்கள் அமைக்குமிடத்தும் உயர்வுநவிற்சி காணப்படும். தோகையர் தடுமென நீர்த்துறையுட் பாய்ந்து விளையாடுங்கால், குளத்தினின்று மேலெழுந்த வாளைமீனானது பக்கத்திலுள்ள பொழிலின் பசிய கொம் பிலே விளங்கும் கனியுங் காயுந் தாக்கப் பெற்று வட்டவடி வாயதேன் அடையிற் சிக்குண்ட தோற்றம், தன்னூடே தினந்தோறும் ஊடுருவிச்செல்லுங்கதிரவனது தேரின் அச் சையும் உருளையும் வானளாவிய பொழிலானது பறித்து வைத்துக் கொண்டிருந்தாற் போன்றது, என்ற விடத்து, வாளைமீனானது கதிரவன்தேர் அச்சிற்கும் தேன் கூடு அதன் சக்கரத்திற்கும் உவமிக்கப்பட்டன, இதனுள் பொழிலானது கதிரவனைச் சினந்து அச்சையும் உருளையும் பறித்ததாகக் கூறியது போலப் பிறவிடங்களிலும், அஃறி ணைப் பொருளிற்கு மனக்கருத்தினை ஏற்றி அழகு செய்யும் மரபு, இச்சிறு காப்பியங்களுட் காணப்படும். (செங்கழுநீர் தாலப் பருவம் 2.)

அமுதாம்பிகை செங்கீரைப் பருவமுதற் பாட்டிலே, குமுதங் கூம்புங்காலை கமலம் விரிந்து விழித்திருப்பதும் கமலங் கூம்பியகாலைக் குமுதம் விரிதலும் ஒன்றை யொன்று பாதுகாத்தற் பொருட்டேயாம் என்றனர். எதனாலெனின், அவற்றின் கணவராகிய ஞாயிற்றினையும் திங்களையுமூடி. வருத்திய அம்மையின் அங்கை தம்மையும் ஒருக்கால் வருத்துமென்ற அச்சத்தால் என்றார்.

அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் செங்கீரைப் பருவம் இரண்டாம் பாட்டினுள், கதிரவன் ஏனைத்தாமரைகளை விரித்தமைபோல், அம்மை திருமுகத் தாமரையையும் அலரச் செய்யாமற் போகேனென்று அம்மையருகே

போந்துலாவியதைப்போல, அம்மையின் திருக்காதிலுள்ள செவ்விய மகரக் குழைகள் அம்மை தோள்மீது கதிர் வீசின என்றும், மூன்றாம் பாட்டினுள் மதியானது தன் பால் மறுவிருப்பதும் திருமுகத்தே மறுவில்லாமையுங் கண்டு வெள்கிக் குளத்தூர்ப் பெரிய திருமதில்களிலுள்ள பொந்துகளினூடே நுழைந்தோடுகின்றான் என்றுங் கூறினமை காண்க.

பிள்ளையார் தமது பவள மேனியுடன் மணிக் கொடுஞ்சி அமைந்த பொற்சிறு தேரினை உருட்டுங்கால், கதிரவன் அதனைப் பார்த்துத் தன்னிலுஞ் சிறந்ததொரு சிறுபரிதி நிலமிசை உலவுகின்றதோவென மயங்கினன், என்றவிடத்து நிறங்களின் அழகு புலனாதல் காண்க. (செங்கழுநீர் செங்கீரை) பிள்ளையாரது திருமுடியிற் சூட்டிய வெண்மலர் மாலையானது ஒருபுறம் அசைந்தாடும் போது அவர் கன்னத்தினின்றிழியும் மதநீரிற் படிந்து கரு நிறமுடையதாயும் மறுபடியும் அசைந்தாடுங்கால், அம்மத நீரை உதறி முன்போல் வெண்ணிறமாயுந் திகழ்வது, கடலிற்படிந்த கருமுகில், கரையிலுள்ள புன்னையங்கா விற்றாவி, வயிறுடைந்து, மழை பொழிந்து வெண்ணிற முற்றாற்போன்றிருந்த தென்றவிடத்தும் நிறத்தின் நயமே தெரிக்கப்பட்டது. ஒளியினாற்றோன்றும் நிற நயத்தை முனிவர் சில இடங்களில் இனிது விளக்கியுள்ளார். (செங் கழுநீர் செங்கீரை 2.)

செவ்வொளிமிக்க மணிகளால் இழைத்தியற்றப்பட்ட மாளிகைகளின் உச்சிநின்று மேலெழுந்த கொடிகளின் மீது தங்கிய மதியானது செந்தீநாப்பண் அமைத்த தூண் மீது அருந்தவங்கிடக்குந் துறவோரை யொத்திருந்த தென்றார். (தாலப் பருவம் 2.)

அம்மை திருக்கை நின்று மேலே வீசி விளையாடும் அம்மனைக்காய்கள் முத்தினாலமைத்து வெள்ளியனவாய் மதிவடிவமுடையதாயிருப்பினும், சிவந்திருந்தன. அது எதுபோலவெனின், வெண்மதியானது, செம்பவளக்கொடி

படர்ந்த கடலின்பால் எழுங் காலத்திலும், மேலைக்கடலிற் புகுங் காலத்தினும் சிவப்பாய்த் தோன்றுதல்போல என்றார். அம்மை கைநின்று வெளிப்போங்கால், அம்மனையானது, திருக்கரங்களில் அணிந்த பொற்கடகத்தின் அழகினைப் பெற்று நான்முகன் போலவும், அம்மை திருவிழியின் நிறத்தினைக் கவர்ந்து திருமால் போலவும், அம்மை திருநுதற் சிந்தூரப் பொட்டின் நிறங்கவர்ந்து, சிவபிரான் போலவும், மேலே செல்லுங்கால் எவற்றினும் தோயாத சிற்பரம் போலவும், விளங்கிற்று என்ற இடத்து, நிறங்களின் ஒளி நயந் தெள்ளிதிற் குறித்தமை காண்க, (அம்மானை 10.)

நீலமணி பதித்த அம்மனை மேற்செல்லுங்கால், அடியார்களது பாசம் அகன்றோடுவது போன்றது. பவளம் பதித்த அம்மனை, மும்மலமற்ற காலைத் தோன்றுஞ் சிவப்பேரொளி போன்றது. முத்தம் பதித்த அம்மனை, அம்மையின்புகழ் பரவுவதுபோலப் பரந்து சென்றது என்றவிடத்து அருவப் பொருள்கள் உருவ நயமுடையனபோல வர்ணிக்கப்பட்டன.

உவமப் பொருள்களில் ஒற்றுமையால் ஒன்று பிறிதொன்றாகத் தோன்றுவதுஞ் சில இடங்களிற் சுட்டப்பட்டது. உதாரணம் வருமாறு :—அம்மை கூந்தலைக்காரென்று கருதி மயிலினம் தொடர்ந்தன. அவள் பாத நடை கற்கும் பொருட்டு அன்னங்கள் திரண்டு வந்தன. அவள் கையின்கட் கிளியானது அவள் தீங்குரலைப் பழகிக் கொள்ளக் கருதிற்று. அவள் விழியினைப் பார்த்து மான் கூட்டங்கள் சூழ்ந்தன. வேதங்கள் ஓலமிட்டுணர்வரிய அம்மை அடியார் பொருட்டுத் திருவுருவங் கொண்டு வந்தனள். (அமுதாம்-வருகைப் பருவம் 2.)

பாலியாற்றின் சிறப்பனைத்தும் நீராடற் பருவத்திலே முனிவர் அழகுற இயம்பினர். தன்னகத்தே நீராடும் பெண்டிருடைய கூந்தலிலுள்ள மாலைகளிற் படியும் வண்டுகளை அலைகளால், பாலியானது விலக்குதல், சிவபெருமான்

தன்னை மனமொழி மெய்களால் அழுத்தமாக வழிபடு வாரது மலநோயை அகற்றுவது ஒத்திருந்தது. அவர் முடியில் அணிந்த கொன்றை போன்ற பொன்னும், வெண்டலைபோல நுரையும், செஞ்சடை போலப் பவளக் கொடியும், பிறைபோல யானை மருப்பும், கொணர்ந்து நடனஞ்செய்து செல்லும் பாலியானது கூத்தப்பிரானை யொத்திருந்தது, என்றனர். பாலியிலே, அம்மையானவள், திருமகள், கலைமகளாகிய தோழியர் இருவருடன் மூழ்குங் காலை நான் மூழ்கின் நீங்கள் என்னைப் பிடிக்க ஒண்ணுமோ என்ன, நாங்கள் பிடிக்க வல்லேமென்று, அவர்கள் வஞ்சினங் கூறவும், அம்மை நீருள் மூழ்கி மறைந்த காலை அவர்கள் பிடிக்கமுயன்று இயலாது வருந்தி நம்முடைய கணவர், பெருமானுடைய அடியையும் முடியையும் காணுத வராயினர். நாமோ பிராட்டியின் முழுத் திருமேனியையும் காணமுடியாதே மாயினேம் என வெள்கிநின்ற காலை, அவர்கட்கு அருள்புரிவான் அம்மை வெளிப்பட்டனள் என்றனர்.

அம்புலிப் பருவத்திலே திங்களைப் பிள்ளையோடு விளையாட அழைக்குங் காலை, சாம, பேத, தான, தண்டம் என்ற நால்வகைச் சூழ்ச்சிகளான் அழைப்பது மரபு. அவற்றிற்குச் சில உதாரணங்கள் காட்டுதும். பொங்குகின்ற சிறப்புடைய மலையரசன் புதல்வி அம்மை; பொங்கும் அலையுடைய கடலின் கண்ணே உதிப்பது திங்கள். ஆதலாற் பொங்கு மலைவாய் வருவது இருவர் பாலுமுண்டு. தனது பொற் சிலம்பு மின்னொளி வீச நடப்பவள் அம்மை, விண்மீன்கள் தோன்றி விளங்கிச் சூழப்பெற்றவன் சந்திரன். ஆதலால், மின்பூத்து நாளும் புலம்புறச் சூழ்தல் இருவர்க்கும் ஒக்கும். கமலங் கூம்பவும் குவளை விரியவும் திங்கள் கதிர் வீசுவான். கமலத்தை வென்ற திருமுக முடைமையால் அதனைக் கூம்பச்செய்வதும் குவலயமாகிய உலகமெல்லா மகிழ்தற்கேதுவாய அருளொளி பரப்புவதும். அம்மையே. இருவரும் சிவபெருமான் மேனியில் இடம் பெற்றவர்கள். மன்மதனுக்கு உதவி புரிவது திங்கள். மன்

மதனுக்கு வரங்கொடுத்தது அம்மை. இவ்வாறே மண்டலத்தார்புகழாது வெறுக்குங் கடுமைக்குணத்தை ஒழிக்கும் திறலுடையவரது தலைமீது திருக்கரம் வைத்து, ஆணவ இருட் செறிவை யொழித்து நல்லுயிர்களாய மென்பயிர்கள் கண்டு அகமகிழத்தோன்றிப் பதினாறு கலைகளும் பொலிவுற்று விளங்குபவள் அம்மை. மண்டலத்தார் புகழ்கின்ற ஆதவனாகிய கதிரவன் மறையும் அமையத்து, உதயகிரிமீது தோன்றி இருளை யொழித்துப் பயிர்கள் தழைக்குமாறு ஒளிவீசிப் பதினாறு கலையொடும் திகழ்பவன் மதி, ஆதலின் அம்மையை ஒருவாறொப்பவன், (அம்புலி 3) எனினும் இறைவன் தலைமுடியிலுள்ள பல பொருள்களில் ஒன்றாக மதி உறைகின்றான்; அம்மையோ இறைவனின் முப்பத்திரண்டு அவயவங்களிலும் பப்பாதி கொண்டவளாதலின் மதியினும் அம்மை மிகச்சிறந்தவள். அவ்வாறே சந்திரன் இராகுவென்ற ஒரு பாம்பிற்கு அஞ்சித்திரிபவன், பிள்ளையாரோ அண்டநடுங்கும் பாம்புகளையெல்லாம் அணியாகக் கொண்டவன். சந்திரன் தளர்ச்சியும் வளர்ச்சியுமுடையவன், பிள்ளையாரோ என்றும் தளராச் செய்யவடிவுடையோன் என்றது பேதமென்னும் உபாயத்தின்பாற்படும்.

மதியே, நீ இவன்பால் வரின், நினது கறை நீங்கப் பெற்று வேண்டியதையும் பெறுவை. நீ பிள்ளையார்பால் வரின் உன்னைப் பாம்பு தொடராதபடி செய்வன். எம் முயற்சிக்கும் குற்றம் வராது என்றது தானத்தின்பாற்படும்.

"மதியே, தக்கனார் வேள்வியில் அம்மையை அவமதித்துத் தக்கனுடன் நீயும் பிறரும் அடிபட்டதை மறந்தனையாகில், நீ உன் கலை முழுவதையும் இழந்து கலை முழுமதித்தேவெனும் பழைய பெயரொடும் கலைமதியிலாததேவு என்று அடிபட்ட பாவிற் புதுப்பெயருமாளுவாய்"

நீ பிள்ளையாரை முன் இகழ்ந்து சாபமெய்தினை, இப்போது நீ அவர் அழைத்தவுடன் வரவில்லையாயின் தனது புழைக்கையை நீட்டித் துருவனார் பிணித்த கயிற்றி

னின்று உன்னை அறுத்தெரிந்திடுவர். அவர் உடல்மீதுள்ள பாம்பில் ஒன்று உன்னைப்பற்றி உமிழாது விழுங்கிவிடும் என்றும் வருவன, தண்டந் தெரித்தவாறும்.

இப் பிள்ளைத்தமிழ்களாற் புலனாகும் கருத்துக்களிற் சில வருமாறு:—செங்கீரை என்பதன் இலக்கணத்தை அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் முதற்பாட்டிலே முனிவர் தெளிவாகத் தெரித்தனர்.

“இருகை மலரும் புவிபதித்தொரு
முழந்தாளிருத்தி யொருதாள் மேல் நிமிர்த்துத்
திருமுக நிமிர்ந்தொரு செங்கீரையாடியருளே.”

என்றது காண்க. ஒருசிலர் செங்கீரை என்பதற்குச் செஞ்சொற் பயிலும் பருவமென்று பொருள் கொண்ட தெற்றாலோ?

அமுதாம்பிகை முத்தப்பருவம் இரண்டாம் பாட்டில், காமன் ஐங்கணையையும் விரித்துரைத்தனர். “வளைத்த கருப்புச் சிலையெடுத்து வனசக் கணையும் எங்கணையும் வாசங்கமழு நறுநீல மலர்ப்பூங்கணையும் அசோகினிடைத் தழைத்த நனைதாழ் நெடுங்கணையுந் தழுவிக் கொணர்ந்து” என்றது காண்க.

இறைவன் திருமுடியிலுள்ள மலர்கள் பலவற்றையும் தொகுத்துரைக்கும் பகுதி வருமாறு:—“கங்கையும் பாந் தளுந் தும்பையும் செம்பொற் கடுக்கைச் செழுந்தொடை யலும்—கபாலமுங் கொக்கிறகும் ஊற்றிருந் தொழுகு தேங்கமழ்ந்த பூ மத்த நறுங் கொங்குத வழாத்தியும் வன் னியும் எடுக்குங் குளிர்ந்த அறுகம்புல்லு மேற்—கோமளப் புலவோ ரிறைக்கு மந்தாரமுங் கொய்து தவர் தூற்றுமலரும் தங்கிய பிரான் சடைக்காடு.” பச்சைப் புயலொடு பிறந்து அருட் கடலொடு வளர்ந்த மின் என்றது காண்க. தமி ழின் பெருமை கூறுவார், தண்டமிழ்ச் சுவை கண்ட தென் குளத்தூர் அம்மை சப்பாணி கொட்டியருளே! தெய்வச் சுருதி தமிழ்க் கன்றித் தீட்டா நிலைமைத்தென உலகிற் றெரிக்குங் காழித்திருஞானச் செம்மல் என்றார்.

## இரட்டுறமொழிதல்

இரட்டுற மொழிதல் என்னுஞ் சொல்லழகு பலபாடல்களிற் றிகழ்கின்றன. அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ்ச் சப்பாணிப் பருவம், 4-ஆம் பாட்டிலே, "தமிழ்க்குரிசில் நீறிட அமண் கையர் உண்ணீறிட." என்றவிடத்து, அரசன் திருநீறிடவும், அமணர் உள்ளம் வெந்துநீறாகவும் என்ற பொருள் புலனாதல் காண்க.

தாலப்பருவம் 10-ஆம் பாட்டிலே பரநாடாய் என்பது, அறிவுக்கு அப்பாற்பட்ட மேலான நிலையுடையவளே, ஐயறிவினையுங் கடந்த மேலான பொருளை நாடுக என்ற இரு பொருள் படுதல் காண்க. 'இலங்குளங்தை வருதாளாய்' என்பது இலங்குகின்ற உள்ளத்தால் தடவப்பட்ட தாளை யுடையாய் "குளத்துாரை இல்லமாகக் கருதும் அருளுடையாய்" என்று பொருள்படும். பிறவுமன்ன. செங்கழுநீர்ப் பிள்ளைத்தமிழ் இறுதியிலே, நிலமகட்குத் தொண்டைநாடு மகுடமாகக் கூறப்பட்டது.

## மடக்கு

திருவேகம்ப நாதரைப்பாடிய அந்தாதி 'மடக்கு' என்னுஞ் சொல்லணியும், திருமுல்லைவாயிலந்தாதி 'திரிபு' என்னுஞ் சொல்லணியும் அமைத்துப் பாடப்பட்டன.

'கம்பரந்தாதி' என்பதே மடக்காகக் கம்பரந்தாதியுள் ஓர் பாட்டுளது. அவ்வாறே 'திருக்காமக் கோட்டம்' 'மாவடி' 'மாதேவன்' 'அகத்தியனார்' 'திருமேற்றளி' திருவோண காந்தன்றளி, அநேகதங்காவதம், நெரிக்காரைக் காடு, வேதாகமம், கச்சித்தெரு, ஏகம்பத்தானை முதலியனவும் மடக்காக விதக்கப்பட்டுள்ளமை வியக்கத்தக்கது. இரண்டு அந்தாதிகளிலும், ஒவ்வொரு பாட்டு மாத்திரம் பொருளோடு இங்குத் தருகின்றாம்.

"கம்பரந் தாதி நிலம்வலென் றூதி களங்கண்முகங்
கம்பரந் தாதியைக் கஞ்சமன் றாள்பங்க னேமுத்தியே
கம்பரந் தாதி திருப்பூங்கொன் றையென்றங் கட்டியென்சொற்
கம்பரந் தாதியுங் கைகொண்ட வாகச்சிக் காவலனே."

(கம்) ஆகிய ஆகாயத்திலே நிறைந்த ஆதியே நிலம் வன்மை என்னும்படி அதனை ஆக்குதி, கழுத்து, கண், முகம் என்பன சங்கையும், அரத்தையும் தாது நிரம்பிய தாமரையையும் ஒத்திருக்கப்பெற்ற உமை பங்கனே ஏக மாதலாகிய பரமுத்தி தருவையாக, திருப்பூங் கொன்றை மாலையுடன் எலும்பு மாலையையும் அணிந்தவரே என் (புன்) சொல்லாகிய கம்பரந்தாதியையும் ஏற்றுக்கொண்ட கச்சிக்காவலனே என்றவாறு.

"செய்வசித் தாந்தமிழ் முல்லையு ளீச செவ் வேமநய
வைவசித் தாந்தம் பொருளைந் துடைய வவற்றிரண்டு
நைவசித் தாந்தவிர் மூன்றுமொன் றென்றின் நகுமனென்னுஞ்
சைவசித் தாந்த நெறியுப தேசந்தனை யெமக்கே."

(திருமுல்லைவாயிலந்தாதி 67)

முதலடிப்பகுதி—செய், வசித்து, தமிழ்(ஆம்)முல்லையுள் ஈச
இரண்டாமடிப் பகுதி—ஐவ சி தாம் தம் பொருள் ஐந் துடைய
மூன்றுமடிப் பகுதி—நைவ, சித்து, ஆம் தவிர் மூன்றும்.

தமிழ் விளக்கும் திரு முல்லை வாயிலீசனே, செவ்வையாக எங்களை வசஞ்செய்க. ம. ந. ய. அழகிய வ. சி. என்னும் ஐந்தெழுத்தும் தனித்தனி வேறு பொருளுடையன. மகரம், மலத்தையும், நகரம், திரோதான சத்தியையும், யகரம், ஆன்மாவையும், வகரம், அருட் சத்தியையும், சிகரம், சிவத்தையுங் குறிக்கும்; மகரமும் நகரமும் நைந்தொழிதற்குரியன; சித்துப் பொருளாய ஆன்மாவும், அருளும் சிவமும் ஒன்றினொன்றாக வியாப்பியமாய் அடங்கும், என்றோதுகின்ற சைவசித்தாந்த நெறியை எமக்கு உபதேசஞ்செய், என்றவாறு. கச்சி ஆனந்த ருத்திரேசுரர் பதிகத்துள் இறைவழி பாட்டால் எவ்வகைத் துன்பமும் நீங்குமென்று வற்புறுத்தப்பட்டது.

## ஆனந்தக்களிப்பு

திருவேகம்பர் ஆனந்தக் களிப்புள் ஒன்று முதலாகப் பத்துவரையுள்ள எண்களை அவ்வத் தொகைகளையுடைய

பொருள்களைக் குறிக்கும் வண்ணம் அமைத்துப் பாடிய பாடல்கள் அமைந்துள்ளன.

உதாரணம் :—

"அஞ்சு மல மஞ்சவத்தை—பூதம்
அஞ்சு தன் மாத்திரையஞ் சிந்திரியம்
அஞ்சு தொழி லஞ்சுமாற்றி—எழுத்
தஞ்சு மஞ்சாக வமைக்க வல்லாராம்."

இக்களிப்பின் இறுதிச்செய்யுளுள் இறைவன் இல்லறத்திற்குந் துறவறத்திற்குந் தலைவனென்பதை நகைச்சுவை தோன்றக் கூறுவார்,

"எடுப்பது பிச்சை யமுதாம்—மார்பில்
ஏற்பது காமாட்சி கொங்கைச் சுவடாம்."

என்றார்.

முனிவரின் அகிலாண்டேசுவரி பதிகத்துள் சாத்திரக் கருத்துக்கள் மலிந்துள்ளன. அதன் ஐந்தாம் பாட்டு தாயுமான அடிகள் பாடிய 'இப்பிறவியென்னுமோ ரிருட்கடலின் மூழ்கியே,' என்ற பாட்டை ஒத்திருக்கிறது. ஒன்பதாவது பாட்டும் அத்தகைத்தே.

ஏழாவது திருப்பாட்டிலே, வினையைப்பற்றித் தாயுமானவர் கேள்விகேட்டதுபோல், முனிவரும் அம்மையை வினவியுள்ளார்.

"நீ யுள்ளதென்றன்று நானுமுள னன்றுமுதல்
னீங்காம லென்னி டத்தில்
நேசம்வைத் தேநீ யிருக்கநான் மலமாகி
நின்றதே துடலெ னக்கங்
கேயுமுறை யெங்ஙனே வினைகள்தரு மெனிலவைக
ளேறிடா தனுவி லாமல்
எட்டாத கேவலம் இருப்பமே லவைகன்ம
மாகா வவிச்சை கண்டு
காயம தளிப்பதெனி லின்புதுன் புறமுன்பு
கன்மமே திதனை யருள்வாய்

ககனமுக டுங்கடந் தளவில்புவ னங்களுங்
கரைபுரண் டெங்கு மோங்க
ஆயுமறை காணு தகண்டமாய் நின்றதிரு
வக்கினி சுரர்ம ருவுநீள்
அருள் ஞான வாரியே ராசைமே வியசெல்வ
வகிலாண்ட மென்னு மரசே."

முனிவர் இயற்றியதாகக் கூறப்படும் பஞ்சாக்கரமாலை துறைசையாதீன முதல்வராகிய நமச்சிவாய மூர்த்தியின் மீது பாடப்பெற்றது. நமச்சிவாய மூர்த்திகளின் சைவ சித்தாந்த உபதேசத் தனிப் பெருஞ்சிறப்பை முனிவர் அம் மாலை இறுதிப்பாட்டினிற் குறித்தனர்.

---

## ௬. கருவி நூல்களின் ஆராய்ச்சி

இதுகாறுஞ் சுவாமிகள் இயற்றிய சிறு காப்பியங்களின் சுருக்க ஆராய்ச்சி நிகழ்ந்தது. இனிக் கருவி நூல்களாகிய இலக்கணம், தருக்கம், என்னும் இவற்றின் சார்பாக அவர் இயற்றிய அரிய நூல்களை ஆய்வாம்.

### தோல்காப்பியம்

முனிவர் தொல்காப்பியப் பாயிர விருத்தியுள்ளும் முதற் சூத்திர விருத்தியுள்ளும், பிற உரையாசிரியர்கள் கருத்துக்களை ஆய்ந்து, தக்கன இவை, தகாதன இவை என்று இனிது அறிவுறுத்தினர். அரசஞ் சண்முகனார் என்பார் தொல்காப்பியப் பொதுப் பாயிரம் சிறப்புப் பாயிரம் என்னும் இரண்டிற்கே பெரியதோர் விரிவுரை இயற்றினர். முதற் சூத்திரத்திற்கு உரை அவர் இயற்றவில்லை. ஆசிரியர் சிவஞான யோகிகளுரையே சுருக்கமும், விளக்கமும் ஒருங்கே வாய்ந்தது. பாயிரத்துள் 'வடவேங் கடந் தென்குமரி' என்பது வடவேங்கடமும், தென் குமரியும் எல்லையாக உடைய நிலத்தைக் குறிக்கும் அன் மொழித் தொகைச் சொற்றொடர் என்றனர் முனிவர். சண்முகனாருள்ளிட்ட பிறரெல்லாம், அவ்வாறு கூறாது, அவ்வென்பது ஆகு பெயராய் அவ்விரண்டினையும் எல்லையாகவுடைய நிலத்தையுணர்த்திற்றென்றனர். அகரச் சுட்டு தனித்து நின்று ஒரு பொருளை ஆகு பெயராக உணர்த்துமாற்றலுடைய தன்றென்று, முனிவர் காட்டிய காரணமே பொருத்தமுடையதாகலான், அன்மொழித் தொகை என்பதே கருதற்பாலது. சுமார் இருபது ஆண்டு கட்கு முன்னே ஆகுபெயரன்மொழித் தொகை என்பதன் சார்பாகப் பெரிதோர் விவகாரம் காலஞ்சென்ற வித்துவான் திருமயிலைச் சண்முகம் பிள்ளை, சோழவந்தான் அரசஞ் சண்முகனார், முதலியோருள் நிகழ்ந்தது. சுவாமி வேதாசலம் அவர்கள் அன்மொழித் தொகை என்ற ஆசிரியர் கருத்தினையே பல காரணங்களாற் செப்பமாக வலியுறுத்தினமை காண்க. அவ்வழக்குச் சார்பாய

வியாசங்கள், ஞானபோதினி, செந்தமிழ், ஞானசாகரம் முதலியவற்றின் பழம் பகுதிகளிற் காணப்படும்.

'தென்குமரி' என்பது தெற்கிலிருந்த குமரி மலையை உணர்த்தும் என்பது அரசஞ் சண்முகனார் கருத்து. அது சரித்திர ஆராய்ச்சிக்குப் பொருந்துவதன்று. தொல்காப்பியம் இடைச் சங்கத்தார் நூல். அது குமரிக் கோட்டைக் கொடுங்கடல் கொண்டபின்பு குமரியாறு எல்லையாக நிலவிய காலத்தே இயற்றப்பட்டதென்பதே ஆராய்ச்சியாற் புலனும் என்பதைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டுள்ள எழுத்ததிகார முன்னுரையிற் காட்டப்பட்டது. ஆகலின் குமரி என்ற சொல் குமரியாற்றைக் குறிக்கும் என்ற முனிவர் கருத்தே கொள்ளற்பாற்று. முனிவர் வடமொழி இலக்கண ஆராய்ச்சியுடையராகலின் பாணினீயத்திற்குரிய பதஞ்சலியின் பேருரையினும், கையடர் முதலியோருடைய விரிவுரைகளிலுமுள்ள கருத்துக்களைத் தமிழ்க் கருத்துக்களோடு ஒத்துப் பார்த்து உண்மை நிலைநாட்டும் ஆற்றல் வாய்ந்தவரென்பது இவ் விருத்தியுட் காணப்படும். பொருளதிகாரம் என்ற பகுதி இலக்கண நூலுட் கூறப்படுதற்குரிய காரணத்தை முனிவர் அழகாகக் காட்டியுள்ளார். அப்பகுதி தமிழிற்கே சிறந்ததென்றார். 'முதுநூல்' என்பது அகத்தியமே என்பது முனிவர் கருத்து. அகத்தியத்திற்கு முன்னும் தமிழிலே நூல்கள் இருந்திருத்தல் கூடும். அரசஞ் சண்முகனார், இறைவன் திருவாயினின்று தமிழிற்கு முதனூலாக முப்பத்து மூன்று சொற்கள் தோன்றின எனவும், அவை நான்கு சூத்திரமாகப் பகுக்கப் பட்டன எனவும், அவை நுட்பமாக முத்தமிழ் இலக்கணமும் முப்பொருளும் தெரிக்கும் இயல்பினவாதலின், அச் சூத்திரங்கட்கு இசை நுணுக்கம் எனப் பெயர் வழங்கியதென்றுங் கூறுவர், (சண்முக விருத்தி 96). அந்நூல் எத்தகைத்தென நமக்கு விளங்கவில்லை. எவ்வாறாயினும் தொல்காப்பியத்திற்கு முற்பட்ட பெருநூல் அகத்தியமே; அதன் வழிநூலே தொல்காப்பியம்.

## ஐந்திரத்தின் வழித்தன்று

ஐந்திரமென்பது வடநூலாதலின் அதன் வழிவந்தது தொல்காப்பியமென்று கூறுங் கொள்கை தவறுடைத்தென்று மறுத்தொழித்தார். 'ஐந்திர நோக்கித் தொடுத்தானெனின், தமிழ்மொழிப் புணர்ச்சிக்கட்படுஞ் செய்கையுங் குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சொல்லிலக்கணங்களும், உயர்திணை, அஃறிணை, முதலிய சொற் பாகுபாடுகளும், அகம் புறம் என்னும் பொருட் பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுள் இலக்கணமும், இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமையானும் இவை எல்லாம் தாமே படைத்துக்கொண்டு செய்தாரெனின், முந்துநூல் கண்டென்பதனோடு முரணுதலானும், முற்காலத்து முதனூல் அகத்தியமென்பதும் அதன் வழித்தாய தொல்காப்பியம் அதன் வழிநூல் என்பதூஉம் துணியப்படும் என்க.' இதனால் முனிவருடைய நடுநிலை இனிது விளங்கும்.

ஆசிரியர் அகத்தியனாரொடு மாறுகொண்டு தொல்காப்பியனார் நூலியற்றினாரென்ற கொள்கை தவறுடையது என்பதே முனிவர் கருத்து. இதனால் இரு பேராசிரியரும் தம்முள் மாறுகொண்ட கதைகளின் போலித்தன்மை புலனாயிற்று.

## நூல் மூவகை

நூல்களின் உட்பகுதி இயல்புபற்றிச் சிறு நூல், இடை நூல், பெருநூல், எனப்படும் மூவகை நூல்களின் இயல்பு முனிவரால் சிறப்பாகக் காட்டப்பட்டன. சூத்திர மாத்திரமுடையது சிறு நூல்; சூத்திரமும் ஒத்துமுடையது இடை நூல்; சூத்திரம், ஒத்துப் படலம் என்ற முப்பகுதியுடையது பெருநூல் என்றனர்.

ஆசியர் தொல்காப்பியனார் புகழ் அக்காலத்தே தமிழ் நாட்டின் மாத்திரம் அன்றிப் பிற நாட்டினும் பரவி இருந்தது என்பது முனிவர் கருத்து. "தமிழ் வழங்கும் நிலமே

யன்றி நில உலகம் முழுதும் தம் பெயர் தோற்றுவித்தார் என்பது விளக்கிய 'மல்குநீர் வரைப்பென்றூர்" என்றது காண்க.

## கேட்போர்

சிறப்புப்பாயிர இலக்கணங்கூறுஞ் சூத்திரத்துள், 'கேட்போர்' என்பதற்கு முனிவர் நேராகப் பொருள் கொண்டு அச்சொல், நூல் கேட்டற்குரிய அதிகாரிகளைக் குறிக்கும் என்றனர். பிற ஆசிரியர் எல்லாரும் அதற்குக் கேட்டவர்கள் என்று உரை இயம்பினர். கேட்போர் நூல் தோறும் வேறு படுதலின், சிறப்புப்பாயிரத்தின் கண்ணும் "கேட்போர்" இன்னர் என்று தெரிவிக்கற்பாலதே. அவையின்கண் நூல்கேட்டோரைக் கூறுதல், நூல் கேட்டற் குரியாரைக் கூறுதல்போல, அத்துணை அவசியம் அன்றாகலானும், 'கேட்டோர்' என்னாது, 'கேட்போர்' என்றே "ஆக்கியோன் பெயரே" என்ற சூத்திரத்துங் கூறினமையானும் ஆசிரியர் சிவஞான யோகிகளின் கருத்தே அறிவிற்குப் பொருத்தமாதல் காண்க. இவ்வாறே யாப்பு என்பதற்கு இசைவு என்று முனிவர் பொருள் கொண்டார். பிறர் தொகுத்தல், வகுத்தல், முதலிய வழியின் வகையினை யாப்பென்றனர். வழி வேறு கூறப்பட்டிருத்தலின் யாப்பு என்பதனை வழியின் வகையாகக் கோடல் மிகையாகும். ஆதலால், வடநூலார் கொண்டதுபோல, யாப்பினை நூலியைபாகக்கோடல் பொருத்தமே. இனி யாப்பு என்பது பாவின் வகையினைக் குறிக்கும் என்பாரும் உளர். தொல்காப்பியம் படித்தான் என்றவிடத்து முதற்சொல் ஆகுபெயர் அன்று, திருவள்ளுவர் படித்தான் என்றவிடத்தே முதற்சொல் ஆகுபெயர். ஆகு பெயர்கள் சொல் மாற்றஞ் சிறிதும் இன்றி நின்றாங்குப் பொருள் தருவது. இந்தக் கருத்தை, முனிவர் விளக்கியதுபோலப் பிறர் எவரும் விளக்கிற்றிலர்.

## நூன் மரபு

"நூன் மரபு" என்பதற்குப் பொருத்தமான பொருள் இஃதென்பதை முனிவர் ஒருவரே இனிது காட்டினர்.

பிற உரை ஆசிரியர்கள் எல்லாம் எழுத்திலணக்கத்தை ஒரு வாற்றாற் றொகுத்து உணர்த்துவது என்று தவறாகப் பொருள் கொண்டனர். எழுத்ததிகார முழுதினுங் கூறும் இலக்கணத்தை இப்பகுதியில் ஆசிரியர் தொகுத்து உரைக்க வில்லை. எழுத்துக்களுக்கு இலக்கண நூலுள் மரபாக இடப் பட்ட பெயர்களாகிய குறில், நெடில், உயிர், மெய், முதலிய வற்றையே நூன்மரபென்பது உணர்த்துகின்றது. ஆதலின் நூன் மரபென்பது நூலினது மரபு பற்றிய பெயர் கூறு தலாம் என்று முனிவர் கொண்டாங்குக் கோடலே பொருத்தமாதல் காண்க.

## முதற் சூத்திரம்

முதற் சூத்திரம், அகரமுதல் னகரமுடிவாயுள்ள முப்ப திற்கும் உள்ள பொதுப்பெயர் எழுத்தென்றும், இயங்காது சார்ந்து நிற்பன எழுத்தென்று சிறப்பிக்கப்படாவென்றும் குறிப்பால் உணர்த்தினமையால் அது அகர முதலியவற் றிற்குப் பொதுப்பெயர் கூறுதல் நுதலிற்று என்று ஆசிரி யர் சிவஞானயோகிகள் உரைத்தமையே பொருத்தமானது. பிறர், இச் சூத்திரம் பெயருமுறையுந் தொகையும் உணர்த் திற்று என்று கொண்டனர். அவ்வாறாயின் அ ஆ இ ஈ என்று நெடுங்கணக்கு முழுவதும் எடுத்தோதுதல் வேண் டும்; அல்லாக்கால் பெயரும் முறையும் விளங்கா. நெடுங் கணக்கினுள் சார்பெழுத்து அடங்காமையின் அவை இன்னவென்பது விதந்தோதப்பட்டது. அகரமுதல் னகர இறுவாயாக எழுத்துக்கள் முறைப்படுத்தப் பட்டமைக்கு நுட்பமான ஏதுக்களை முனிவர் விளக்கியுள்ளார். இது பிறராற் காட்டப்படாத ஒன்று. அகரம் கலந்தே மெய் யெழுத்துக்கள் இயங்கும். அல்லாவிடத்து, அவை இடை யோசைபோலும். அகரம் எல்லா உயிரினுங் கலந்திருக்கு முறையை விருத்தியுள் முனிவர் இனிது விளக்கினமை காண்க. அ, இ, உ, என்பன முறையே அங்காத்துக் கூறும் முயற்சியானும், அவ்வங்காப்போடு அண்பல்லடி நாவிளிம் புறக் கூறும்முயற்சியானும், அவ் வங்காப்போடு இதழ் குவித்துக் கூறும்முயற்சியானும், பிறத்தலான், அப்பிறப்

பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.” ஆகார ஈகார ஊகாரங்கள் அகர முதலியவற்றிற்கினமாதலின், அவற்றைச் சாரவைக்கப்பட்டன. “எகரமாவது அகரக் கூறும் இகரக்கூறுந் தம்முளொத்திசைத்து நரமடங்கல் போல நிற்பதொன்றுமாகலானும், ஒகரமானது அகரக் கூறும் உகரக்கூறுந் தம்முளொத்து இசைத்து அவ்வாறு நிற்பதொன்றாகலானும், அவை அவற்றின் பின்னர் முறையே வைக்கப்பட்டன. ஏகார ஓகாரங்கள் இனமாத லின் அவற்றின் பின் வைக்கப்பட்டன. “அகர விகர மைகாரமாகும்,” அகர உகர மௌகாரமாகும். ஆகவே அகரம் எல்லா எழுத்தினுங் கலந்து நிற்குமாறு அறிக. இனி, குற்றிகரம், குற்றுகரமென்னுது குற்றியலிகரம் குற் றியலுகரமென்பதற்கு முனிவர் நல்ல காரணங் காட்டினர். மகரக்குறுக்க முதலியனபோலக் கூட நின்ற எழுத்துக் காரணமாக மாத்திரை குறைவுபடாது, என்றும் அரை மாத்திரையாகவே நிற்குமியல்புபற்றி ‘இயல்’என்ற மொழி இணைக்கப்பட்டதென்றார்.

வடநூற்கும் தென்னூற்குமுள்ள வேறுபாடொன்று முனிவராற் குறிக்கப்பட்டுள்ளது. “ஆசிரியர் தொல்காப் பியனார் யாதானுமோர் காரணம் பற்றியே குறியிட்டானுவ தல்லது வடநூலார்போலக் காரணம் பற்றுதுங் குறியிட் டாளுதல் யாண்டுமின்மையானும்” என்றவிடத்தறிக.

## நடுவு நிலைத்திணைக் காரணம்

பாலைத்திணையை நடுவுநிலைத்திணை யென்பதற்குக் காரணங் கூறுமிடத்து, முனிவர் பிறர் கூறும் பல்வேறு காரணங்களையும் எடுத்து ஆய்ந்து அவற்றின் குறைகளை விளக்கித் தக்க காரணத்தை இறுதியிற் கூறும்முறை அவ ரது உயர்ந்த வழக்கிட்டு ஆற்றலைக் குறிக்கும். இத்தகைய முறை களவியல் உரையுள்ளுங் காணப்படும். பாலைத்திணை எவற்றின் நடுவே நிற்பதென்று ஆயுங்கால் (1) எண்ணு முறையிலே நடுவு நிற்பதென்றல் பொருந்தாது. முதற்பொ ருண் முறைபற்றி முல்லையை முதலாக வைத்துஎண்ணினர்.

உரிப்பொருண் முறைபற்றிக் குறிஞ்சியை முதலாக வைத்து எண்ணினார். அவ்விருமுறைமைக்கண்ணும் பாலைத்திணை நடுவு நிற்பதன்று (2) நால்வகையுரிப் பொருளினும் இடை இடையே பிரிவு நிகழ்தலின், அதுபற்றி நடுவுநிலைத்திணை யென்றாரெனின் புணர்ச்சியும் அவ்வாறிடையிடை நிகழ்தல் பற்றிக் குறிஞ்சியும் நடுவுநிலைத்திணை எனல்வேண்டும். அவ்வாறு கூறும் மரபில்லை ; (3) சிறுபொழுதுள் நடுவண தாகிய நண்பகற்காலந் தனக்குக் காலமாதல்பற்றி அங் ஙனங் கூறினாரெனின், இருத்தல் இரங்கல்களும் அவ்வாறாக லின், அதுபற்றி முல்லை நெய்தல்களும் அவ்வாறு கூறப்படு மாகலானும் (5) உலகியற் பொருளாகிய அறம் பொருள் இன்பங்களுள் நடுவணதாகிய பொருட் பிரிவு காரணமாதல் பற்றி அங்ஙனங் கூறினாரெனின், பரத்தையிற் பிரிவு, ஓதற் பிரிவுபோல்வன ஏனையவற்றிற்குங் காரணமாகலின் பொருண் மாத்திரைக்கே அது காரணமென்பது படாமை யால் 'அங்ஙன முரைப்பனவெல்லாம் போலியென்றொழிக' என்றனர். நிலம் பகுத்தோதுங்கால், நடுவணதைக் குறி யிட்டாராகலின், அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களுமா காது, அவற்றின் வேறுமாகாது. தனக்குரிய நிலம் நடு நிகர்த்ததாய் நிற்றல் பற்றி நடுவுநிலைத்திணை எனக் குறி யிட்டானுதலே ஆசிரியர் கருத்தென்க. (38-ம் பக்கம்)

"முல்லையுங் குறிஞ்சியு முறைமையில் திரிந்து நல்லியல் பழிந்து நடுங்கு துயருறுத்துப் பாலை என்பதோர் படிவங் கொள்ளும் என்பதனாலும் உணர்க" என்றார்.

சிறுபொழுது ஐந்தென்பதே முனிவர் கருத்து எற்பாடு என்பதைப் பிற்பகல் எனப் பிறரும், ஞாயிற்றி னுதயம் என முனிவருங் கருதினர்.

## உரையாசிரியர்

உரையாசிரியருள், சேனாவரையரையே, முனிவர் போற்றுகின்றார். சேனாவரையர் வடநூற் பயிற்சி உடைய வர். அவர் எழுத்ததிகாரத்திற்கு உரைவகுத்திலர். முனிவர் நச்சினார்க்கினியர் முதலியோரைத் தாம் பிடித்ததே சாதிப்

பேமென்னும் வகையினராகக் கருதினர். பிற உரையாசிரியர்களைப்பற்றிப் பேசும்போது, முக்குணங்களும் மாறிமாறி வருதலின் அதுபற்றி எனைத்துணை நுண்ணறிவாளரும் ஒரோ வழி மயங்குதல் இயல்பென்றனர்.

"அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்காலின்மையரிதே வெளிறு" "குணநாடிக் குற்றமுநாடி அவற்றுள் மிகைநாடி மிக்ககொளல்" என்ற திருக்குறட்பாக்களையும் எடுத்துக் காட்டினர். வடமொழியிலே ஆசிரியர் பாணினியார் தொல்லாசிரியர் சூத்திரங்களுட் சிலவற்றை மறுத்தனர். ஆசிரியர் வாருசியார் பாணினியாரைச் சில விடங்களில் மறுத்தனர். ஆசிரியர் பதஞ்சலியார் அவ்விருவரையும் மறுத்தனர். ஆசிரியர் அகத்தியனார், தொல்காப்பியர், பதஞ்சலியார் என்போர் தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவன் அருள் பெற்றுளாராதலின், அன்னோர் மயங்கி யாதுங் கூறுவாரல்லர் என்பது முனிவர் கருத்து. முதற்சூத்திர உரையிற் போந்த பிற நயங்களை நூலுட் காண்க.

## சூறாவளி

"இலக்கண விளக்கம்" என்பது திருவாரூர் வைத்தியநாத நாவலர் என்பாரால் இயற்றப்பட்டது. அது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணமுங் கூறும் நூல். நன்னூல் எழுத்துஞ் சொல்லும் மாத்திரமே உடைமையால், இந்நூலே, பிற்காலத்து நூல்களுள், ஐந்து இலக்கணத்தையும் விரித்துணர்த்துவது. இதனுட்போந்த குற்றங்களை ஆசிரியர் சிவஞான முனிவர் எடுத்துக் காட்டுவான் இயற்றிய கண்டன நூல், "இலக்கண விளக்கச் சூறாவளி" என்பது. முனிவர் காலத்தே ஆராய்ச்சி நூல் என்பது வழக்கில் இல்லையாயினும், சூத்திரவிருத்தி, சிவஞான பாடியம் முதலியவைகளிலே ஆராய்ச்சி முறைகள் செவ்வையின் அமைந்துள்ளன. அக்காலத்தில் வழங்கிய கண்டன நூல்கள் இவ்வாறு உண்மை தெளிதற்கு முயலாது, கண்டிக்கப்படும் நூல்களிலுள்ள குற்றங்களை மாத்

திரம் எடுத்துக்காட்டும் நோக்கத்தோடு இயற்றப்பட்டமை யால், அந்நோக்கத்தைச் செவ்விதின் நிறைவேற்றுதற் பொருட்டுக் குற்றம் என்று பாராட்டத் தகாதவற்றையுங் குற்றமாகக் கூறுதல் வழக்கமாய் இருந்தது. அதற்கு ஒரு காரணம், முற்காலத்தில் இல்லாத பல கட்டுப்பாடுகள் இலக்கண நூலுள்ளும் புகுந்தமையேயாம்.

இவைகள் தொல்காப்பியத்துள்ளும் சங்க நூல்களுள் ளும் காணப்படுமாறு இல்லை. "மலைமகள்" என்ற விடத்து, அதன் பொருள் யார்க்குந் தெளிவாய் விளங்கக்கூடியதே. அது மலையுமகள் என்று பொருள்படக் கூடும் என்று கொண்டு அதனைக் கண்டித்தல் பிற்கால முறைக்கு ஒத்த தாம் அன்றி, முற்கால வழக்கொடு பட்டதன்று. பிற்கால முறைக்கு ஏற்ப முனிவர் கண்டனநூல் இயற்றுதலின்; "மலைமகள்" என்று தொடங்கிய இலக்கண விளக்க வாழ்த் துச் செய்யுள் மங்கலமாகத் தொடங்கவில்லை என்று அதனை மறுப்பாராயினர். பிறவுமன்ன. திருவாவடுதுறை ஆதீனத் தைச் சார்ந்த ஈசான தேசிகர் இயற்றிய இலக்கணக் கொத் துரையுள், மறுக்கப்படுவன பல உள்ளன. அவற்றை முனிவர் குறிப்பால் சில இடங்களில், தம் உரைகளிலே மறுத்தனர். அந்நூலுக்குத் தனியே மறுப்பெழுதாமைக் குக் காரணம், அவ்வாறு செய்யும்படி, முனிவரைத் தூண்டு வாரின்மையே. அது சிவசமவாத உரை மறுப்பு முதலிய கண்டன நூல்களுள், மந்தபுத்தி உடையார்க்கும் புத்திப் பிரமிசம்[1] வாராமற் சிறிதொரு வழிகாட்டுக, என்று பெரி யோர் ஆஞ்ஞாபித்தலின் சிற்சில தோடங்கள் எடுத்துக் காட்டுதும், என்றமையால் தெளியப்படும். இலக்கணச் சார் பாக முனிவர் இயற்றிய கண்டனநூல் மேற்காட்டிய ஒன்றே. ஏனையவை, சித்தாந்த சாத்திரச் சார்பாயன.

## தருக்கம்

கருவிநூற்சார்பாக, முனிவர் தர்க்க சங்கிரகம் என்ற மொழிபெயர்ப்புநூல் இயற்றியுள்ளார். தருக்கமுறைகள் எல்லாம் தமிழர் அறிந்ததே.

---

1. புத்திப்பிரமிசம் - அறிவுக்குறை.

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு."

என்பதற்கு இணங்கவே தமிழர் மெய்ந்நூற் பொருளை ஆய்ந்தனர். வடமொழியிலே கௌதமர் என்பாரும் கணாதர் என்பாரும் இரண்டு தர்க்க நூல்கள் இயற்றினர். முன்னையவர் செய்தது நியாய நூல் என்றும், பின்னவர் செய்தது வைசேடிகம் எனவும் பெயர் பெறும். இரண்டும் சிறுபான்மையே தம்முள் வேறுபடுவன. இவ் ஆசாரியர்கள் தத்தஞ் சமயக் கொள்கைகளையே வழக்கு முறையாக நிலைநாட்டியவர்கள். இவர்கள் கூறும் நியாயங்களும் முறைகளும் பொதுப்படப் பலரால் ஏற்றுக்கொள்ளத்தக்கன வாதலின், அவற்றைத் தருக்க நூலாக வடநூலார் யாவருங் கருதினர் போலும். ஆங்கிலத்திலே தருக்கநூல், தருக்கமுறைகளையே செவ்வையா யுணர்த்துவது. அதற்கும் வடமொழி நியாய வைசேடிக நூல்களுக்கும் வேறுபாடுண்டு. ஆங்கிலத் தருக்கநூல் ஒரு சமயத்தை நாட்ட வந்ததன்று. தருக்க மதக் கொள்கைகட்கும் சைவசித்தாந்தக் கொள்கைகட்கும் பெரிதும் வேறுபாடுண்மை நூலாராச்சியால் இனிது விளங்கும். தருக்க மதத்தாருள், ஒரு சாரர் புத்தர்கள் கூறும் கணபங்கவாதத்தைச் சில பொருள்கட்கு உண்டென்பர். தருக்கர் பரமாணுகாரணவாதிகள். நிலம், நீர், தீ, வளி, என்ற நான்கும் அநித்தப் பொருள்களென்றும், அவற்றின் காரணங்களாகிய நால்வகைப் பரமாணுக்களே நித்தியப் பொருளென்றுங் கூறுவர். மாயையே சடவுலகத்திற்குக் காரணமாய் நித்தப் பொருளாமென்னுஞ் சைவ சித்தாந்தக் கொள்கை தருக்க மதத்தாருக்கு உடன்பாடன்று.

மீமாஞ்சை, சாங்கியம், யோகம், ஏகான்மவாதம் என்பன போல, நியாயமும் வைசேடிகமும், வெவ்வேறு தத்துவக்கொள்கை யுடைமையால், இவை ஆறினையும் ஆறு சாத்திரமென வடநூலார் கொண்டனர்.

பொதுவாகப் பொருள்களை ஆய்தற்குக் கருவி நூலாயிருத்தல் பற்றியே தருக்கநூல் நமக்குப் பயன்படுவது. நியாய வைசேடிக மூலநூல்களை நன்குணர்ந்த அன்னம்

பட்டரென்னுந் தெலுங்குப் புலவர் தருக்க சங்கிரகம், எனப்பெயரிய ஒரு நூலும் தருக்க சங்கிரக தீபிகை என்ற உரையும் இயற்றினர். இவ்வுரை அன்னம் பட்டீயமென்று பெயர்பெறும். மூலத்தையும் உரையையும், ஆசிரியர் சிவ ஞான யோகிகள் தமிழிலே அழகாக உரைச்செய்யுளாக மொழிபெயர்த்தனர். தருக்க நூலார் பொருள்களை ஏழாகப் பகுத்தாய்வர். அவையாவன:— பொருள், குணம் தொழில், பொதுமை, சிறப்பு, ஒற்றுமை, இன்மை என்பன. பொருளாவன: நிலம், நீர், தீ, வளி, வான், காலம், திசை, உயிர், மனம் என ஒன்பது வகைப்படும். மேற் சொன்ன பொருள்களின் குணம் இருபத்து நான்காம். பரமான்மாவும், சீவான்மாவும் என ஆன்மா இருவகைப் படும். பரமான்மா, முற்றுணர்வுடையவன். அவன் திருவுள்ளப்படி உலகந்தோன்றி யொடுங்கும்; உயிர்கள் சிற்றறிவுடையன; பிறந்திறந்துழல்வன; மனத்தோடு கூடாத இடத்து உயிர்க்கு அறிவில்லை. மனம் அணுவளவிற்றாய் ஆன்மாக்கடோறும் வெவ்வேறாயிருக்கும்; எல்லாவகைத் தொழிலும்—எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தலென்பவற்றுள் அடங்கும்; பொதுமை பல பொருட்குப் பொதுவாய தன்மை; சிறப்பு, ஒன்றிற்கேயுரிய தனித் தன்மை. உறுப்புடையானுக்கும் உறுப்பிற்கும் உள்ள நீங்காத் தொடர்பு ஒற்றுமை யெனப்படும். இன்மை யென்பது முன்னின்மை, அழிந்நிலதாதல், என்றுமின்மை, ஒன்றி னொன்றின்மையென நான்கு வகைப்படும். இவற்றின் விரிவெல்லாம் நூலுட் காண்க.

## கண்டனம்

இனி, முனிவரியற்றிய சாத்திரச்சார்பாய கண்டன நூல்களைப் பற்றி ஆய்வாம். சித்தாந்த மரபு அல்லது மரபட்டவணை யென்ற ஒரு நூல் துறைசை யாதீனத்தைச் சார்ந்த ஒருவரால் எழுதப்பட்டது. அதற்குக் கண்டனம், தருமையாதீனச் சார்பினராய பிறிதொருவரால் இயற்றப் பட்டது. அக் கண்டனத்திற்குக் கண்டனம் ஆசரியர் சிவ ஞானயோகிகளா லியற்றப்பட்டது. இதனுள் மரபட்டவணை

பிழையுடைத்தென்பது ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால், அந்நூலை மறுத்தவர் மறுத்ததற்கு உரியனவற்றை யெடுத்துத் தடையாதல் மறுப்பாதல் சொல்லாது ஆசங்கிக்கத் தகாதனவற்றை எடுத்து ஆசங்கித்ததற்காகவே, முனிவர் தமது கண்டன நூலினை எழுதுவராயினர்.

கண்டன நூலின் பிற்காலப் போக்கே இதன்கண் அமைந்துள்ளது. ஆனால் முனிவர் எதிரிகள்மீது வசை மொழிகள் புகலவில்லை. சிலவிடங்களில், அளவிற்கு மிஞ்சிய நுட்பத்துடன் எதிரிகளைக் கண்டித்தமையும், தமது கூற்றிற்குத் தக்க காரணத்தை எதிரிகட்கு உரைத்தல் கூடாதென்று சொல்லும் பான்மையும், இக்காலத்தாராற் போற்றப்படமாட்டா. "சைவசித்தாந்திகளை வழிபட்டுக் கேட்டால், மலைவறச் சொல்லுவார்கள்" என்று எதிரி படர்க்கையிற் சொன்னமையால், தான் சைவசித்தாந்தி அல்லன் என்று அவன் கூறியதாகுமென முனிவர் நவில்கின்றார். தம்மையும் உட்படுத்திப் படர்க்கையிற் கூறும் வழக்கம் இக்காலத்திலும் உள்ளது. அதனைக் குறை கூறுதல் கண்டனப் போக்கின் கடுமையை உணர்த்துமன்றோ? இக் கண்டன நூல்களுள், எடுத்து விளக்குங் கருத்திற்குரிய மேற்கோள்களின் தொகுதிகள் அழகாக ஆண்டாண்டுக் காணப்படும்.

முனிவர் இயற்றிய சிவசமவாத கண்டனம் என்பது, ஞானப்பிரகாசர் என்பார் சிவஞான சித்தியார்க்கு எழுதிய சிவசமவாத வுரையின் மறுப்பு. இவர் திருவண்ணாமலை என்னுஞ் சைவாதீனத்தைச் சார்ந்தவர். இவர் தமது விருப்பப்படி தம்கொள்கையை எழுதித் தனிநூல் வெளியிட்டிருப்பின், அதனை முனிவர் மறுத்துத் தனிநூலொன்றெழுதக் கருதார். சைவசித்தாந்த நூலாகிய சிவஞான சித்திக்குச் சிவசமவாத வுரை கூறினமையால் சிவஞான சித்தி கற்பார்க்கு மயக்கம் எய்தாமைப் பொருட்டு, இம் மறுப்பினை எழுதினரென்க. ஞானப்பிரகாசர் அரூப சிவசமவாதமென்னும் மதத்தினர். முத்தியிலே உயிரும், முதல்வனுக்குச்சமமாய நிலையடைந்து ஐந்தொழில் இயற்று

மென்பது அவருடைய முக்கிய கொள்கையாகும். பிற வேறுபாடுகள் நூலுள் விளக்கப்பட்டன. ஞானப்பிரகாசர் தமிழுணர்ச்சி சான்றவரல்லர். வடநூலுணர்ச்சி மாத்திர முடையவர். அவர் தமிழ்நூலாகிய சிவஞான சித்தியார்க்கு உரைகூறப் புகுந்தமை அடாதென்ற முனிவரது கருத்து மிகவும் பொருத்தமானதே. ஆசிரியர் சிவஞான முனிவரது வடநூற் பயிற்சியும் வடசொல் வழக்கு மிகுதியும் இதனுட் காணப்படுமாறொப்ப அவரது பிறநூல்களுட் காண்பதரிது.

"த்யஜே தேகம் குலஸ் யார்த்தே" "சரோகு பிச்சாகரீயவி" முதலிய வடநூல் மேற்கோள்களும் இதன் கண்ணேதான் காணப்படுகின்றன.

## மணிப்பிரவாளம்

சிவஞான பாடியத்துள், வடநூற் கருத்துக்கள் தமிழிலேயே தெரிக்கப்பட்டன. ஞானப்பிரகாசர் வடநூற் பயிற்சி மிக்காராகலின், இம் மறுப்பின்கண், ஆரிய மேற்கோள்கள் மொழிபெயர்க்கப்பட்டிலபோலும். இம்மறுப்புச் செந்தமிழொடு தற்சமம் தற்பவமெனப்படும் வடசொல்லும், அங்ஙனம் வாராத ஆரியச் சொல்லும் விரவிய நடையில் எழுதப்பட்டுள்ளது. "அருளினலாகமத்தே" என்ற செய்யுளுரையில், ஆன்மா சிவனுக்கடிமையல்லன், சிவனைப்போலத் தானுஞ் சுதந்திரன் என்றதன் மறுப்பாக எழுதிய பகுதியை உதாரணமாக இங்கே தருகின்றோம்: "விஞ்ஞான தீக்கையில்.....................சிவதருமாகமத்தில், "தானத்துக்குப் பரமசற்பாத்திரஞ் சிவன்" என்று ஓதுதலின், அப்பெற்றியுடைய சிவபரம சற்பாத்திரத்தில் தானஞ்செய்த பொருளைச் சிவனுடைமை யன்றென்று மாறுற்று மீட்டபகரித்தலின், தத்தாபகாரிகளாய்ச் செய்யுங்கிரியையெல்லாம் இங்ஙனம் மனம்வேறு செய்கை வேறாகக்கொண்டு செய்தலிற் பரம வஞ்சகர்களாய்ப் 'பரமுத்தியில் ஆன்மாச் சிவன் வழித்தாய் நிற்பதின் றென்றலின் சிவன் அநாதி தொடங்கி இதுகாறுஞ் செய்துபோந்த உபகா

ரத்தை மறந்த கிருதக்கினர்களாய், நான் சுதந்திரனென்று கொண்டு நிற்றலின், அகங்காரிகளாய்த் தம்பாற் காணப் படும் சிவசாட்குண்ணியத்தைச் சிவசாட்குண்ணியம் அன்று, நஞ்சாட்குண்ணியமேயென்று பேசுதலின் துர் விவகாரிகளாய், 'திலேதைலவிவஸ்தித்வா பஹிரந்தர் யவ் வஸ்தித:' என்னும் வசனத்தின்படி சர்வாந்தரிமியாய் நிறைந்திருக்கிற சிவனுக்கு ஔபச் சிலேடிக வியாத்தியினாற் சர்வாந்தரியாமித்துவம் இல்லை' என்று நானதை ஆரோ பித்தலின், சுவாமித்துரோகிகளாய் 'க்ஷீரே க்ஷீரம் ஜலே ஜலம்' என்ற வசனத்தின்படி பிரிக்கப்படாமற் சம்பந் தித்திருக்கும், ஆன்ம சிவன்களுக்கு ஒட்டில்லை' என்று பிரித்துப் பேசுதலானும், வேதாந்தத்தின்கணுள்ள 'ஏக ஏவாத்மா' என்றற்றொடக்கத்து வசனங்களுக்குப் பொருள் தெரியமாட்டாது, 'வேதஸாரம் சிவாகமம்; வேதாந்தார்த் தம் இதம் ஞானம்' என்னுஞ் சிவாகம வசனங்களின்படி சூத்திரமும் பாடியமும் போலத் தொகை வகையாயும் பொதுச்சிறப்பாயும் ஒரு கருத்தினவாயுமிருக்கும் வேதத் தையுஞ் சிவாகமத்தையும் பேதித்து பிரமாணப்பிரமா ணஞ்சொல்லுதலானும், அந்தச்சித்திரகாரிகளாய், 'இதி வர்ணாஸ்ரமா சாராந்மனசாபிநலங்கயேத்' என்றற்றொடக் கத்து ஆகம வசனங்களை யதிக்கிரமித்தொழுகுதலின், சிவாஞ்ஞா பங்ககாரிகளாய்ச் சிவவாக்கியங்களை மனம் போனபடியெல்லாம் பேதித்து அர்த்தஞ்செய்தலின், இவ் வாறு பரமசிவத் துரோகிகளாயிருக்கும் நும் மனோருடன் சம்பாஷணஞ்செய்தல் நரகபதன ஏதுவாகலின் நும்மைக் காணில் தூர வொதுங்கிப்போதலே செயற்பாலதன்றி, முகம்பார்த்து உரையாடுதல் தக்கதன்று."

## வைரக்குப்பாயம்

'என்னை இப் பவத்திற் சேரா வகையெடுத்து,' என் னுஞ் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்துள், 'எடுத்து' என்னுஞ் சொல்லிற்கு ஞானப்பிரகாசர், "சின்மாத்திர சுத்த கேவலமாகச் சேடிக்கப்பண்ணி," என்று பொருள்

கூறினர். அதனை மறுத்து, எடுத்து என்னுஞ் சொல்லிற் கிட்ட வைரக் குப்பாயம் என்னும் விரிவுரை ஒன்று ஆராய்ச்சி நுட்பங்களனைத்தும் அமைய ஆசிரியர் சிவஞான முனிவரால் இயற்றப்பட்டுள்ளது. ஒரு சொற்குப் பொருள் கொள்ளுமிடத்து, செம்பொருள், இலக்கணப் பொருள், குறிப்புப்பொருள் என்ற மூவகைப் பொருளில் ஒன்றே கொள்ளற்பாலதென்பது முனிவர் கருத்து. செம்பொருள் சொல்லிற்குரிய நேர் பொருள்; இலக்கணப் பொருள் ஆகுபெயர்ப்பொருள், அன்மொழித் தொகைப் பொருள் என்பன.

கங்கையின்கண் வேடச்சேரி என்றவிடத்து, கங்கை என்பது கங்கைக் கரையை உணர்த்தி நிற்றல் இலக்கணையாலென்க. சொல்லுவான் குறிப்பொடு இயைந்த பொருள், குறிப்புப்பொருள் எனப்படும். "என்னை இப் பவத்திற் சேரா" என்ற செய்யுள், தமது நூல்வழி உணர்த்துங் கருத்தோடு இயற்றப்பட்டது. அது தீக்கையின் இயல்பு கூறவராமையின், "எடுத்து" என்பதற்குச் சின்மாத்திர கேவலமாய்ப் பண்ணி, என்ற பொருள் குறிப்புப் பொருளாகவுங் கொள்ளப்படுதற்கு இடமில்லை. வெளிப்படை, குறிப்பு, இயைபு என்ற மூன்றினுட்படாத பொருள் கொள்ளத்தக்கது அன்றென்றமை, ஆராய்ச்சியாளர் உற்றுநோக்கத் தக்கதாகும். இங்ஙனம் காட்டிய மறுப்பிற்கு ஞானப்பிரகாச முனிவர் வகையார் மறுப்பு உரைத்தமையின், அம்மறுப்பினை யொழிக்கவே, "எடுத்து" என்னுஞ் சொல்லிற்கு முனிவர் "வைரக்குப்பாயம்" இட்டனர். ஞானப்பிரகாச முனிவருரை இருமொழியும் நன்குணர்ந்த சிவாக்கிரயோகிகள் மறைஞான தேசிகர் முதலியோருரையோடு முரணிற்று.

ஆசிரியர் சிவஞான யோகிகள், எத்தகைய புட்டிற்கும் பல்பொருள் கூறும் பேராற்றல் உடையரென்பது, இச்செய்யுளுக்கு அவர் கூறிய வெவ்வேறு பொருள்களால் இனிது விளங்கும்.

"என்னைஇப் பவத்திற் சேரா
வகைஎடுத்து என்சித் தத்தே
தன்னைவைத் தருளி னாலே
தாளிணை தலைமேற் சூட்டும்
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய்
மேவிவாழ் மெய்கண் டான்நூல்
சென்னியிற் கொண்டு சைவத்
திறத்தினைத் தெரிக்க லுற்றாம்"

என்பது பாட்டு. முதல் இரண்டடிகளுக்குப் புதுப்பொருள் வருமாறு. எனக்குப் பிறவி சாராவகையாகச் சிவஞான போதநூலை எடுத்துணர்த்தி, "என் உள்ளத்திலே அந்நூலைச் சிந்திப்பித்துத் தெளிதல் நிட்டை என்னும் இருவகை முயற்சியும் முற்றுப்பெற்றதன் மேலே தலைமையாகச்செய் விக்கும்" என்பது. மற்றொரு பொருள், "என் தலைவ னை மெய்கண்டான் பவன் செய்த நூலாகிய பவமெனப் படும் ஆகமத்தின் திரட்சியாகச் சிவஞானபோத நூலைத் திரட்டி யெடுத்துத் தமிழின்கண்ணே எம்மனோர்க்குச் சித் தமாயுள்ள அதன் பொருளைப் பதித்து அதனை எனக் கோதுவித்தற்பொருட்டுக் கருணையினாலே திருவடித் தாமரை இணைகளை என் புன்தலைமேற் சூட்டித் தீக்கை செய்யும்" என்பது. இன்னும் என் தலைவன், மாயப்பிறவி யுட்படாவகை அருளினாலே திருவுருவெடுத்து, என் அறி வின்கண்ணே அதனை நினைவு கூறுமாறு பதித்துத் தாளிணை தலைமேற் சூட்டும் என்ற பொருளுங் கூறப் பட்டது.

## தடைவிடை

இனி, முனிவர் இயற்றிய கம்பராமாயண முதற்செய் யுள் சங்கோத்தர விருத்தி என்பது, ஒரு பொருளை ஆய்வார் தடை கூறுபவரெனவும் விடை கூறுபவரெனவும் இரு பகுதிப்பட்டு, வாதித்து உண்மை தெளிதற்கு வழிகாட்டி யாகவுள்ளது. இக்காலத்துக் கலாசாலைகளிலே வாத சபை களிலே நிகழும் நிகழ்ச்சிக்கு ஆதாரவாயுள்ளது என்று இத

னைக் கூறுதல் மிகையன்று. இதன் போக்கினை ஒரு சிறிது இவண் காட்டுதும் :

“ நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழும் உண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே ”

என்ற செய்யுளிலே நாடியபொருள் கைகூடும், என்ற அளவிலேயே எல்லாம் கிடைக்கும் என்பது விளங்குதலின் ஞானமும் புகழும் உண்டாம், வீடியல் வழியதாக்கும், வேரியங் கமலைநோக்கும் என வாளா விரித்தல் கூறியது கூற லாம் அன்றோ? நாடாது பெறுவதல்லவோ எளிதிற் பெறுவதாகும். தேடிப் பெறும்பொருள் கைகூடுதல் அரிய தாகலின் அதனாற் போந்த சிறப்பு யாது? 'பொருள் பல வாதலின்,' பொருள்களென்று உரையாமை வழு அன்றோ? கூடுமென்பதே போதுமாயிருத்தலின் 'கைகூடும்' என்றல் வேண்டா கூறலாம் என்றனர் முனிவர். இந்த ஒரு தொடர்க்குரிய தடைகட்கு உரிய விடைகள் மாத்திரமே இங்குத் தருகின்றோம். ஒரு பொருளில் நாட்டமுற் றிருப்போர்க்கு அக்காலத்து வேறோர் பொருள் கை கூடின் அப்பொருளில் அவர்க்கு விருப்பஞ் செல்லாதாம். நாடியபொருள் கைகூடின் மகிழ்ச்சி மேன்மேல் உண்டா மாகலின், அவ்வாறு மகிழ்ச்சியுண்டாம்படி நாடிய பொருளே யெளிதிற் கிடைக்குமென்பார் “நாடியபொருள் கைகூடும்” என்றார். நாடுதல் என்பது ஆராய்தல் என்னும் பொருளுடையது. நாடிய பொருள் மக்கட்கு உறுதிபயப் பன இவையெனச் சான்றோரால் ஆய்ந்தோதப்பட்ட பொருள் எனினும் அமையும். பொருள் அஃறிணை இயற் பெயராய்ப் பன்மைக்கண் வருமாதலின் பொருள்கள் என்று பன்மை விகுதி சேர்த்துக் கூறவேண்டியதில்லை. ஈண்டுப் பொருள் என்றது, கல்விப்பொருளும் செல்வப் பொருளுமே. “இருவகைப் பொருள் கல்விப்பொருள் செல்வப் பொருள்” என்றார் திவாகரனார். இரு பொருள் களிலே, கல்விப்பொருள் முற்பட்டதாகலின், அதன்பயனாக

ஞானமும் செல்வப் பொருளின் பயனாகப் புகழும் உண்டாமாதலின், "ஞானமும் புகழுமுண்டாம்" என்றார். கை என்பது துணைச் சொல்லாய்க் கூடுதலைச் சிறப்பித்து நின்றது. எளிதிற் கூடும் என்று பொருள் தருதலின், அது வேண்டியதாயிற்று என்றது காண்க. பிறவும் அன்ன.

## நண்பொருள்

காஞ்சிமாநகர வைணவப் புலவர்கள், பொருள் கூறும்படி முனிவர்க்கு எழுதிய விருத்தத் தனிப்பாடல்கள் இரண்டில் ஒன்று இழிவழக்குடைய சொல்லால் ஆயது; மற்றொன்று வருமாறு.

"அங்கோழி முட்டை யுறப்புவி
ஆண்டல ரால்அவிந்த
வெங்கோழி முட்டைமுன் சேர்ஆ
உருப்பவெல் வெம்மைபஞ்சே
ருங்கோழி முட்டை வரும்பாலை
போல உருக்கும்அந்தோ
செங்கோழி முட்டைக் கருப்போ
லெழுந்த செழுந்திங்களே."

தலைவன் பிரிவாற்றாத தலைவி இளவேனிற் காலத்தே தூதுவிடுங் கருத்தினுடன் தோழிக்குச் சொல்லியது.

பதப்பிரிவு:— "அம் கோழி முட்டு ஐ உறப்புவி ஆண்டு அலரால் அவிந்த வெம்கோ, 'ழி' 'மு' 'டை', முன்சேர் 'ஆ' 'உரு' 'ப' (ஆழி, உருமு, படை) வெல் வெம்மை, பம் சேரும்கோழி (கோழிபம்=கொழுத்த யானை) முள் தை வரும் பாலை போல, உருக்கும் அந்தோ, செம் கோழி முட்டைக் கருபோல் எழுந்த செழும் திங்களே."

பொழிப்பு :—"அழகிய உறையூரானது முட்டுப்பாட்டினை உறும்படி, உலகத்தை ஆண்டு, மண் மாரியால் அழிந்த வெவ்விய அரசன் உருட்டுஞ் சக்கரமும், அவனைக் கொல்ல வந்த மேகமும், அவன் படைக்கலமும் போன்ற வெப்ப

மும், கொழுத்த யானையும் முள்ளும் பரந்து கிடக்கும் பாலை நிலத்தைப்போல, செவ்விய கோழியினது முட்டையாகிய கருவைப்போல் எழுந்து ஒளிர்கின்ற வளவிய திங்கள் ஒன்று உருக்குதலைச் செய்யாநிற்கும்." என்றவாறு,

## காஞ்சிப்புராணம்
## [சாத்திரக் கருத்துவமைகள்]

இனி, முனிவர் இயற்றிய காஞ்சிப்புராண முதற் காண்ட ஆராய்ச்சி ஒரு சிறிது நிகழ்த்தற்பாலது:—ஆசிரியர் சிவஞான யோகிகளைப்போலச் சாத்திரக் கருத்துக்களை உவமைகளாக ஆண்டவர்கள் மிகச்சிலரே. காஞ்சிப்புராண அவை அடக்கத்துள்,

"மாயைகாரிய உருக்களும் எம்பிரான் வடிவம்
ஆயவேல்அவை அருள்மய மாகும்மற்று அதுபோல்
பேயனேன்பிதற் றுரையுமேக ம்பர்தம் பெருமை
தூயகாதையுள் உறுதலால் துகள்அறத் தோன்றும்."

என்ற இடத்து, மாயையினுலாகிய வடிவங்கள் இறைவனுல் ஆவேசிக்கப்பட்டபோது, அவை இறைவனது அருள் வடிவமாகக் கருதப்படும். அதுபோல, என்னுடைய உரையுள் ஏகம்பநாதர் கதை கலத்தலால் அவ் உரை குற்றமற்றதாகத் தோன்றும் என்பது கூறியவாறுயிற்று. இதனுலே இறைவன் மாயா வடிவங்களை அதிட்டிப்பன் என்றும், அவனுடைய திருவருட்பதிவால், அவை அருள்வடிவம் என்னப்படுமென்றும் ஓர்க. மாயையின் உதவி இன்றித் திருவருளின் வாயிலாகவே இறைவன் எல்லாம் அறிதலின், மாயை அவனுக்குக் கருவியாவது இல்லை. "காயமோ மாயை என்று காண்பது சத்தி தன்னுல்" என்றது காண்க. மாயையின் தொடர்பின்றி இறைவன வடிவை உயிர் அறியுமாறு இல்லை. ஆதலால் மாயா வடிவின் வாயிலாக அவன் தோன்றுவன்.

மும்மலப்பிணி நீங்கப்பெற்ற பெரியோர்க்கு வாசனை மலம் தாக்குவதை, மழைபெய்வது நின்றும் சிறுதூறல் எஞ்சி நிற்பதற்கு உவமையாக்கினர்.

"போதமே லாகப் பண்டே
புல்லிய மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்கு மாபோல்
மழைப்பெயன் மாறித் தீர்ந்தும்
காதல்செய் துறையும் புள்ளு
மாக்களுங் கவன்று நெஞ்சம்
நோதக மரங்க ளெல்லாம்
நுண்துளி துவற்று மாதோ."
(திருநாட்டுப் படலம் 12.)

இறைவன்பாற் காதல் செய்யும் உயிர்க்கு இடைஞ்சலாக வாசனாமலந் தாக்குதல்போல, காதல் செய்யும் ஆண் பெண் என்னும் ஓரினத்தவாய பறவைகளும் விலங்குகளும் நெஞ்சம் வருந்தும்படி சிறுதூறலை மரங்கள் செய்தன. மாரிக்காலத்துக் காதல்போல வாசனாமலம் ஒழித்தற் பொருட்டு, இறைவன்பால் அயராவன்பானது அறிஞர்பால் மிகுதிப்படும் என்ற குறிப்புங் காண்க.

திருநாட்டுப் படலம் 15-ஆம் பாட்டிலே, "பல இடங்களிலும் வீழும் அருவிகள் எல்லாம் ஒருங்குசேர்ந்து பாலியாற்றில் வீழ்தல், பல புவனங்களில் ஓர் உயிர் தோன்றி ஈட்டிய வினைகள் எல்லாம் ஓரிடத்தில் அது பிறந்தகாலை அதனைச் சென்றடைதல் போலாம்" என்றார். 16-ஆம் பாட்டிலே சிற்றாறுகள் பல பாலியாற்றினிடமாகப் பல இடங்களில் வந்து கலக்குந்தோற்றம் ஓரூர்க்குரிய பல வழிகளும் அவ்வூர்க்கு அருகே ஒன்றாய்ச் சேர்வது போலவும், பல சமயங்களும் முடிவிலே ஒரு பெருநெறியிலே கூடுதல் போலவும் இருந்ததென்றார்.

"பாரிடங் குழித்து வீழும் பல்வயின் அருவி எல்லாம்
ஓரிரும் பாலி யாற்றின் ஒருங்குசென் றணையும் தோற்றம்
சீரிய புவனம் தோறும் சிதறிய வினைக ளெல்லாம்
ஓரிடத் தொருவன் தன்பால் உடங்குசென் றுறுதல்போலும்."

"விலகிவீழ் அருவித் தாரை வேறுவே றாக வோடிக்
குலாதிப் பாலி வைப்பி னேகமாய்க் கூடுந் தோற்றம்
அலகில்பல் வழியு மூதூ ரணிமையின் ஒன்றா மாறும்
பலபல மதமும் ஈற்றி னொருவழிப் படலும் போலும்."

"ஒன்றதுபேரூர் வழியாறதற்குள" என்று திருமூல மாமுனிவர் உட்சமயம் ஆறினையும் நோக்கிக்கூறினர். உட்சமயம் ஆறினுக்கும், முத்தித்தானங்கள் சுத்த தத்துவங்களிலே உள்ளன என்று சொல்லப்பட்டமையானும் சைவ சித்தாந்த சமயத்துள், ஞானத்திற் சரியை, கிரியை, யோகம் உடையார்க்கும் அவைகளே அபரமுத்தித்தானமாய் அமைதலினானும், சிவனோடு இரண்டறக் கலத்தலாகிய அத்துவித முத்தி என்னும்பேரூர்க்கு அருகில், உட்சமயங்கள் சித்தாந்தப் பெருநெறியோடு ஒன்றுபடுதல் அறியற்பாலது. பிறசமயங்கள் தாந்தாங்கூறுந் தத்துவங்களினளவாய், எல்லாத் தத்துவங்களையும் உடன்பட்ட சித்தாந்தநெறியிற் கலத்தலின், பலபல மதமுமீற்றின் ஒருவழிப்படலும் போலும் என்றனர். வசிட்டரது விண்பசுவாகிய காமதேனுவானது நந்தி மலையிற் பொழிந்த பால்வெள்ளமே போன்றது பாலியாறு. அஃது எவ்வாறு உண்மையாம் எனின், காமதேனுவானது விரும்பிய எல்லாம், விரும்பினவர்க்கு அளிக்கும் என்ப. அத் தன்மை பாலியாற்றினுங் காணப்படுதலின், காரணப் பொருளின் தன்மை காரியத்துள என்பதற் கிணக்கமாகப் பாலி காமதேனுவினின்று வந்த தென்பது பொருத்தம் என்றார். இதன்கண் சற்காரிய வாதத்தின் இயல்பு குறித்தனர்.

"காரணப் பொருளின் தன்மை
காரியத் துளதா மென்ன
ஆரணப் பனுவல் கூறும்
அரும்பொருள் தெளியத் தோற்றும்
பேரிசைப் புவிமேல் யார்க்கும்
பெட்டன பெட்ட ஆறே
சீரிதிற் கொடுக்கும் தேனுத்
தரவருஞ் செழுநீர்ப் பாலி."

(திருநாட்டுப் படலம் 32.)

பாலியாறானது பல்வகை வயல்களுக்கும் பாயும் பொருட்டுப் பல கால்களாகப் பிரிந்தமைக்கு எடுத்துக் காட்

டாகச் சிவபெருமான் பல்லுயிர்கட்கும் அருளும் பொருட்டு ஒன்பது வகைத் திருமேனி கொண்டமையை இயம்பினர்.

" ஒருவ னாகிய சிவபிரான் உலகுயி ரளிப்பக்
கருணை கூர்ந்துதன் நவந்தரு பேதமுங் காட்டுந்
திருநி கர்ப்பவோர் பாலியே வயல்வளஞ் செழிப்பப்
பெருகு தண்புனல் பற்பல கால்களாய்ப் பிரியும்."

(திருநாட்டுப்படலம். 65)

சிவபிரான் சுத்த தத்துவங்களிலே சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசுரமென்னும் ஆறுவடிவமும், பிரகிருதி தத்துவங்களிலே, அரன், அரி, அயன் என்பார் திருமேனியுங்கொண்டு எல்லாம் நடத்துகின்றாரென்பது சித்தாந்தநூற் கருத்து.

கச்சிப்பதியின் பெருமையை உயர்வு நவிற்சியாகக் கூறுமிடத்து இந்த நகரத்தைப் பார்க்குந்தோறும், (திருநகரப்படலம் - 4) இமையவர் தமது நகரத்தைச் சிறந்தது என்று கருதியது தவறென்றுணர்ந்து நாணம் எய்துவர். எவ்வாறெனில் "முன்னொரு சமயந்தன்னைப் பொருளெனமூற்றி நின்றோர், பின்னர்வான் சைவ மெய்தப் பெறினவர் பேசு மாபோல்" என்றார்.

புராணக் கருத்துவமங்கள் வருமாறு:— மணம் வீசும் பொழிலின்கண்ணே கொழுமை மிக்க மலர்கள் விரிந்து பொழியும் தேன்வெள்ளத்திலே மூழ்கி வெளிப்பட்டுத் திகழும் தாமரைப் பாயலிலே அன்னமானது மெல்ல மெல்ல மேலுங் கீழுந் தாழ்ந்தெழுவது எவ்வாறிருந்ததெனில்,

" பொங்குவெம் பாவக் கருமுருட்டு அமணற்
புணரியுட் சிலையுடன் அமிழ்ந்தும்
எங்கள்வா கீச ரஞ்செழுத் தருளா
லெழுந்துமேல் வயங்குதன் மானும்." (திருநகர். க0)

என்றனர்.

சிவந்த பொற்குண்டத்திலே கொழுந்து விட்டெரியுந் தழல்மிசை திரு ஏகம்பநாதரை ஆவாகித்து வழிபடும்

புகை சூழ்ந்த வேள்விச் சாலையானது இறைவனது திரு வடியை யடைய விரும்பும் பேரறிஞர் இயற்றுந் தகர வித்தை முறைப்படி திருமால் தன் இதய தாமரையின் கண்ணே கடவுளை வழிபட்டாற் போன்ற தோற்றத்தை உடைத்தா யிருந்ததென்றார். புகை சூழ்ந்த இடமானது திருமாலின் திருமேனிக்கும், செந்தீக்குண்டம், இதயத் திற்கும் உவமையாயின. தகரவித்தை யென்பதற்கு நேர் பொருள் சிறிய இடத்திலே செய்யப்படும் பயிற்சி என்பது. சிறிய இடம் என்பது இருதய ஆகாசம். இருதயத்தி னுள்ளே நுட்பமாயிருப்பதாகிய அருள்வெளியையே அவ்வாறு கூறினார்கள். அவ்விடத்தே இறைவனை வீடு விரும்புவார் வழிபடுவரென்று அதர்வசிகை முதலிய உப நிடதங்கள் கூறும். இதயப்பையானது உதிரம் நிறைந்த தாய்ச் செங்கமலம் போன்றிருப்பது. இதயத்தாமரையை இறைவனுக்கு இருப்பிடமாக வழிபடுதலை ஆசிரியர் மெய் கண்டாரும், 'மண்முதல் நாளமலர்' என்ற சிவஞான போதச் செய்யுளுட் குறித்தமை காண்க. வேள்வித்தழல் மீது ஆவாகிக்கப்பட்ட முதல்வன், இதயமிசை இறைஞ்சும் இறைவனே யென்பது குறிப்பித்தவாறு.

"சேர்தபொற் குண்டத் தோங்குஞ்
சிகைத்தழன் மிசையே கம்ப
வேந்தையா வாகித் தேத்தும்
புகைபொதி வேள்விச் சாலை
ஏய்ந்தசீர்த் தகர வித்தை
முறைப்படி யிதய கஞ்சப்
பூந்தழற் சிகைமேல் ஈசற் போற்றுமா
யவனை யொக்கும்." (திருநகரப்படலம் 119.)

திருமாலுக்குத் திருப்பாற்கடல் கடையுமுன் வெண் ணிறத் திருமேனியிருந்ததென்றும், பாற்கடலின் கண் எழுந்த நஞ்சின் வேகத்தால் வெண்ணிறம் கருநிறமாயிற் றென்றும் புராணங் கூறுவதால் அவரது வெண்மேனியை வெண் முகிலுக்கும், கருமேனியை நீர்கொண்ட முகிலுக்

கும் உவமை கூறினர். முகிலும் கடலடைந்தே கருநிற முற்றமையும் உற்று நோக்கற்பாலது.

(திருநாட்டுப்படலம் 2)

நீதிநூற் கருத்து

நீதிநூற் கருத்துக்கள் பல ஆங்காங்கமைந்துள்ளன. தொண்டை நாட்டினர் வறுமை யடைந்தபோதும் தம் முடைய இளைத்த உடம்பை வருத்தி உழைத்தாவது பொருள் தேடிப் பிறர்க்கு ஈவதற்குப் பின் வாங்கார். அது போலக் கனற்பொறி பரக்கும் வேனிற் காலத்தும் பாலி யானது தன் வயிற்றைப் பிளந்து நற்புனல் உதவும் என்ற னர். இது,

"ஆற்றுப் பெருக்கற் றடிசுடும் அந்நாளு மவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்."

என்ற அடிகளை நினைவுறுத்தல் காண்க.

விருந்தோம்புதலின் சிறப்பை இவ்வாறே தெரித்தமை காண்க.

"கொள்ளைபோய் நனிவறங் கூர்ந்த காலையும்
வள்ளியோர் விருந்தினர் வாடக் காண்பரோ
கள்அறு மலர்வளம் இழந்துங் கார்வயல்
வெள்ளனம் மகிழமீன் விருந்து நல்குமால்."

(திருநாட்டுப் படலம் 92.)

என்றது காண்க.

பாலியாற்றின் நீரானது முழுவதும் கால்களின் வழி சென்று வீண்போகாது வயல்கட்கு வளங்களையுதவுவது எதுபோலுமெனின், "பழியில் நீங்கி நன்கு ஈட்டிய பசும் பொருள் சிறிதும்—கழிபடாது நல்வழிப் பயன்படுவது கடுப்ப" என்றார்.

குழந்தைக்குத் தாயானவள் தன் பாலினை அளவறிந் தூட்டுவது போல,

"களமர்கள் மூளைப்புனல் செவ்வி கண்டுநீள்
வளவயல் பாய்த்தித்தம் மகவின் ஓம்புவார்."
(திருநாட். எசு)

என்றார். நெற்பயிரானது திண்ணிய உருவடையாதபோது தலை நிமிர்ந்து நின்று திட்பமெய்தியபோது செருக்கிலா மற் பணிவாகத் தலைகுனிந்து வணங்கினமை,

"பெருக்கத்து வேண்டுமாற் பெரும்பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டுமுயர் வெனுமொழியின் சுவைதேற்றும்."

என்றனர். மள்ளர் வயல்களிலேயுள்ள கதிர்க் குலைகளோடு ஆண்டுப் பூத்த நன்மலர்களையும் அறுத்தல் ஒருவருக்குக் கேடு வந்தபோது அக்கேடு அவர் சுற்றத்தார்க்கும் ஆகு மென்பதை நினைவுறுத்தும் என்றனர்.

அலையெறியும் ஏரியிலுள்ள நீர்நாயானது அலையோடு உயர்ந்து மீண்டும் நீர்ச்சுழலோடு தாழுங்காட்சியானது, சுவையொளி யூறோசை நாற்றம் என ஐந்தின் தொடர்பற்றிக் கவர்படு நெஞ்சை யொத்தது என்றார்.

உயிரில் பொருளும் உயிருடையதாய் இரக்கங் கொண் டாற்போலத் தோன்றிற்றென்பார். பிரிவாற்றாமையான் இரங்கியழும் பெண்டிருடன் நெய்தல்நில மடந்தையும் அழுதாள் என்றனர்.

"வீழ்ந்தவர் தணத்தலின் விழிப்புனல் உகுத்துத்
தாழ்ந்தழு திரங்குமட மாதர்தமை நோக்கி
ஆழ்ந்தகழி மாதும்உடன் நின்றுஅழுவ தென்னச்
சூழ்ந்துபுள் அரற்றமலர் தேன்துளி துளிக்கும்."
(திருநாட். கஉ0)

பறவை யரற்றுதல் அழுகைக்கும் தேன்துளி கண்ணீர்க்கும் உவமையாயின.

பிறவுவமை நயங்கள் வருமாறு:— பச்சைக்கும் கறுப் பிற்கும் நம்மவர்கள் வேறுபாடு பெரிதும் பாராட்டுவ தில்லை. இருண்ட பச்சையானது கதிரவனொளி பெரிதும் வீசாதபோது கறுப்பாகவே தோன்றும்.

மரகதம் தளிர்த்தாற்போல் வளர்ந்து பரந்த நெற் கதிர்கள் நிறைந்த வயலினுள்ளே சங்குகள் ஊர்ந்து செல் லுந் தோற்றமானது, கடல் நீர் குடித்தெழுந்த மேகக் கூட்டத்தின் நடுவிலே மழைக்காலத்து மதியானது புகுந்து புகுந்து வெளிவந்தாற்போன் றிருந்தது. குற்றமற்ற பசும் பயிர்ப்பொலிவும் வயற்கரைகளிலே வரிசையாய்க் கிடந்த பலநிறப் பூக்களுங் கலந்த காட்சியானது மலையின் மீதுள்ள மேகங்களும் வான வில்லுகளும் நிலமிசைச் சார்ந்தாற்போன்று இருந்தது.

## திருநகர்ச் சிறப்பு

காஞ்சிமா நகரத்திலுள்ள தெருக்களிலே தேர்களை இழுத்துச் செல்லுகின்ற குதிரைகள், மாட மாளிகைகளி லும் பிறவற்றிலுமுள்ள மணிகளின் ஒளிப்பெருக்கில் மூழ் கினமையால் அத் தேர்கள் சூரன் ஏறிச்செல்லும் இந்திர ஞாலத்தேர்போல, இழுக்கும் விலங்கின்றித் தானே சென் றாற் போன்றன.

காஞ்சிமாநகரத்து மாளிகைகளின்மேலுள்ள கொடி கள் அசைவது பகைவரை வராதிருங்களென்று கை காட்டித் தடுத்தாற்போன்றது. மாளிகைகளின் மேலறை களிலே மகளிர் தங்கள் கூந்தற்கு அகிற்புகையூட்டியபின் பலகணிக் கதவுகளைத் திறக்கவும், உள்ளிருந்து வெளியே திரண்டு புறப்பட்டுப்போன அகிற்புகைக் கூட்டமானது, முன்னாளிலே பாண்டிய மன்னன் சிறைப்படுத்திய மேகக் கூட்டமானது சிறைவிடுத்த காலை, விரைந்து விண்ணிற் பரந்து சென்றாற் போன்றது. இங்ஙனம் வருவன பல.

மாளிகைகளின் மேல்தளத்திலே வந்துலாவுகின்ற விண்மாதர், கீழ்நிலத்திலுள்ள கிணறுகளிலே உற்றுப் பார்த்துத் தங்கள் வடிவுகளைக் கண்டு தங்களைப்போன்ற நாககன்னியர்கள் கூடியுள்ள பிலங்களே அக் கிணறுகள் என்று அயிர்த்தார்.

திரு ஏகம்பநாதர் வைகும் மாமரமானது அரசர்மீது நிழற்றுக் கொற்றக்குடை போன்றிருந்தது. மாமரத்தின் அரையானது குடைத்தண்டாகவும் கிளைகள் குடைகளின் மேற்கிளைகளாகவும் தோன்றத் தளிர்கள் நிழலைப் பரப்ப எம்பெருமான் உயிர்களையெல்லாம் உய்யக் கொள்வான். ஐந்தொழில் இயற்றி அரசுவீற்றிருக்கின்றான் என்றனர்.

## பாலியாற்றுச் சிறப்பு

திருநாட்டுப் படலத்திலும் திருநகரப் படலத்திலும் போந்த உயர்வு நவிற்சிகள் பல. உலகியற் கருத்துக்கள் பல. தன்மை நவிற்சிகள் பல; அவ்வவற்றுட் சிற்சில ஈண்டெடுத்துக் காட்டுதும்.

பாலியாற்றின் புனலானது பாலின் சுவையுடையது. ஏனைய நதியின்புனல் நீரின் தன்மையுடையது. ஆதலின் பாலியென்ற பெயர் அந் நதிக்குப் பெரியோரான் அமைக்கப்பட்டது என்னலாம்.

சிவபெருமான் அயனைப் படைத்து, அவன் படைக்க வேண்டிய புவனங்கட்கு ஓர் முன்மாதிரியாகக் காஞ்சி நகரைப் படைத்துக் கொடுத்தானென்றால், காஞ்சியின் பெருமையை யார் சொல்லவல்லார்? இந் நகரின்கண்ணே பெருந்தவ முயல்வோர் வானநாட்டினர் பதவியையும், அயன், அரி, இந்திரன் என்பார் வைகும் புவனங்களையும் கக்கிய சோறுபோல வெறுப்பவராவர். இப் பதியின் வளத்திற் கோடியில் ஒரு கூறு அவற்றிற்கின்மையால். ஒன்பது கோள்களும் உலாவித் தங்கும்பொருட்டு ஒன்பது மாடம் முறையாக அமைத்து ஒன்பது மணிவாயில்களுமுடையதாய்த் திகழ்வது கச்சித்திருக்கோபுரம். மேகங்கள் ஆடையாகவும், கதிரவன் மார்பிலணிந்த மாணிக்கமாகவும் திங்கள் நெற்றியிலணிந்த திருநீறாகவும் பெற்றுத் தோன்றுந் திருக்கோபுரமானது உலகத்தார் புகழும் புருடோத்தமன் போன்று விளங்கிற்று. திருவேகம்பரை அன்பொடு தொழுவோர் இறுதிக்காலத்திலே சிவலோகமடைவான் வைத்த நல்லதோர் ஏணியையும் போன்றது அக்கோபுரம்.

## ஐந்திணைவளம்

தொண்டை நாட்டின் நானில வளங்களையும் ஆசிரியர் சிவஞான முனிவர் அழகாகப் புனைந்தமை போல வேறெப் புலவருங் கூறிற்றிலர். ஆயினும் அவர் ஆசிரியர் சேக்கிழார் தாம் தொண்டை நாட்டின் திணைவளங்களைப் புனைந் துரைக்கவல்லாரேயன்றித் தம்போல்வார்க்கியலாதென்றார். குறிஞ்சி நிலத்திலே தினைக்கதிர் கொய்யவருங் கிளிகள், தம்மைத் துரத்தும் பெண்டிர்களின் இனிய இசைப்பாட்டுக் களை ஒளித்திருந்து நாடோறும் கேட்டுப் பயில்கின்றன. மயில்கள் முகில்களைக் கண்டு ஆடுவதற்கு ஓர் கற்பனைக் காரணங் கூறுவார், தம்மை வாகனமாகவுடைய முருகப் பிரானுடைய மாமனாராகிய இந்திரன் வாகனம் மேகங்கள் ஆதலின், அவற்றைக் கண்டவுடன் மயில்கள் ஆடின என்றார்.

மலைகட்கும் பெண்கட்குஞ் சிலேடை கூறுவார், சந் தனமும் முத்துந் தாங்கி வாசமலர் பொருந்திய குளிர்ந்த சிகரங்களுடையதாய், மைந்தர் மனத்தையுங் கண்ணையுங் கவரும் வனப்புடைய மலைகள் கருமுகில்கள் படியப்பெற்று வாசனைத் தளிர்முகமும் இலவங்கமுங் காட்டும் என்றார். பெண்களின் நகில்கள், அவைகளது சிகரங்கள், கருமுகில் கள், அன்னோர் கூந்தல்கள், அன்னோர் காதிலுள்ள மரகதக் குழைகள், தளிர்போல்வன (திருநாட்டுப் படலம் 45). இல வங்கமென்பது: மென்மையான அங்கமென்று பொருள் படும். எனவே, சந்தனமும் முத்துங் கலந்த நகில்களும் கூந்தல்களும் மரகதக் குழைகளும், மெல்லிய சங்கங்களும் மகளிர் காட்டினரென்பது.

மலைச்சிகரங்கள் தேன் கூடுகளையுடைமையால், "கொங் கையேந்திய ஆண்களும் அவ்விடத்திலுள்ளன" என்றார். கொங்கு - தேன். 'ஆண்' என்ற சொல் தலைமையை யுணர்த்திச் சிகரங்களைக் குறிக்கும். ஆண் என்பது நெடிய ஆண் மரங்களையுங் குறிக்கும். கொங்கை என்பதை கொன் கை யெனப்பிரித்து வலிய கையாகிய கொம்புகளையுணர்த்து

மென்பதும் ஒரு பொருள். சொல்லளவிலே, கொங்கை ஏந்திய ஆண்மக்கள் உளர் என்ற பொருள் தோற்றுதலின் வேற்றுமை நயமென்னும் அழகு புலனாதல் காண்க. அவ்வாறே கொம்புடைய துங்கவேங்கையின் குலமெலாமவண என்ற அடியில், 'வேங்கை' என்பது 'புலி' யென்றுபொருள் படுமாயின், புலி கொம்பில்லாததே, கொம்புடைய புலி மலையிலுள்ளது என்ற ஐயம் எழும். அவ்வடிக்குப்பொருள், கிளைகளையுடைய நல்ல வேங்கை மரங்கள் ஆண்டுள்ளன என்பதே. 'பால் சுரந்து பொங்குநீடு சேவினங்களும் அவண' என்ற அடியிலே 'சே' என்ற சொல் சேரான் மரங்களையும் அழிஞ்சில் மரங்களையும் குறிக்கும். பால் பொங்கிப் பிசினைப் பெற்ற இம் மரக்கூட்டங்கள் அவ்விடத்திலுள்ளன என்பது கருத்து. 'சே' என்பது காளையைக் குறிக்குமிடத்து, வேற்றுமை நயந்தோன்றுதல் காண்க.

முனிவர், பாலையைக் கூறுமிடத்து அழகிய உருவகங்கள் அமைத்தனர். கதிரவன் வேனிலாகிய மங்கையை மணந்து பெற்ற பாலையாகிய மைந்தன், நானிலங்களாகிய அரசர்பால் இரந்து வன்னிலம் பெற்றுச் சிற்றரசுபுரியுமிடம் அஃது என்றார்.

முல்லை நிலத்திலே குமிழமலர்கள் செழித்திருப்பன. அவைகள் மூக்குப் போன்றிருப்பன: முல்லைநிலப் பெண்கள், விண்மாதரை அழகில் வென்று அம் மாதர்களின் மூக்கினை அரிந்து அவற்றை நிலஉலகில் எங்கணுந் தூக்கி வைத்தாற்போல அவைகள் தோன்றின என்றார்.

இளவேனிலிலே நன்கு கூவுங் குயில்கள் கார்காலத்திலே குரலிழந்தமை பிரிந்த தலைவர் வரப்பெற்ற பெண்டிருடைய இனிய குரலுக்குத் தோற்றமையே என்றார்.

மருத நிலத்திலே உழவர் நாறுகளை முளைப்பித்துப் பின் பல வயல்களில் அவற்றைக் கொண்டுபோய் நடுதல் பூனையானது ஓரிடத்திலே தான் பெற்ற குட்டிகளை வளர்ப்பிப்பான், பல வீடுகளிலும், அவைகளைத் தனித்தனியே

கொண்டுபோய்ப் பேர்டுவது போன்றது. நெற்பயிர்கள் உயர்ந்து வளர்தல்,

> "மண்ணக மகளிர்கை வண்மை கண்டயாம்
> விண்ணக மகளிர்கை மேன்மை காண்டுமென்
> றெண்ணிமேற் சேறலுற் றென்ன வான்பயிர்
> கண்ணிறை கவின்செழித் தோங்குங் காட்சித்தே."
>
> (திருநாட். 93)

என்றார்.

வயலிலுள்ள தாமரைகளைக் களைதற்பொருட்டு உழத்தியர் செருக்கொடு அதன் காம்பை விரைவிற் பற்றலும், அதனிலுள்ள முள் அவர்கள் கையைக் கிழித்துத் துன்புறுத்திற்று. உலகத்திலே, "இறுதி செய்வார்க் கெவரிடரிழைத்திடார்"

வயல்களிலே உள்ள களைகளைப் பறிக்கும் பெண்டிருடைய கால்களிற் குவளை மலர்கள் பாம்புபோலச் சுற்றிக்கொண்டு பயங்காட்டுதல், எவ்வளவு சிறியரும் தமக்கு இடர் செய்வார்க்குத் தம்மாலான கெடுதியைச் செய்வார்களென்பதை விளக்கிற்று. இவைகளால் உலகியல் உணர்த்தியவாறு காண்க.

"நெய்தல் நிலத்தைக் கூறுமிடத்துக் கப்பலில் வருகின்ற தலைவரை நோக்கிக் கவலுற்ற மடந்தையர்களின் உயிர் தளிர்க்குமாறு, கடலின் அலைகளானவை குளிர்பூந்திவலையை வீசித் தெறிக்கும்" என்றார்.

திணைமயக்கம்

இனி வெவ்வேறு நிலங்களிலுள்ள பொருள்களும் ஓரிடத்திற் கலந்திருப்பதைப் புனைந்து கூறுவது திணை மயக்கம்.

மலையிலுள்ள மிளகுக்கொடி போய்க் காட்டிலுள்ள கொன்றைமரத்தின் மீது மரகதத் தோரணம்போற் படர்ந்திருப்பது, கிளியுங் கோழியும் எதிரெதிர் நடக்கக் கூத்தர்

கட்டிய நெடுங்கயிறுபோலும். காஞ்சிப்புராணம் திருநாட்டுப் படலம் 131-ஆம் பாட்டின் குறிஞ்சி நிலப் பொருளும் முல்லை நிலப்பொருளும் விரவி நின்றமை கூறப்பட்டது. அவ்வாறே கொன்றைமரத்தின் அடியிலே முல்லையானது நிறைந்து நெருங்கிப் பெரிய தூறாய் வளர்ந்திருப்ப, அதன் கீழ்க் கரடியானது நுழைந்து தூங்க, அதன் உச்சி மீது மேற்பகுதியிலே, மிளகுக்கொடி படர்ந்திருக்கும் காட்சி, இராவணன் வெள்ளி மலையை எடுத்தபோது உமையம்மை இறைவனைத் தழுவி நின்றது போன்றது, (134). இக்கருத்துக் கலித்தொகையிலும் வந்துள்ளது.

குன்றில் உள்ள மகளிர் காட்டுக்கோழியை ஓட்ட எறிந்த கவண் கல்லானவை மருத நிலத்தில் உள்ள குளத்தில் விழுந்து திடராயின. மருத நிலத்துச் சிறுவர் சிறுமியர் சினங்கொண்டு குன்றப்பேதையர்கள் விளையாடுந் துறைகளிலே சென்று, அவர்கள் அழும்படி அவர்கள் பந்தையும் கழங்குகளையும் பறித்து எறிந்து குன்றிலுள்ள நீர்ச்சுனையை நிரப்பினர் என்றவிடத்து மருதம், முல்லை, குறிஞ்சி, என்ற மூன்றின் திணைப்பொருள் மயக்கமும் வந்தது காண்க, (144).

இராமாயணக் கதையினை ஓர் அழகிய பாட்டில் அமைத்தனர். கடற்கரைக் காகமானது மலைச் சாரலில் கிடைத்த பலாச்சுளையைக் கவ்விக் கப்பலுக்குக் கொண்டு போதல், இராவணன் சீதையைக் கொண்டு இலங்கை சேர்ந்தாற்போலும். மகேந்திர மலை நின்று இலங்கையில் தாவிய அனுமானைப்போலக் குன்றிலுள்ள மந்தியானது தோணியிற் பாய்ந்து உழக்கி மீண்டது.

மிளகுக் கொடியும், பவளக்கொடியும் பசலைக்கொடியும், மௌவற் கொடியும் நான்கு திசையிலும் தாவிப் படர்ந்து செல்ல, நடுவிலுள்ள குராமரமீது பாவையாகிய மலர், பெருங்காற்றாற் பல்காலும் அசைதல், கழைக்கூத்தியர்கள் கயிற்றாற் கட்டப்பட்ட கழைமீது கூத்தாடினாற் போன்றது என்ற இடத்து ஐந்திணையும் மயங்கினமை காண்க.

மிளகுக்கொடி குறிஞ்சிக்குரியது, பவளக்கொடி நெய் தற்குரியது, பாலை மருதத்திற்குரியது, மௌவல் முல்லைக் குரியது, குராமரம் பாலைக்குரியது.

பாலியாற்றின் புதுமுகிலாகிய அரசன் பாலிக்கு முடி சூட்டி ஐந்திணையிலுஞ் சென்று வெற்றி பெறுமாறு விடுப்ப, அது செல்லுங்கால் போர்ப்பறை சாற்றி வெட்சி அணிந்து நிரைகவர்ந்து வஞ்சி சூடிப் பாலையை வாட்டி உழிஞை அணிந்து மருதத்தை முற்றித் தும்பைசூடி நகரிற் போர் புரிந்து, கொள்ளும் வரகும் விளைத்து வெற்றிமாலை யுடன் நெய்தல் சென்று, பவள முதலிய திறையேற்றமை அழகாகப் புனைந்துரைக்கப்பட்டது.

கடல் சூழ்ந்த உலகத்திற்குத் தமிழ்நாடே மதிமுக மாகவும் அதனுள்ளும் தொண்டைநாடு வாயாகவும் காஞ்சி மாநகரம் நாவாகவும் அமைந்துள்ளதென்பது முனிவர் கருத்து; (9).

## போதுமகளிர் இயல்பு

காஞ்சிமாநகரத்திலுள்ள பொழில்களிலே மகளிர் முன் நாள் இட்ட பட்டாடைகளும் பொன்னணிகளும், அருகி லுள்ள பொய்கைகளினுள்ளே நிழல் வீசிய காலை நாககன்னி யர்கள் ஆண்டுவந்துள்ளார் போலும் என்றெண்ணிப் பொய்கையிலே மூழ்கும் இளைஞர்கள் கைகூப்ப அதைப் பார்த்து மகளிர் நகைப்ப, ஆடவர் மேல்நோக்கித் தமது எண்ணம் பிழை என்றெண்ணி நாணமுறுவர்; என்ற விடத்து, மகளிர் செல்வம் குறிப்பாலுணர்த்தப்பட்டது; (நகரம்-9).

திருநகரப் படலம் 25-ஆம் பாட்டிலே பெண்கள் பந் தாடும் வழக்கங் கூறப்பட்டது. பொதுமாதரின் இயல்பு திருநகரப் படலத்துள் நன்கு புலனாகும்; (52). கோலத்தினு லும், இசையினுலும், புதுக்கூத்தினுலும், அவிநயத்தின் சிறப்பினுலும், செய்கைத்திறத்தினுலும் இளைஞரை மருட்டி நற்பொருள்கள் பறித்து, அலையில் அகப்பட்ட

கரும்பின் கோதுபோல அவர்களைக் கழிப்பர். (53) பொருட் காதலால் யாரையும் மயக்கும் வஞ்ச நெஞ்சின ராகிய அன்னோர் அருவமாகிய சிறு இன்பத்திற்கு உருவ முடைய பெரும்பொருள் கவர்வர் (57). பொருள் கொடுப் பார்பால் இன்பமும் சமமாகப் பெற்று, மலைநிகர் தனங் களீந்தோர் மலைநிகர் தனமுங் கொள்வர் என்றது காண்க; (55). மும்மூர்த்திகளும் இவர் வலையிற்சிக்கியே, அலரோன், மாயோன், பித்தன் என்ற பெயர் பெற்றனர். இவர்கள் வணிகம், விலைக்குக் கொடுத்த பொருளையே மீட்டும் ஓயாது வாங்கி விற்குந் திறமுடைமையின், வியக்கத்தக்க தொன்றாம்; (56).

சந்திரனிடத்தே களங்கந் தோன்றுதற்கு யாதாவ தொரு கற்பனைக்காரணங் கூறுவது கவிமரபு. மாளிகை களின் மேல் இடத்திலே துயிலும் மெல்லியலார் முகத் தழகைக் கவர்ந்து செல்லும் மதியினை அப் பெண்டிர் குழ லிற் படிந்த கருவண்டுகள் உதைத்தலால் ஏற்பட்ட கறை தான், மதியிலுள்ள மறுவாகும் என்றனர்;

## கல்விக்கழகம்

அவ் ஊரிலே, கல்விக் கழகங்கள் பல இருந்தன வென்று முனிவர் தெரித்தனர்; (83).

> "வளரிலைத் தருப்பை நுனியெனக் கூர்த்த
> மதியினர் தொன்றுதொட் டுடைய
> பளகறு கேள்விப் பயிற்சியர் மேற்கோள்
> முதற்பகர் மூன்றினுந் தெருட்டி
> இளையருக் குணர்த்தும் இலக்கண நெறியோர்
> ஈரிரு புலமையர் தம்முட்
> களவிகல் இகந்து குழாங்குழா மாகிக்
> கலைதெரி கழகமும் பலவால்." (திருநக. 108)

காஞ்சிப் புராணத்தின் பிற படலங்களிலுள்ள நயங் களைச் சுருக்கமாக ஈண்டுக் காட்டுதும்.

### அறம் மெய்

வரலாற்றுப் படலத்திலே, தவம், அறம், கொடை, மெய், எச்சம், மகம், துறவு என்பவற்றின் சிறப்பியல்பை ஒவ்வொரு பாட்டிலே இயம்பியுள்ளார். அவற்றுள் அறத்தையும் மெய்யையும் பற்றிய பாட்டுக்கள் வருமாறு:—

"அறமே மறங்கள் முழுதழிக்கும்
அறமே கடவு ளுலகேற்றும்
அறமே சிவனுக் கொருவடிவம்
ஆகுஞ் சிவனை வழிபடுவோர்க்
கறமே யெல்லாப் பெரும்பயனும்
அளிக்கும் யார்க்கு மெவ்விடத்தும்
அறமே யச்சந் தவிர்ப்பதென
அறைந்தான் சாதா தபமுனிவன்." (14)

"மெய்யே சிறந்த பெருநலமாம்
மெய்யே யெவையும் நிலைபெறுத்தும்
மெய்யே அழல்கால் கதிர்பிறவுந்
தத்தந் தொழிலின் விலகாவாம்
மெய்யே யெவைக்கும் இருப்பிடமாம்
மெய்யே மெய்யே சிவமாகும்
மெய்யே பிரம பதமும்எனப்
புகன்றான் வினைதீர் காசிபனே." (16)

### அருமை

சனற்குமாரப் படலத்திலே 6-ஆம் பாட்டிலே பல வகை நன் மரங்களையுந் தொகுத்துரைத்தனர்.

"குரவு மாதவி யுழிஞைமந் தாரங்
குருந்து பாடலம் பாலைமுந் திரிகை
மருது போதி பிடாவுமை யோமை
வஞ்சி காஞ்சிகுங் குமநமை யொடுவா
ணரைத ளாவுதி செருந்திசே வகின
மகில்ப லாசுசந் தில்லமா வில்லம்
வரைத மாலமா தளைகணி யதிங்கம்
வகுள மின்னன நெருங்கின வோங்கும்," (6)

10-ஆவது பாட்டிலே பொன்மலையிலே தவத்தினர் திருமேனியில் விளங்கும் திருநீற்றினொளியும், யானை மருப்பினுள்ள முத்தின் வெள்ளொளியும், மூங்கில் நின்று உதிரும் மணிகளினொளியும் கலந்ததனாலாய வெண்மையினாலே, பொன்மையை வெண்மை விழுங்கியதோ, வெண்மை பொன்மையை விழுங்கியதோ என்று ஐயுறும்படி சனற்குமார மகாமுனிவர், மேருமலையிலுள்ள சதசிருங்க வெற்பிலே அயன் வாழ்கின்ற பதியின் ஒருமருங்கு யோகத்தமர்ந்தனர் என்றும், ஆங்குச் சிவபிரான் நந்தி முதலிய கணங்களோடு திருவுலாப் போந்தகாலை, வணங்காது யோகத்திலிருந்தமைக்காக நந்தி அவரை ஒட்டகமாமாறு சபித்ததாகவும், அச் சாபம் நீங்கும் பொருட்டுக் காஞ்சிமாநகரத்தில் இறைவனைத் தொழுதனர் என்றும், பின்னர் நந்திபெருமானுக்கு மாணாக்கராயினரென்றும், இப் படலங் கூறுகின்றது. நந்தி பெருமானுக்கு நிலையம் வடமேருவில் இருப்பதாக இப்படலம் 38-ஆம் பாட்டில் கூறியிருப்பதாற் கயிலையும் ஆண்டேயிருப்பதாகக் கருத இடமுண்டு. சுவேதாசுவர உபநிடதக் கருத்து இப் படலத்தின்கண் ஒரு பாட்டில் அமைக்கப்பட்டது.

"மானிடன் விசும்பைத் தோல்போற்
சுருட்டுதல் வல்லோனாயின்
ஈனமில் சிவனைக் காணு
திடும்பைதீர் வீடு மெய்தும்
மானமார் சுருதி கூறும்
வழக்கிவை யாதலாலே
ஆன்அமர் இறையக் காணும்
உபாயமே யறிதல் வேண்டும்." (43)

சனற்குமாரர் அறுமுகப்பெருமான் கூறென்று இதனுட் பெறப்படுகின்றது; (45).

எள்ளாமை

தல விசேடப் படலத்திலே, பூதகணங்களின் சிறப்புக் கூறுமிடத்து, உருவு கண்டெள்ளாமை வேண்டும் என்பதை வற்புறுத்துவார்,

"உருவினிற் பெருமை பெருமையன்று உருவிற்
சிறுமையெய் தினுமுமை பாகன்
அருளினிற் பெருமை பெருமையென் றுலக
வகிலமுந் தெளிதரக் காட்டி
மருமலர்க் கிழவன் முதலியோர் புறத்து
மன்னிட நகுநடைக் குறுத்தாட்
பெருவயிற் றழல்கால் குழிவிழிப் பூதப்
பெருங்கண மருகுநின் றேத்த." (6)

என்றார். இப் பாட்டினால் பூதகணங்கள் தேவரைப் பார்க்கிலும் இழிந்த உருவுடையரெனினும் சிறந்த அருட்பேற்றில் அவரினும் வலியரென்பது புலனாகின்றது. அண்டத்திற்கு அதிபதியாகிய கடவுள் பரவெளிப்பரப்பின் வைகும் பண்பனாய், உலகம் எங்கும் விரவியே நிறைந்து நிற்பன். அவனுடைய நான்கு பாதங்களில், நாலாம் பாதம், நில முதலிய கீழ்உலகங்களிலும், ஏனைய மூன்று பாதமும் வானுலகங்களிலும் பொருந்தி நிற்கும் எனவும், அங்ஙனம் நிற்கும் நிலையை யாவரும் அறியமாட்டாமையின், யாவருங் காண, நானிலத்திலே சிறந்த திருப்பதிகளிலே அம்மையொடு வீற்றிருக்கின்றான் எனவும் இறைவன் அம்மைக்குத் தெரிவித்ததாக இப்புராணம் கூறும். பாதம் என்றது பாகம் என்று பொருள்படும். இப் படலத்தில் கூறுந் தலங்களுள் இமயமலை, மந்திரம், கயிலை முதலியனவும் வந்தமை காண்க.

## ஆவணம்

காஞ்சிமா நகரின் கடைத்தெருவின் வளத்தைப் பற்றிக் கூறுமிடத்து, "தந்தை தாயிரண்டொழியப் பிற வெலாங் கொளத்தகும் ஆவணங்கள்" என்றார்; (26). காஞ்சி என்ற பெயர்க்காரணம் பல விடங்களில் பலவாறு கூறுவர். இதனுள், 'திசைமுகனா லஞ்சிக்கப்படுதலினாற் காஞ்சி எனத் திசைபோய் மயங்கும் இசையுடையது' என்றார். ககரம் அயன்பேர் என்றனர்; (28). நான்மறைகளுள், தயித்திரியம் என்பது காஞ்சியைச் சோதிசூழ் சுவர்க்கம் என்றும், இரண்டாமறை, 'சோதிலிங்க வடிவம்'

என்றும் சந்தோகமென்னு மூன்றுமறை 'ஒளிவான்' என்றும் இறுதிமறை 'சுவர்க்கம்' என்றுங் கூறும் என்றனர். ஈண்டுக் குறித்த மறைகள் இப்போதுள்ள வடமொழி மறைகளல்ல என்பது தெளிவு.

## சிவம்

திருநெறிக் காரைக்காட்டுப் படலத்திலே பெருமான் பெயர், சத்திய விரதீசர் என்று இயம்பியதுடன், 'சத்திய விரதம்' என்ற தலப்பெயர்க் காரணம் கூறுவார்,

"சத்திய சத்தியர் சத்திய சோதகர் சத்திய சங்கற்பர்
சத்திய காமரி ருத்தலின் அப்பதி சத்திய விரதமதாம்."

என்றார்.

சிவம் என்ற பெயர்க்காரணம் கூறுவார்,

"குறைவிலா மங்கலக் குணத்த னாதலின்
நிறைமலம் அனாதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்."

என்றமையால் இறைவன் பெருமையை யாவர் கூறுவார், சிவம் என்ற சொல், மங்கலத்தையும் புனிதத்தையுங் குறிக்குமென்றறியற் பாற்று.

குருவின் பெருமை கூறுவார்,

"குரவனே அய னரி குரவனே சிவன்
குரவனே தந்தை தாய் குரவனே யெலாம்
குரவனே யென்று நூல் கூறும் உண்மையைக்
குரவனே யென்னிடை இன்று காட்டினாய்." (திருநெறி. 31)

என்றனர். புண்ணிய கோடீசப் படலத்திலே திருமால் முகில் வாகனமாகப் பரமனைத் தாங்கியது கூறப்பட்டது; (3). அவர் இறைவனைப் பலகால் வரதா என்றழைத்தபடியால், காஞ்சிநகர்ப் பெருமானுக்கு ஏகாம்பரநாதர் வரதராஜன் என்ற திருநாமம் நல்கினர்.

வலம்புரி விநாயகர் படலத்திலே கணபதி உற்பத்தி கூறப்பட்டது; (39).

"ஐயா மறைமுடிவுந் தேராத ஆனந்த
மெய்யா பிரணவத்தின் உட்பொருளே வேழமுகக்
கையாய் வெளியாய் கரியானே பொன்மையாய்
செய்யாய் பசியாய் பெருங்கருணைத் தெய்வமே."

என்றமையாற் கணபதி முதல்வனின் வேறன்மை விளங்குதல் காண்க. 40-வது பாட்டினுள் கணபதி நல்லவர்க்கு இடையூற்றினை நீக்கிப் பொல்லார்க்கு அதனை உளதாக்குவன் என்றது இருவினைப் பயனளிப்பவன் என்றறிவுறுத்தற்கென வுணர்க. சிவாத்தானப் படலத்துள், நான்முகன் இறைவனைத் தொழுது, உம் இடப்பாகத்தில் அரி தோன்றி என்னையும் உலகத்தையும் படைத்ததுபோலே யானும் உம் வலப்பால் தோன்றி அரியையும் உலகத்தையும் படைக்கும் வரம் வேண்டியதாகக் கூறப்பட்டது. அரிக்குப் பூமகளும், நீரும், திருமகளும் ஆகிய முச்சத்தி போல அயனுக்குச் சாவித்திரி, காயத்திரி, கலைமகள் என்னும் முச்சத்திகளுண்மை அறியற்பாலது. இச்சை, கிரியை, ஞானம் என்னும் முச்சத்திகளின் வடிவமும் இவையென்ப.

மணிகண்டீச்சரப் படலத்திலே தமிழ்க் கழகங்கள் பலவிருந்தமை, "அமிழ்தமுங் கைப்பக்குழாங் குழாமாகி யறிஞர் தாம்கழகங்கடோறும்—தமிழ்தெரி காஞ்சி வரைப்பினின்" என்றமையா லறிக.

## மால்

இப்படலம் 19-வது பாட்டிலே திருப்பாற் கடலினெழுந்தவிட வெப்பத்தால், திருமால் கருநிறம் பெற்றது போல, மலரோன் பொன்னிறமிழந்து புகைநிற முற்றமை கூறப்பட்டது. கடல் கடைந்த தேவர் வெள்ளிக் கயிலைத் திருமலையடைந்த காலத்து, விடமானது அங்கு அணுகாமை கண்டாரென்றமையால் அம்மலையின் பெருமை விளங்குதல் காண்க.

சார்ந்தாசயப் படலத்திலே, திருமால் வியாசருக்கு மெய்யறிவுச் சுடர்கொளுத்தும் பகுதி கற்கத்தக்கது. வியாசர் நாராயணனே பரம்பொருள் என்று காசி விசுவேசர் சந்நிதியிற் கூறியதும், நந்தியின் சாபத்தால் கை தம்பிக்கப் பெற்றார்.

அப்போது திருமாலை நினைந்து தொழவே, திருமால் வியாசருக்குத் தோன்றி 'என்ன காரியஞ் செய்தனை, என்னையுங் கெடுத்தாய்; யாகத்திற்கதிபதி இந்திரன், மறைக்கிறையவன் அயன், இந்திரன் முதலியோர்க்குத் தலைவன் நான், எனக்குத் தலைவன் மணிமிடற்று இறையோன்' என்றது காண்க.

"சிவனை யாவரே யருச்சனை செய்யாதவர், சிவன் மற்றெவரையாயினு மருச்சனை யியற்றியதுண்டோ" என்றது காண்க; (40, 41). இறைவன் சிரமாலையும் என்புமாலையும் பூண்டதற்குக் காரணம், மால் அயன் முதலிய விண்ணவருடைய அநித்தவாழ்வும், இறைவனது நித்தத்தன்மையும் பிறர்க்கு அறிவுறுத்தற் பொருட்டே ஆம் என்றனர்.

## நகர்

சத்ததானப்படலம் 9-ஆம் பாட்டில் காஞ்சியின் பெருமையைக் கூறுவார், "காசியின் இறப்ப முத்தி, காஞ்சியை நினைப்ப முத்தி" என்றார்; (46). "காஞ்சியை நினைப்பிற் காசிக்கடி நகர் வசித்த பேறும்."

சத்ததானப்படலம் 11-ஆம் பாட்டிலே இறைவனை வழிபடுவதற்கும் பச்சிலையாதல், பழம்போது ஆதல் போதுமென்றனர். இதனுள், புண்ணியங்களைப் பசுபுண்ணியமெனவும், பதிபுண்ணியமெனவும் இரண்டாய்ப் பகுத்துப் பசுபுண்ணியப்பயன் கால அளவுட்பட்டது. பதிபுண்ணியம் அளவிலடங்காதது என்றும், சிவலிங்கப்பதிட்டையும் சிவபத்தர் பதிட்டையும் பிற எவற்றினுஞ் சிறந்தனவென்றுங் கூறப்பட்டது.

(5) பணாதீச்சுரப் படலத்திலே, பாம்புகள் இறைவனைத் தொழுது அடைக்கலம் புகுந்தகாலை அவற்றைப் பணிகொண்டமையால், அவைகள் மிக மகிழ்வெய்தி, அரியுடன் வந்த கருடனைப் பார்த்து, "கலுழனே சுகங் கொல் என்று அஞ்சாமே பன்னி மேன்மையின் விளை யின," இது பழமொழியாயிற்று. (6) இதன் படிப்பினை யாகச் சிறியராயினும் சார்பினை விழையன்மின் "திறல் கெழு பெரியோராம் அறிஞராயினும் சார்பினை விழை மினோ" என்றறிவுறுத்துவார், திருக்காஞ்சியிலே முத்தீச மென்னுமிடத்திலே, திருக்குறிப்புத் தொண்டநாயனார் வாழ்ந்து வீடுபெற்றனரென்று, அப்படலத்தின் இறுதிச் செய்யுள் பகர்கின்றது. காரோணப் படலத்திலே, வியாழப் புத்தேள், சிவபெருமானை நோக்கிச் சிவபிரான் தேவருட் பிராமணரென்ற வேதக் கருத்தைச் செப்பியதாகக் கூறிய பாட்டு கவனிக்கத்தக்கது.

"பிராமணன் நீயே கடவுளர் தம்முட்
பிஞ்ஞகா வனையர் தம்முட்
பிராமணன் யானே பிராமணன் றனக்குப்
பிராமணன் கதியினை யிகழ்வோன்
பிராமணன் அல்லன் றன்குல தெய்வம்
விண்டுபின் னென்றனைத் தொழுமப்
பிராமணற் கிரண்டும் பயப்படா நிரயம்
புகுவனென் றுயர்மறை பேசும்."

(காரோணப் படலம் 9.)

அரிசாப பயந்தீர்த்த படலத்திலே, பிருகு முனிவர் திருமாற்குப் பத்துப் பிறவி யெய்துஞ் சாபமிட்டதும் அது தீர்திறனுங் கூறப்பட்டது. இறைவன் திருமாலுக்கு அச்சந்தீர்ப்பான், உனது பத்துப் பிறவியும் உலகினுக்குப காரமாம் என்றும், ஐந்து பிறப்பில் தண்டமும் ஐந்து பிறப்பில் அருளும் தாம் புரிவதாகக் கூறினரென்றும் அப் படலம் பகர்கின்றது; (17).

தான்தோன்றீச்சுரப் படலத்திலே, வசிட்டர் தங்கையை வியாக்கிரபாதர் மணந்து உபமன்னிய முனிவ

ரைப்பெற்றாரென்றும், அவர் கண்ணபிரானுக்குச் சிவ தீக்கை யளித்தாரென்றுங் கூறப்பட்டது, (3). அத்தகைய உபமன்னியர் கைக்குழந்தையாய் இருந்தபோது (63), அவர்க்குப் பாலில்லாமல், அவர் பெற்றோர் நெல்லின் மாவை நீரிற் கரைத்துக் கொடுத்தாரென்றமையால், அது குழந்தைகட்குக் கொடுக்கு முறையாதல் பெறப்படும் ; (4).

இப்படலத்துள், வறுமை இறைவனை வழிபடாமை யான் வந்த ஏதமென்று குறித்தமை காண்க (6). அமரீசப் படலத்துள் கேநோபநிடதக் கதை சுருக்கிக் கூறப்பட்டது; (15). இறைவன் ஓர் இயக்கவடிவொடு விண்ணவர் நடுவிற் றோன்றி, ஒரு துரும்பினை ஓரிடத்தில் நிறுத்தி அதனை அசைக்கும்படி அவர்களைக் கேட்க, அவர்கள் முயன்று அதனையசைக்கும் ஆற்றலிலராயினர் என்பது அக் கதை (16). திருமேற்றளிப் படலத்தில் திருமாலுக்கு ஞான சம்பந்தர் சிவசாரூபம் காஞ்சியில் கொடுப்பாரென்று கூறப் பட்டது. கயிலாயப் படலத்துள், தேவர் அசுரர் கொடுமையைத் திருமாலுக்கு உரைத்து முறையிட்ட காலை திருமால்,

> "தீத்தொழில் தலைநின்ற கொடியரேனுஞ் சிவபத்தி
> வாய்த்தவர்கள் சாவாது மதுகை யுடையர் யாம்அவரைப்
> பூத்தநுதிக் கணையொன்றாற் பொருக்கென் றழிக்கும் வலியில்லேம்
> ஆர்த்தபுகழ்ச் சிவபெருமானே அதற்கு வல்லவனும்.
>
> (கயிலாயப் படலம்)

என்றமையால் சிவபத்தியின் பெருமை குறிப்பாலுணர்த் தப்பட்டதறிக. வீர ராகவீசப் படலத்திலே, அகத்திய முனிவர், சைவமாமுனி எனப்பட்டார். அகத்தியர் இராம பிரானுக்குத் தத்துவ ஞானத்தைப் போதிக்கவும், அதனை அவர் ஏற்றுக்கொள்ளாது,

> "சிறந்த சீதையை மீட்டபின் ஐயநீ தெரிக்கும்
> உறந்த தத்துவ ஞானத்திற் குரியவ னாவேன்
> அறைந்தவா றலது, என்னுளம் அடங்கிடாது"

என்றார்.

இதனல், இராமர்க்கும் சீதைக்குமுள்ள கழிபெருங் காதல் புலனாதல் காண்க; அல்லது அவரது பழி நீக்கும் பேரவாவினைத்தென்று அறியற்பாலது. அப்போது அகத்தியர் உருத்திரனொருவனே அவனை வெல்லல்கூடுமென்ன, இராமர் காஞ்சியிற் கண்ணுதற் கடவுளை இறைஞ்சிப் பாசுபதம் பெற்றனர் என்பது கதை.

இப் படலத்திலே சிவலிங்கமானது நாதாந்தப் பரஞ்சுடராமென்று முனிவர் இயம்பியது காண்க; (30).

பலபத்திர இராமீசப் படலத்திலே, பரதகண்டமே கருமபூமி யென்பது தெரிக்கப்பட்டது: (6).

வயிரவீசப் படலத்திலே நால்வேதக் கருத்துந்தொகுத்துரைக்கப்பட்டது.

“எச்சன் தனக்கும் இமையோர்க்கும் எவ்வே தியர்க்கும்
அச்சங் கரனே அரசன் விசுவா திகன்சீர்
நச்சும் முனைஈன் றருட்பார் வையி னேக்கிநல்கு
மெய்ச்சித் தருவென் றறியென் றதிருக் குவேதம்.” (9)

“தன்கூற்றில் வருங்கண நாதர் தடுக்கலாற்றுக்
கொன்கூர் சரபாதியரால் வயங்கூறும் விண்ணோர்
வன்காழ் வலி செற்றவன் யார்அவனே மதிக்கும்
நன்கா ரணமென்று நவின்ற தடுத்தவேதம்.” (10)

“தோலா வகைநாப்பண் அடைந்து துரும்புநட்டு
மாலாதி விண்ணோர் வலிமுற்றவும் மாற்ற வல்லோன்
ஆலாலம் உண்டோ னவனே யகிலங்களுக்கு
மேலாய ஏதுவென விண்டது சாமவேதம்.” (11)

“வளிதாழ் விசும்பைப் பசுந்தோலிற் சுருட்ட வல்லோர்
உளரேற் புடைவீங்கி யெழுந்து திரண்டு ருண்ட
இளவெம் முலைபங்கனை யன்றியும் இன்ப முத்தி
அளவிற் பெறலாமென விண்ட ததர்வ வேதம்.” (12)

இதன்கண் பிரமனது ஐந்தலையுள் ஒன்று வயிரவக் கடவுளாற் கொய்யப்பட்டமை தெரிவித்தார். முனிவர்களிடம் பிரமன் தானே கடவுள் என்ற குற்றத்திற்காக

அது நிகழ்ந்தது. வயிரவர் இரத்தப்பலி முதலிய ஏற்றபின் காஞ்சியில் எய்தி இறைவனை வழிபட்டனரென்பது புராணம்.

விடுவச் சேனீசப் படலத்தில் விகடசக்கர விநாயகர் கதை அழகாக இயம்பப்பெற்றது. தக்கீசப் படலத்திலே தக்கன் வேள்வியில் ததீசிமுனிவர், சிவபரத்துவம் உணராத பார்ப்பனருக்குக் கொடுத்த சாபம் காணப்படும்.

"அவைக்களத் துறையும் பார்ப்பார் தருபொருட் காசை கூர்ந்து
கவர்த்தபுல் லறிவின்மான்று கடுந்தொழில் தக்கன் கூற்றே
நிவப்புறப் புகறலோடு நெடுந்தகை மறுவில் காட்சித்
தவத்திறல் ததீசி சீறி விப்பிரர் தம்மை நோக்கி."

(தக்கீசப்படலம் 21)

"படுபொருள் வெஃகுநீரால் பார்ப்பனக் கடையர் காணீர்
நடுவிகந் துரைத்த ஆற்றால் நடலைகூ ரொழுக்கம் பூண்டு
கெடுநெறி பற்றிச் சைவ நிந்தையிற் கிளர்ச்சி கொண்டு
கொடுமுகக் கலியில் தோன்றிக் கலாய்த்தனீர் இடும்பை கூர்ந்து."

(22)

தக்கன் வேள்வியிலே, முதல்வனை இகழ்ந்த தேவரும் பிறரும், வீரபத்திரரைக் கண்டவுடன் நடுநடுங்கித் தமது அறியாமையை ஒப்புக்கொண்டு குறையிரந்தமை சிற்றுயிர்கள் இயற்கையை நன்குணர்த்துவதாகும்.

## அடிமை

தக்கீசப் படலத்தில் மாயோன் முதலிய அமரர் செப்பியதாவது:—

"அடியிணை தொழுது மாயோன் முதலிய அமரர் சொல்வார்
அடிபடும் எங்கள் ஆண்மை தரும்பொன்றில் அன்றே கண்டாம்
அடியராம் எம்மைப் பல்காற் குரங்குபோ லாட்டு விப்ப(து)
அடிகளுக் கழகோ எந்தாய் ஆற்றிலேம் உய்யக் கொள்ளாய். (61)

"அத்தனே பல்கால் இவ்வாறு உணர்த்தியும் ஆடை மாசின்
மைத்துற பேதை நீராற் பின்பினு மயங்கு கின்றேம்,
கைத்தளை யாடி ஓச்சிக் காதியும் ஆள்வ ரல்லால்
எத்தனை பிழைசெய் தாலும் இகப்பரோ அடிமைபெற்றோர். (62)

"கறுத்தநின் மிடறு நோக்கேம் கையணி கபாலம் நோக்கேம்
வெறுத்தவெள் ளென்பு நோக்கேம் விழியடி யிடத்தல் நோக்கேம்
குறுத்த மோட்டாமை ஓடும் பன்றியின் கோடும் நோக்கேம்
இறுத்திடும் விதியின் ஆறே மதியெனல் எம்பாற் கண்டேம்." (63)

"பொங்கருட் பரமானந்தப் பூரண முதலே இங்கு
நங்களை ஆளத் தோன்றி ஐந்தொழில் நடாத்த லோரே
மங்கையை மணந்தாயென்றும் மக்களை யுயிர்த்தா யென்றும்
எங்களி லொருவ னாக எண்ணியே யிகழ்ந்து கெட்டோம். (64)

"கடவுள்யாஞ் செருக்கா வண்ணங் கண்டனம் உய்யு மாற்றால்
விடமுத லடையாளங்கள் நின்றிரு மேனி வைத்தாய்
அடலுறு மவையுந் தேறாச் செருக்கறிந் திந்நா ளெங்கள்
உடலினு மடையாளங்க ளுறுத்தினை போலும் உய்ந்தோம்."(65)

"இன்றெமை ஏறுப்ப வீரன் போந்ததுன் னேவலாக
அன்றெமை யொறுப்பப் போந்த இடமுமுன் னருளேயென்று
மன்றயாந் தெளிந்தே இந்நா ளிடித்தெமை வரைநிறுத்த
லென்றுநின் கடனே யன்றோ ஈறிலாக் கருணை வாழ்வே." (66)

என்பது காண்க.

முப்புராரி கோட்டப் படலத்திலே, திரிபுரத்தலைவ ராகிய நல்லறத்தன், நற்குணத்தன், நல்லறிவன், என்ற மூவரும், பயக்கமின்றி இறைவன் திருவடிப் பேரன்பின ராய்த் திகழ்ந்தமையால், திரிபுரம் எரியுற்றகாலை, ஊறு யாதுமின்றி உய்த்தனரென்றுரைத்த சூதமுனிவர், பத்தி யின் இருவகையினை அழகாக எடுத்தியம்பினர். அது வருமாறு:—

"தத்து வெண்டிரை வேலை நஞ்சம் மிடற்றடக்கிய தம்பிரான்
பத்தி மார்க்கம் இரண்டு கூற்றது பற்றறுத்துயர் அந்தணீர்
புத்தி நல்குவ தொன்றி ரண்டது பூரணப் பொரு ளோடுலா
முத்திநல்குவ தொன்றி ரண்டனுள் முன்னி யம்பியபத்திதான்.(7)

"சார்பு பற்றி உதிக்கு மற்றைய தொன்று சத்தி பதிந்தமெய்ச்
சார்பி னெய்து மிரண்டு முத்தி தமைக்கு மாயினும் வெவ்வினைச்
சார்பி னோர்பெறு சார்பு பற்றிய பத்தி தானிடை விள்ளுமச்
சார்பி லாதெழு முண்மையன்புத ணப்பு றாதெவர் கட்குமே."(8)

இரணீசப் படலத்துள், இறைவனது திரு உருவ வழி பாட்டின் இன்றியமையாமையும், சிவன் அன்பர் பெருமை யும் வற்புறுத்தப்பட்டன. அவை வருமாறு :

"சிவன்றன் திருவுருவைக் காணாத
கண்ணே குருடாஞ் சீர்சால்
சிவன்றன் திருவுருவை யெண்ணாத
சிந்தையே பித்தாம் என்றுஞ்
சிவன்றன் திருப்புகழைக் கேளாச்
செவியே செவிடாம் அன்பிற்
சிவன்றன் திருப்புகழை யோதாத
வாயே திணிந்த மூங்கை." (9)

"அங்கவரைக் காணப் பெறுகிற்பிற்
கங்கை நீராடற் பேறும்
அங்கவர்பாற் பேசப் பெறின்அகில
தீர்த்தமுந் தோய்ந்தோ ராவர்
அங்கவர்க்குச் செய்பூசை யண்டருக்கு
மூவருக்கும் ஆகுங் கண்டாய்
அங்கவர்க்கே தானம் அளிப்பரவர்
தம்பா லேற்பர் நல்லோர்." (12)

"மாயனயன் விண்ணுடர் வாழ்வுந்
துரும்பா மதிக்கு மிந்தத்
தூயசிவ னடியார்மேம் பாடு
யானேயோ சொல்ல வல்லேன்
பாயபெருங் கீர்த்தித் தோன்றால்
பலசொல்லி யென்னை இந்நாள்
ஆயபிற வெல்லாங் கழித்துச்
சிவனடியே அர்ச்சித் துய்வாய்." (13)

### உயர்வு நவிற்சி

புராணங்களிலே வழக்கமாகச் சொல்லப்படும் உயர்வு நவிற்சி அந்தகேசப் படலம் 26-ஆம் பாட்டில் காண்க. வாணீசப் படலம் 80-84-இல் சிவ பாத்துவம் உணர்த்துங் கதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. சலந்தரீசப் படலத்

திலே, 2-ஆம் பாட்டிலே, துளசியானது மாயோனுக்கு விருந்தையின் தோற்றத்தைக் காட்டி மகிழ்வு விளைப்ப தென்பது கூறப்பட்டது. திருமாற்பேற்றுப் படலத்திலே, 15-ஆம் பாட்டிலே இறைவனது எட்டுத் திருப்பெயர்கள் அவனது ஆயிரந் திருப்பெயர்க்கீடாம் என்பது தெரித்தனர்.

"தணிவொன்று மனமுடையார் புகழ்நீண்டச்
சிவந்தபிரான் சாத ரூபர்
மணிகண்டர் தயாநிதியார் பவளமலை
யார்வாட்டந் தவிர்த்தார் பாசப்
பிணிவிண்ட சாகிசனர் திருமாற்குப்
பேறளித்தா ரெனும்பே ரெட்டும்
அணிகொண்ட ஆயிரம்பேர்க் கொப்பனவாம்
அறிமதியென் றருளிச் செய்தான்."

பரசுராமீசப் படலத்திலே இறைவன் திருப்பெயர்கள் சிலவற்றின் பொருள்களை முனிவர் அழகாக எடுத்துரைத்தார்.

"இன்பஞ் செய்தலிற் சங்கரன் எம்பிரான்
இன்ப மாக்கலிற் சம்பு இடும்பைநோய்
என்ப தோட்டும் இயல்பின் உருத்திரன்
என்ப ரால்அவை யென்னிடைப் பொய்த்தவோ." (44)

இராணுகீசப் படலத்திலே, பெண்ணாய்ப் பிறந்து இளமையும் அழகும் பெற்று, இரவலர் சார்பில் அமைதல் அல்லல் என்பதை அழகாகச் செப்பினர்.

"அல்லலே பெண்ணெனப் பிறத்த லாங்கதின்
அல்லலே இளமையிற் சிறத்தல் ஆங்கதின்
அல்லலே கட்டழ குடைமை யாங்கதின்
அல்லலே இரவலர் சார்பி னுகுதல்."

சினத்தின் தன்மையைக் கூறுவார்,

"வெகுளியே உயிர்க்கெலாம் விளக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரத மாய்க்குமால்
வெகுளியே யறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறொன் றில்லையால்."

என்றார். மகாலிங்கப் படலத்திலே, அயனும் அரனும் அடிமுடி காணாது வருந்தியகாலை, நெடிய அழற்பிழம்பாய் நின்ற முதல்வன் வெளிப்பட்டான் என்றபோது உலகத் திற்கு ஆதாரமாய் இறைவன் ஒலிவடி வெடுப்ப அவ்வொலி ஓமெனவும் உமையெனவும் மருவிப்பின் வேதங்கட்கு ஆதாரமானது என்றமை உற்றுநோக்கத்தக்கது. சிவலிங்க மானது, அவ் வழற்பிழம்பின் குறியே என்பதும் ஆண்டு வற்புறுத்தப்பட்டது.

அயன் அரிகளை நோக்கி இறைவன்

"இற்றைநாள் நீர்காணும் இவ்விலிங்கப்
பெருவடிவம் இறுதிக் கால
முற்றுநா ளணுகாது கொற்றங்கொள்
திருக்காஞ்சி மூதூர் மாடே
பற்றுபெருங் காதலினால் தாபித்து
வழிப்பட்டுப் பரசில் தானப்
பெற்றியுறு வியனுலகம் படைத்தளிக்கும்
பெருமதுகை பெற்று வாழ்மின்." (18)

வீராட்டகாசப் படலத்திலே, திருமகள் திருமாலொடு உரையாடும் இடத்து,

"நிலையியற் பொருளும் இயங்கியற் பொருளும்
நிலைபெறத் தொழிற்படுத் துடைய
தலைவனங் கவனே பனிவரைப் பிராட்டி
தன்னையும் நின்னையும் இடப்பால்
மலரணைப் புத்தே டன்னையும் எனையும்
வலப்புடைக் கோலருத் திரனைக்
கலைமகள் தனையு முளத்திடைத் தந்தான்
காத்துயிர்த் தழிப்பது கருதி."

என்றமையால், மும்மூர்த்திகள் என்றபோது, அயன், அரி, காலருத்திரன் என்பவர்கள் என்பதும், காலருத்திரனின் வேறாய பிரமாண்ட நிலையராகிய சிகண்டர், அண்டத்திற்கு அதிபதியாய் இம்மூவர்க்குந் தலைவர் என்பதும் அறியற்பாலன. காஞ்சியிலே, உமையம்மை அமருமிடம், காமகோடி பீடம் எனப்படுவதற்குக் காரணம் பல கூறுகின்றார். விரும்பிய அறத்தினை அவண் செய்வார்க்குக் கோடி பலன் கொடுத்தலாலும், வேண்டுவார் வேண்டியதைக் கோடி மடங்கு அதிகமாகக் கொடுத்தலாலும், கோடி காமர்களைத் தோற்றுவித்தலாலும், கோடி குபேரர்களைத் தோற்றுவித்தலாலும், அப்பெயர் அமைந்தது.

இன்னும் நால்வகை உறுதிப் பொருள்களிலே, மூன்றாவது காமம், அதன் கோடியிலுள்ளது வீடு; (37). அவ்வீடு பேற்றினைத் தருதலால் காம கோடி என்ற பெயர் எழுந்ததென்னலாம் என்றார். காமம் என்ற சொல்லை மூன்றாகப் பகுக்குமிடத்து, ககரம் அயனையும், அகரம் விண்டுவினையும், மகரம் ஈசனையும் உணர்த்துவதால், இம் மூவரையுங் கோடி முறை உகந்தொறும் படைத்தலால் காமகோடி என்ற பெயர் எழுந்தது என்றார்; (88). கா என்பது கலைமகள், மா என்பது திருமகள், என்னும் இருவரையும் தம்பால் சரணடையச் செய்தலானும் (39) அப்பெயர் அம்மைக்கு வந்தது என்று காரணம் உரைத்தார்.

(44) இருவரையுங் கண்போற் காத்தமையால், அம்மை காமக்கண்ணி எனப்பட்டா ளென்பதுங் காண்க. இப் படலம் 40-ஆம் பாட்டினுள், இறைவனது பராசக்தியானது ஒரு பகுதி வியாபகத்துடன் நிவர்த்தி கலைவாயிலாக நிலத்திலும் இரு பகுதி வியாபகத்துடன் பிரதிட்டாகலை வாயிலாக நீரிலும், நாற்பகுதி வியாபகத்துடன் வித்தியா கலை வாயிலாக நெருப்பிலும், எண் பகுதி வியாபகத்துடன் சாந்திகலை வாயிலாகக் காற்றிலும், ஒன்பது பகுதி வியாபகத்துடன் சாந்தியாதீதகலை வாயிலாக வானிலும், ஆயிரம் பங்கு வியாபகத்துடன் தத்துவங்கள் எல்லாவற்றிற்கும்

அப்பாற்பட்ட பர வெளியிலும் பயிலும் அழியாப் பேராற்றல் ஆகும் என்பதைக் காண்க.

## திருமுருகன்

குமர கோட்டப் படலத்துள், முருகப் பெருமான், அயனைப் பிரணவப் பொருள் தெரிக்குமாறு கட்டளையிட, அவன் அதன் பொருள் மும்மூர்த்திகளென்று உரைத்தமை கேட்டுச் சினந்து மும்மூர்த்திக்கு அப்பாற்பட்ட முழுமுதற் கடவுளை அப்பிரணவப் பொருளென, அவன் கூறாமையால் அவனைச் சிறையிலிடுவித்தார் என்பதும் கூறப்பட்டது. அயன் சிறை புக்கமை கேட்ட முதல்வன், விண்ணவரை நோக்கிக் கூறிய பாட்டுக்கள் கருதத்தக்கன.

"புக்கிறைவன் தனைவணங்கி நிகழ்ந்த எலாம்
விண்ணப்பம் செய்யப் பூந்தேன்
நக்கநறுந் தொடையிதழிக் கடவுளவர்
தமைநோக்கி நவில்வான் என்னே
அக்கமலன் விளம்பியவா நம்மையுநம்
புதல்வனையு மன்றே மான
மிக்கபுகழ்ச் சுருதியெலாம் பிரணவத்தின்
பொருளாக விளம்பு மாறே."

(குமரகோட்டப் படலம். 15-16.)

"எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும்
பிரமனுக்கும் ஈச னென்னத்
தக்கமுதல் பரப்பிரமஞ் சதாசிவன் ஓம்
எனவேதஞ் சாற்று மல்லால்
முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணியன்
ஓம்எனவு முக்காற் கூறும்
இக்கருத்தை யறியானை எவ்வாறு
விடுவிப்ப தியம்பு மன்னே."

இவற்றால், முருகன் மும்மூர்த்திகளால் தொழப்படும் பரம்பொருளாதல் தெளிக (8—17). மாசாத்தன் தளிப் படலத்துள், திருமால் பெண்வடிவங் கொண்டபோது இலங்

கிய அவ்வடிவத்தின் அழகு விரிவாகப் புனைந்துரைக்கப் பட்டது. சாத்தனார் பூத கணங்கட்குத் தலைமை பெற்றுப் பூதநாதரென விளங்கினரென்பதும் ஆண்டுக் காண்க.

கச்சி மயானப் படலத்திலே, விண்ணவர்கள் முதல்வனைத் துதிக்குமுறை கூறுமிடத்தே, அவனுடைய எண் குணங்களும் இறைமையும் இனிதாக அறிவுறுத்தினார். அப் பாட்டுக்கள் வருமாறு :—

" முடிவி லாற்றலைத் தன்வ யத்தனை
முற்று ணர்ச்சியைப் பேரருள்
மடிவி லாட்சியைத் தூய மேனியை
மாற்றி யற்கையு ணர்ச்சியைப்
படியி லாஇயல் பாக நீங்கிய
பாச நோயை வரம்பிலின்
புடையை யுன்னடி யேங்க ளென்றும்
உனக்க டைக்கலம் ஐயனே." (8)

" அண்ட மோரணு வாம்வ ளர்ச்சியை
யணுவின் நுண்ணியை யண்டமார்
பிண்ட மெங்கணு நின்ற சைக்குநி
மித்தனுய் நிறை பெற்றியைக்
கண்டயோகியர் சிந்தை மேயினை
கரண முற்றும் அகன்றனை
யொண்டொ டிக்கொரு பங்க யாங்களு
னக்க டைக்கல மையனே." (9)

" பிரம மென்மரும் ஈச னென்மருஞ்
சீவ னென்மரும் பேதறுங்
கரும மென்மரும் வேறும் அவ்வவ
கடவு ளென்மரும் ஆகியே
முரணி யவ்வவர் பேச நின்றருள்
முதல்வ னேமுத லீறிலா
வொருவ னேஅடி யேங்க ளென்றும்
உனக்க டைக்கலம் ஐயனே." (10)

திருவேகம்பப் படலத்திலே, காஞ்சிபுரம் என்னும் பெயர்க் காரணம் பலவாறாகக் கூறப்பட்டது. கவ்வென்ற சொல்லின் பொருள் பிரமம்; பிரமமான சிவம், அஞ்சிக்கப் படுமிடமாதலின், காஞ்சி யென்ற பெயர் வந்ததென்பது ஒரு காரணம். அஞ்சித்தல், பூசிக்கப்படல்; மடவார் உந்தித்தானத்தையும் காஞ்சி யென்றுரைப்பார்கள்.

நானில மடந்தைக்குக் காஞ்சி உந்தித்தானமாயிருப்பதால் அப்பெயர் பெற்றதென்பது பிறிதொரு காரணம். க என்ற சொல், தலை, இன்பம், அயன் என்ற பொருளுடையது, யாவரும் சென்னி மேற்கொண்டு தொழுதலானும், காஞ்சியில் வாழ்வார் பேரின்பமுறுதலானும், அயன் வழிபடலானும் காஞ்சிநகர் அப்பெயர்த்தாயிற் றென்றார். இப்படலம் 48-ஆம் பாட்டிலே கம் என்பது நீர் என்றும், பர் என்ற சொல் புனிதமென்றும், பாதுகாத்தலென்றும் பொருள்படுமாதலின், அத்தகைய புனலுடைய கம்பைநதி அப்பெயர்த்தாயிற் றென்றார். இதன் விரிவை அடுத்த பாட்டில் உரைத்தார்

“கம்மெனுஞ் சிரமேல் நீண்டி
    தூய்மைசேர் கவினு லுண்டோர்
கம்மெனு மாவி தம்மைக்
    காதலான் மூழ்கி னோரைக்
கம்மெனும் பெருவீட் டின்ப
    நுகர்விக்குங் காட்சி யானுங்
கம்மநோ யறுக்கு மிந்தத்
    தடந்தி கம்பை யாமால்.” (49)

காஞ்சிக்குரிய பன்னிரு திருப்பெயர் வருமாறு:—

“புவன சாரமும் மூர்த்தி வாசம்
    விண்டு புரங்காஞ்சி
தவமார் கலிசித்தி லயசித்து
    சகலசித்தி தபோமயவூர்
கவினூர் பிரமபுர மாதிபீடங்
    கன்னிகாப்பு வினைப்
பவநோ யறுக்குஞ் சிவபுரமாம்
    பகர்பன் னிரண்டு திருப்பெயர்த்தால்.”

கழுமலத்திற்கு அமைந்ததுபோலவே காஞ்சிக்கும் பெயர் பன்னிரண்டாதல் காண்க.

## தமிழ்மறை

சீர்காழியிற் போலவே காஞ்சியிலும் பொழில்களிலே கிளிகள் தமிழ்மறைப்பாடல் பயிலுவதாக முனிவர் கூறினர்; (62).

இப் படலத்தின் 67, 68, 69-ஆம் பாடல்களிலே இறைவன் ஐம்பூதங்களிற் கலந்துநிற்கும் நிலை யுணர்த்தப் பட்டது.

"பாரின் மேயினை பாரொரு வடிவினை
பாரினுக் கறிவொண்ணுய்
பாரும் மற்றைஅப் பாரிடப் பொருளுநின்
ஆணையிற் பயில்வித்தாய்." (67)

என்றமையால், இறைவன் தமது சத்திவாயிலாகப் பாரினில் தங்கினமையும், பார்முழுதும் அதுபற்றி அவனுக்கு வடிவாயினமையும் தன்னியல்பு வேருக உடைமையால், அறிய வொண்ணுதிருப்பதும் பாரிலுள்ள எல்லாப் பொருளும் அவன் ஆணையில் நடப்பதும் உணரற்பாற்று. இவ்வாறே பிற பூதங்களிலும் இறைநிலை தெரிக்கப்பட்டது. வேதம் என்னும் பெயர்க்காரணம், 74-ஆம் பாட்டிலே விரிக்கப்பட்டது. வேதங்கள் இறைவன் திருமேனி கொண்ட இடங்களிலெல்லாம் பல்வேறு வகை உருவு கொள்வது 71—79-ஆம் பாட்டுக்களுள் தொகுத்துரைக்கப் பட்டது. அவைகள் காஞ்சியிலே இறைவனுக்குத் திருநிழல் அளிக்கும் மாமரமாயும், இறைவன் வேடனுருவங் கொண்டகாலை நாயாகவும், நடனம் புரியுங்காலை சிலம்பாகவும், தாருகா வனத்திலே பிச்சைக்கார வேடங்கொண்ட போது கோவணமாயும் உருவெடுத்தனவாம்.

"வேதக் கோவண வேதப் புரவிய
வேதப் பூவண வேத முதல்வனே
வேதத் தானும் உணர்வரு மேதகாய்
வேதச் செல்வவென் விண்ணப்பங் கேள்மதி."

இறைவன் வேதங்களை மெய்த்தவர்க்கும் விண்ணவர்க்கும் உரைத்த இடமே, திருவோத்தூரெனப்பட்டது என்றமையுங் காண்க.

## சிவதீக்கை

தழுவக்குழைந்த படலம் பல அருமையான கருத்துக்களை அடக்கி நிற்பது. தலப்பெருமை 48-ஆவது பாட்டிற் குறிக்கப்பட்டது. இதன்கண் தீக்கை எழுவகைப் படுமென்றார். அவையாவன: நோக்கு, ஊறு, மொழி, யெண்ண, நூல், யோகம், அவுத்திரியாம் (பார்த்தல், தொடுதல், சொல்லுதல், நினைத்தல், நூன்முறை, யோக தீக்கை, ஔத்திரி என்பன.) முதற்சொன்ன ஆறும், சாம்பவி தீக்கையெனப்படும். ஔத்திரி என்பது ஓமத் தோடு கூடச் செய்யப்படுவது. (சைவ சமய நெறி ஆசாரிய ரிலக்கணம் 23—27) அது, மனதிலே ஓம முதலியன நிகழ்த்திச் செய்யின், ஞானவதியெனவும் சத்தி தீக்கை யெனவும் பெயர்பெறும். புறத்தே ஓம முதலியன செய்யப் படின், அது கிரியாவதியெனவும் மாந்திரிக தீக்கை யெனவும் பெயர்பெறும். கருட பாவனையினாலே விடந்தீர்ப்பது போல், சிவபாவனையினாலே பார்த்துப் பாசநீக்கஞ்செய்தல், பார்த்தலென்னும் தீக்கையாகும். செம்பைப் பொன்னாக்குதல்போல், ஆசிரியர் தமது கையைச் சிவன் கையாகப் பாவித்துப் பூசித்து, அதனால் சீடனைப் பரிசித்துப் பாச நீக்குதல், தொடுதலெனுந் தீக்கை. பதினொரு மந்திரமும், ஐந்தெழுத்தும் அறிவித்துப் பாசத்தை நீக்கல், சொல்லாலாந் தீக்கை. ஆசிரியர் யோக முயற்சியால், மாணாக்கன் இதயத்திற் புகுந்து, அவனது அறிவைத் தனது உள்ளத்திலே சிவனறிவோடு கலக்கச்செய்து, பின்னர்ச் சீடன் அறிவை அவன் உடம்பிலே நிறுத்தல் எண்ணத்தாலாந்தீக்கை. சிவசாத்திரப் பொருளைப் போதித்தல், நூன்முறை யென்ற தீக்கை. அகண்ட பாவனை செய்யுஞ் சிவ யோகப் பயிற்சி எய்துவித்தல் யோகதீக்கை யெனப் படும்.

அகத்திலாதல் புறத்திலாதல் ஓமத்தோடு கூடிச்செய்யப்படுந்தீக்கை சமயம் விசேட நிருவாணமென மூவகைப்படும். சமயதீக்கையாவது, சைவசமயத்திற் புகுதற்குரிய தீக்கை. விசேட தீக்கை என்பது, சிவபெருமானைப் புறத்தும் அகத்தும் பூசனை புரிவதற்குத் தகுதியளிக்குந் தீக்கை. நிருவாண தீக்கையென்பது ஆறத்துவாக்களினும் உயிர்க்குள்ள கன்மபோகங்களை ஒருகாலத்திலேயே புசிப்பித்துத் தொலைப்பித்து அதனை வீடுபேற்றிற்குரியதாக்கும் முறையாகும். நிருவாணமென்ற சொல், விடுதியையுணர்த்தும். இது மலபரிபாகமுடைய தக்க மாணவர்க்கே செய்யற்பாலது. சமய தீக்கைக்குரியவர் இன்னாரென்பது, தழுவக்குழைந்த படலம் 54-ஆம் பாட்டில் முனிவர் இனிதுரைத்தனர்.

> "மருவுபுறம் அகமென்னு மதத்துழன்று
> வருணநிலை வழாது நின்று
> மிருதிமறை நெறிவேள்வி பலபுரிந்து
> வேதாந்தப் பொருண்மை தேறி
> வருமுறையால் இவையனைத்து முற்றியபின்
> மேனோக்கு மதியால் மிக்கோர்
> தெருளுதவு சைவநெறிப் படுஞ்சமய
> தீக்கைதனக் குரிய ராவர்."

இதனுள் வருணநிலையென்று அக்காலத்திற்கேற்றவாறு முனிவர் கூறினும் ஒழுக்கமென்பதே அதன்பொருளென்று கொள்க.

வேதாந்தமாகிய உபநிடதங்களின் முடிவுப்பொருளை உணர்ந்து சிவபரத்துவம் உணர்ந்த பின்னரே மக்கள் சமய தீக்கைக்குரியராவர் என்றமையால், உண்மைச் சைவராதற் குரியார், மிக உயர்ந்த ஒழுக்கமுங் கல்வியுமுடையரே யென்பது போதரும். அரன் பணியும் அடியார் பணியும் சமய தீக்கைபெற்ற சரியையாளர்க்கு உரியதென்பதும், சிவ பூசனையும் செந்தீயோம்பலும் விசேட தீக்கை பெற்ற கிரியையாளர்க்குரியனவென்பதும், அகப்பூசை செய்வார்,

இயமம், நியம முதலிய எண்வகையோகம் பயிலுதற்கு உரியாரென்பதும், இருவினையொப்பும் மலபரிபாகமும் திருவருட் பதிவும் உடையவரே, வீட்டிற்குரிய உயர்தீக்கைக்கு உரியார் என்பதும், இப்படலம் 55,56,57,58-ஆம் செய்யுட்களில் சுருக்கமாகவும் விளக்கமாகவும், இயம்பப்பட்டன. ஞான தீக்கையாகிய நிருவாண தீக்கையானது அதிகாரத்தோடு கூடியது, அதிகாரத்தோடு கூடாதது என்று இருவகைப்படும். முன்னது சிகாச் சேதத்தோடு செய்யப்படின் சிவதருமிணியெனப்படும். சிகாச் சேதமில்லாது செய்யின் உலக தருமிணி யெனப்படும். இவற்றுள் முன்னது துறவிக்கும் பின்னது இல்லறத்தானுக்குஞ் செய்யப்படுவது. இன்னும் நிருவாண தீக்கை, சத்தியோ நிர்வாணம், அசத்தியோ நிர்வாணமென இருவகைப்படும். சத்தியோ நிர்வாணம், செய்தவுடன் முத்தியைப் பயப்பது, மற்றது தேகமுடிவில் முத்தி தருவது.

உமாபதி சிவாசாரியரால் தீக்கைப் பேறெய்திய பெற்றான் சாம்பான் என்பவர் ஞானதீக்கைபெற்றவுடன் முத்தியெய்தினர்.

## முப்பொருள்

தழுவக்குழைந்த படலத்தில், இறைவன் இறைவிக்குச் சொல்வதாகப் பதியியல்பு, உயிரியல்பு, பாசத்தியல்பு, என்பன இனிது தொகுத்துரைக்கப்பட்டன.

> " அருவுருவங் குறிகுணங்கள் முதலீறு
> கட்டுவீ டனைத்தும் இன்றிப்
> பெருமையதாய் நுண்ணியதாய்ப் பேருணர்வாய்
> ஆனந்தப் பிழம்பா யெங்கும்
> ஒருமுதலாய் அழிவின்றி யோங்கொளியாய்
> நிறைந்துளதா யுயிர்கள் தோறும்
> விரவியுடன் தொழிற்படுத்துப் புலங்கொளுத்தி
> வீடுய்க்கும் பதியாம் எம்மை." (59)

"எண்ணிலவாய் வகைமூன்றாய் வெண்சிலைபோற்
பற்றியவை தாமா யென்றும்
உண்மையவாய்ச் சத்தசத்தும் பகுத்துணர்சத்
தாயிருளும் ஒளியும் அல்லாக்
கண்ணியல்பாய் வசிப்பவரு ளிறைவாயெம்
மருளாற்கட் டறுத்து வீடு
நண்ணுபவா யுணர்த்தவுணர் சிற்றறிவிற்
பலவாநற் பசுக்கள் தம்மை." (60)

"ஒன்றாகி யழிவின்றிப் பலவாற்ற
லுடைத்தாய்செம் புறுமா சென்னத்
தொன்றாகி யருள்வினைவின் நீங்கும்இருண்
மலத்துடன்அத் தொடக்கு நீப்ப
மின்தாவு முடலாதி நல்குமிரு
மாயையிரு வினைகட் கேது
வென்றோது கருமமிவை நிகழ்த்துதிரோ
தமும்எனுமை வகைப்பா சத்தை." (61)

வீடுபேறு

65-வது பாட்டிலே, காசியில் இறைவனை வழிபட்டிறப் பார்க்குச் சிவசொரூபமும், காஞ்சியில் அவனை வழிபடு வார்க்கு ஞானமுத்திப்பேறும் உண்டென்று கூறப்பட் டது. பிறிதொரு பாட்டிலே 'க' வென்பது பிரமனை யுணர்த்தும், அவனுக்கு ஈசனாய கடவுள் கேசனெனப் பட்டான். இறைவன்பாலடைந்து பெறும் உயர்ந்த முத்தி கேசாந்த முத்தியென்றும், அம் முத்தி காஞ்சிப்பதியா னது தன்கண் வாழ்வார்க்கு அளிக்கவல்லதென்றுஞ் செப் பினர். சிவாலயத்தின்கண்ணே, இறைவன் திருமுன் வைகும் நந்தி அறக் கடவுளென்பது, 74, 75, 77, 78-ஆம் பாட்டுக்களால் இனிது விளங்கும். அறமே இறைவன் ஊர்தியாம். ஒரு காலத்திலே கருடனது செருக்கை யடக்கும் பொருட்டு, இறைவனது காளையானது தன் மூச்சுக் காற்றினால் அதனை முன்பின் இழுத்துத் தள்ளித் துன்புறுத்தியதைக் கூறுமிடத்து அநுகரண வொலியைப் பாட்டில் அழகாக முனிவர் காட்டினர்.

"ஒய்யென நெட்டுயிர்ப் புதைந்து மீட்டொறு
மெய்வயிற் சுஃஃறென விரிந்து கூம்பிடுஞ்
செய்யபொற் சிறைகளிற் சிதைந்து புன்மயிர்
துய்யென வெளியிடச் சுழன்ற யாங்கணும்."

இறைவன் திருவாயிற் காவலினராகிய நந்தியும் ஊர்தி யாகிய காளையும் வேறு என்பது, அதிகார நந்தியானவர் கருடனை வெள்விடை உயிர்ப்பினின்றும் விடுவித்துக் கொணர்வான், கட்டளைபெற்றனர் என்பதால் தெளிக. 100-ஆம் பாட்டினைப் பார்க்க இப் படலம் 138-141 வரை உள்ள பாடல்களில் அம்மை வளர்த்த அறங்கள் தொகுக் கப்பட்டன. இப் படலம் 224-ஆம் பாட்டிலே விந்த மானது செருக்கடக்கப்பட்டமை செந்நெறியொழுகாது தற்புகழ்வான் விரைந்து கெடுதல் திண்ணமாவதை விளக் கிற்றென்றார். அகத்தியர் இறைவனைக் காஞ்சியில் வழிபட்ட ஞான்று அவன்பால் வேண்டும் வரங்களுள் ஒன்று 236-ஆம் பாட்டில் குறிக்கப்பட்டது.

## தமிழ் மந்திரம்

"வையமிசைத் தோற்றமுதற் சாங்காறு மன்றவுனைத்
தெய்வமெனப் பேணுத்திருவிலிகள் என்குலத்திவ்
எய்தியொரு ஞான்றும் பிறவற்க எய்தறினும்
வெய்தெனமற் றாங்கே விளிந்தொழிக எம்மானே."

முதல் பாட்டிலே குன்றாத அன்பொன்றே இறைவன் பால் வேண்டினர். தமிழிலே கடவுளைத் துதிப்பார்க்கு எல்லா நன்மைகளும் இறைவன் நல்கி அருளவேண்டும் என்றார்.

"மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான்
முழுவதுமா யுனக்கினிதாய்த்
தோன்றிடுமத் தமிழ்ப்பாடைத்
துதிகொண்டு மகிழ்ந்தருளி
யான்றவர மெல்லார்க்கு
மிவ்வரைப்பின் அளித்தருளாய்
என்றெடுத்த மொழிகல்வி
யெவற்றினுக்கும் இறையோனே."

என்றார்.

அகத்திய முனிவர் தமிழ்மந்திரங்கள் கணிக்கும் பேறே தமக்கு வேண்டியதுங் காண்க. (245-ஆம் பாட்டைப் பார்க்க). அகத்தியர் கடவுள்மீது பல செந்தமிழ்ப் பாடல் பாடினமை 287-ஆம் பாட்டில் கூறப்பட்டது. இப் படலம் 261-281 வரையுள்ள பாடல்களிலே அகத்தியர் இறைவன் திருமணக்கோலங் காணாது, தெற்கே செல்ல ஒருப்படாது கவன்ற நிலையை மிகப் பரிவு தோன்ற முனிவர் புனைந்துரைத்தனர். அகத்தியர் இறைவனை நோக்கிப் புகழ்வது:—"கருணைக் கடலே, என்னை நின் திருமணக் கூட்டத்தினின்று கழிப்பது தக்கதாமோ? நின்னை அடைந்தவர்கள் பிரியமுடியாத்தன்மையை, ஈங்குள்ளவர்கள் எல்லாரும் நின் திருமணக்கோலங் காணப்பெற்றார். பெருமணத்தின் நடுவே என்னை நீ பிரித்துப் போக்கக் கொடியேன் எப்பிழை செய்தேன்? இன்னும் வருகின்ற தேவரும் நாகரும் பூதரும் முனிவரும் பலர் உளரே; அவர்களுள் ஒருவரையும் கழியாது, தமியேனைத் தள்ளுதல் அழகாமோ? பாடுவாருடனும், பரவுவாருடனும், ஆடுவாருடனும், ஓடுவாருடனும் கலந்து மகிழவொட்டாது அடியேனைத் தள்ளுதல் முறையா? திருமணக்காட்சி இன்பங்கண்டு, வினை விள்ளப் பெற்றுச் சிவபோகங் கொண்டனம் என்று களிப்பாரோடு குலவாவண்ணம், அடியேனைத் தள்ளுதல் தக்க உபாயமாகுமா? நன்மாதர் பலர், குழல் அவிழ்வதையும் உணராது அணிகள் சரிவதையும் அறியாது ஆர்வத்துடன் பாடும் மங்கல ஒலியை இருசெவியாலும் முகவாமல் போம்படி என்னைத் தள்ளுதல் கடனாமா? முனிவர் கணநாதர் அயன் அரி முதலானோர் பணிசெய்ய மலை அரசன் மனைவி நீர்வார்ப்ப மலை அரசன் நின் திருவடிகளைக் கழுவி மலர் தூவி வழிபடுதலையும் உமையினை நினக்கு நல்குவதையும் செந்தழலிற் பொரி தூற்றுவதையும் காணவொட்டாமல் என்னைத் தடுப்பது தருமமா?"

"வாரண நிரைசூழ வாம்பரி நிறைசூழத்
தேரணி நிரை சூழத் தேவர்கள் புடைசூழ
வேரணி நகர்சூழ நினதெழில் காணாமே
ஆர்அஞர் கொளவென்னைத் தள்ளுதல் அமைவேயோ." (276)

"குடையொடு குடைதாக்கக் கொடியோடு கொடிதாக்கப்
படையொடு படைதாக்கப் பண்ணவர் குழுவோடும்
விடைமிசை வருகோலம் விழியெதிர் காணுமே
கடைபட அடியேனைத் தள்ளுதல் கவினேயோ." (275)

## தீட்டின்று

295-ஆம் பாட்டிலே தில்லைக்குங் காஞ்சிக்கும் உள்ள வேறுபாடு உரைத்து 297-ஆம் பாட்டிலே காஞ்சியில் இறப்பார்க்குத் தீட்டில்லை என்றது காண்க.

"வன்னி யிற்படு பொருள்களக் கணந்தனில்
வன்னியா மதுபோல
என்னராயினும் பரவெளிக் காஞ்சியின்
எய்தின்எம் மியல்பாவா
ரன்ன தன்மையா னத்தலத் திறந்தவர்க்
கழற்கடன் கழிப்போரைத்
துன்னுசூதகந் தொடக்குறா திழிஞரைத்
தீண்டினுந் தொடக்கில்லை."

## பூசை

இப்படலம் 321-341 வரை அம்மை பூசைக்குரிய பொருள் அமைப்பு அழகாக வர்ணிக்கப்பட்டது. பூசை இயற்றுமுன் சங்கற்பஞ் செய்வதற்கு 354-ஆம் பாட்டு மிகுதியும் பயன்படும். அது வருமாறு:—

"வழுவறு தோற்றமாதி வழுக்கிய பாவத்தீமை
கழுவநின்பூசை இந்நாட் கடைப்பிடித் தருளால் செய்கேன்
முழுதருள் வழங்கி யூறு நீக்கிமுன் னின்று கோடி
செழுமதி முடியாய் என்று சங்கற்பஞ் செய்துகொண்டாள்."

கம்பைமா நதியின் வெள்ளப் பெருக்கின்நயம் 370-371 என்னும் இரு பாடல்களிலே வீரமும் இனிமையும் தோன்றப் புனைந்துரைத்தமை காண்க.

"அடிநேடிய திருமாலென இருமா நிலம் அகழும்
முடிநேடிய மலரோன்என விண்மேற்செல முடுகுங்
கடவாமுர ணிருவோரெதிர் கனலாயெழும் உருவம்
உடையானென விரைசெல்புனல் கீழ்மேலுற நிலையும்

"வாழைக்கனி பலவின்கனி மாவின்கனி நெடிய
தாழைக்கனி யகில்குங்கும நிறைசந்தன மலர்தேன்
வேழத்துணி முதல் இன்னன கொடுமேவலின் உமையாள்
ஊழிற்புரி பூசைக்குரி யவையுய்ப்பவர் உறழும்."

## திருமணம்

திருமணப் படலத்திலே யவனரைக் கூவிப் பந்தல் அலங்காரம் முதலியவற்றை அவர்களால் செய்வித்தமை கூறப்பட்டது. யவனர் என்பார், கிரேக்க நாட்டினர்; இதனால், பண்டைக்காலத்திலேயே கிரேக்கர் அழகு செய்வதில் சிறந்தனர் என்பது போதரும். சித்திரங்கள் எல்லாம், விண்ணவர் மாதர்போல் இமையா நாட்டமுடையனவாய்ப் பாடல் பயிலுந் தோற்றமுடையனவாய் அமைக்கப்பட்டன என்பார்; (4).

"ஓவியத் தொகை யெலாம் உம்பர் மாதர்போற்
பாவியல் பாடலிற் பயிலச் செய்தனர்." (8)

என்றார்.

ஓவியங்கள் எல்லாம் உயிருடையன போலவும் பாடுவன போலவும் தோன்றின. கண் இமைத்தலொன்றே இல்லாதிருந்தன என்றவாறு.

பந்தல்களிலே தூக்கிய முத்துவடங்கள், மலைநின்றிழிகின்ற சிற்றருவித் தொகைகள்போல் வயங்கின; (9)

அவைகளிலே, மணிவடம், கண்ணாடிகள், வெண்சாமரைகள், மலர்ப்பூங்கொத்துகள், தேன்பொழி கனிகள் முதலியனவும், வாழையும், கமுகும், கரும்பும், முறை முறையாகக் கட்டப்பட்டன. மேற்கட்டிகள் பட்டினாலே இயற்றப்பெற்றுக் கொடிகள், மரங்கள், வளைந்த பொய்கை

கள், கிளி, புறா, மயில், முதலிய பலநிறப் பொருள்களின் சித்திரங்களையுடையவாய்த் திகழ்ந்தன. பந்தலின் பக்கங்களில் எல்லாம் தாமரை முதலிய நறுமலரிட்ட நீர்ப்பாத்திரங்களை அமைத்து அவைகள் பொய்கை போலவும், நறுமணக் கொடிகள் அமைத்து அவைகள் பொழில் போலவும் தோன்றுமாறு கவினுறுத்தினமை காட்டப்பட்டது.

## வியப்பு

விம்பிதப் படலத்திலே, காஞ்சிநகரத்திலுள்ள அற்புதப்பொருள்கள் தொகுத்துரைக்கப்பட்டன. அவை இப்போது யாவருங் காணுமாறு விளங்கவில்லை. கையினால் தொட்டுப் பிற பொருள்களைப் பொன்னாக்கவல்ல சித்தர் பலர் அங்கிருப்பது கூறப்பட்டது. மூன்று அதிசயமான இடங்கள் இருப்பதாகவும் அவற்றில் ஒன்று பல பிறவிகளிலே ஒருவர்க்கிருந்த தந்தைகளின் வடிவத்தைக் காட்டுமெனவும் மற்றொன்று தாய்களைக் காட்டுமெனவும் பிறிதொன்று கிளைஞரோடு உரையாடச் செய்விக்குமெனவும் உரைக்கப்பட்டது. மூன்று திண்ணைகள் உள்ளன; ஒன்று தன்பால் வந்தவர்க்கு அன்னமும் நீரும் அளிக்கும்; மற்றொன்று விரும்பிய பொருள்களைக் கொடுக்கும்; பிறிதொன்று தன்பால் வந்த ஊமை மகனைப் பேசவும் பேச்சுத்திறலுடையானை ஊமையாகவும் செய்விக்கவல்லது. மூன்று வயல்கள் உள்ளன; அவைகளில் ஒரு வயல் நெல் அரிய அரிய விளைந்துகொண்டிருக்கும்; மற்றொன்று விதை விதைத்து ஒரு நாளிலேயே விளைந்து பயன்கொடுக்கும். மூன்றாவது வயல் உழவின்றியே தக்க பயிர் விளைவிக்கும். நான்கு இருக்கைகள் இருக்கின்றன. ஒன்று நான்முகனைக் காட்டும்; மற்றொன்று அரியையும், மூன்றாவது காலருத்திரனையும் காட்டும்; நான்காவது சூரியன் வடிவத்தை இனிது காட்டும். ஐந்து தருக்கள் இருக்கின்றன; ஓயாது அமிழ்தொழுகும் பொற்பூக்களுடைய மாமரமொன்று, தன்னிழலைப் பிறர்க்குதவாத காஞ்சியொன்று, பூவாது காயாது கனிகள் நல்கும் புளியமரமொன்று, பல்

வகைப்பூக்களும் பூக்கும் அதிமதுரமொன்று, செம்பொன் மலருடைய அத்தியொன்று ஆக ஐந்தாதல் காண்க. ஐந்து குளங்கள் அதிசயம் படைத்தன ; அவற்றுள், ஒன்றிலே இரவிலே விரியுந்தாமரையும் பகலிலே விரியும் அல்லியு முள்ளது; மற்றொன்றில் ஒரு தண்டிலே மூன்று தாமரை பூத்துள்ள கொடிகள் பல இருப்பன ! மூன்றுவதிலே மூழ் கினவர்கள் வானர வடிவம் பெறுவார்கள்; மற்றொன்று பகைவர்க்குக் கொடிய தீமையை விளைவிக்கும். ஐந்தா வது மூழ்கினோருக்கு இன்பங் கொடுக்கும். ஆறு அதிசயப் பறவைகள் உள்ளன ; அவை மழை பெய்யாத காலத்தில் மேகத்தை வருவிக்கும் மயில், நூலுணர்ச்சியைத் தானுக வுடைய கிளி, கணித நூலுரைக்கும் ஆந்தை, முற்றறி வுடைய புறு, பாட்டில் வல்ல பூவை, விரும்பிய எல்லாங் கொடுக்குஞ் சக்கரவாகப்பறவை என்பனவாம். பொது விடம் ஏழில் ஒன்று விண்ணவர் பேசும்மொழி காதிற் கேட்பிக்கும்; ஒன்றிலே முயலொன்று யானையைத் துரத்த வல்லதாம் ; ஒன்றில் விண்ணுலகம் தோன்றும்; மற்றொன் றிலே சென்றவர்க்குத் திசை தெரியாது ; இன்னொன்றிலே நெய்யில்லாது விளக்கெரியும் ; ஒன்றிலே பாதாளத்துள்ள வர்கள் பேச்சுக் கேட்கும்; ஒன்றிலே துந்துபி முதலிய உயரிய நாதங்கள் முழங்கும். எட்டு வியப்புப்பொய்கை களுள் ஒன்று மூழ்கினவர்க்குப் பொன்மேனி நல்கும். ஏனையன, முறையே மணியினழகும், இந்திரவாழ்வும், மனத் திற்கினியனவும், வேண்டுவன பலவும், மெய்ஞ்ஞானமும், வீடும், வினை நீக்கமும் தருவன. அதிசயக்கற்கள் ஒன்ப துள்ளன; அவை தெய்வமேனியும், விடநீக்கமும், பல் வகைச் சித்திகளும், உயிரும், நியாயத்தீர்ப்பும், புண்ணொழி வும், பிளவொழிவும், தீவினைத்தவிர்வும், ஞானமும் தருவன. பொன்மழை, வெள்ளிமழை, முத்துமழை, செம்மணி மழை, வயிரமழை, வயிடூரியமழை, புட்பராக மாரி, பச்சைமாரி, இந்திரநீலமாரி என்பவற்றைப் பொழி யும் பொழில்கள் ஒன்பதுள்ளன; பத்துமன்றங்கள் பாவி களை ஊமை யாக்குவதும், கள்ளரை மயக்குவதும், பலவகை வடிவங்களைக் கொடுப்பதும், சாவாத்தன்மை

அளிப்பதும், பாதாளத்திற்குப் போம் வழியைக் காட்டுவதும், திசை மயக்கம் செய்வதும், பொன்மழை பெய்விப்பதும், மாணிக்கமழை பெய்விப்பதும், பகலை இரவாகவும் இரவைப் பகலாகவுங் காட்டுவதும், தன் பாற் சென்று நின்றவர்களைப் பிறர் காணுமற் செய்விப்பதும் ஆகிய தொழில்களுடையன. கூவல்கள் பதினொன்றுள், ஒன்று தன்பால் மறவாது வந்தணைந்தோரை மீளச் செய்யும்; ஏனையன, தயிர்க்கூவல், பாற்கூவல், நெய்க் கூவல், தேன்கூவல், கருப்பஞ்சாற்றுக்கூவல், முத்தி நெறியும் சுவர்க்க வழியும் பிற வுலகங்கட்கு வழியுங்காட்டுங் கூவல்கள், மக்கள் நிழலைப் பிடிக்குங்கூவல், விதையாமல் நாறு விளைக்கும் நீரையுடைய கூவல் என்பனவாம். எள்ளை ஒரு பக்கத்திற் பெற்று மற்றொரு பக்கந் தானே எண்ணெயைக் கொடுக்குஞ் செக்கு, உயிர்கள் துய்க்கும் வினைப்பயனைத் தானே கொடுக்குஞ் சிலையொன்று, கற்பாவையொன்று, காஞ்சி நகர்க் காவல் பூண்ட வயிரவரடியிலே எப்போதும் கழல் ஒலித்தல் ஆகிய பல பிற வியத்தகு தோற்றங்களும் ஆண்டுள்ளன. இவ் வதிசயங்களெல்லாம் இவ்வூழியர்க்குத் தோன்றா; தவமிக்க சிலர்க்கே தோன்றுமென்றனர்.

## ஒழுக்கம்

ஒழுக்கப் படலத்திலே, உருத்திர கணிகையரையும், வைணவத்தாசிகளையும் தாய்போல நினைந்தொழுகவேண்டும் என்றார். மனைவியுடனும் மக்கட் பொருட்டே புணர்ச்சி வேண்டுமென்றார். 37-ஆம் பாட்டிலே குற்றேவல் செய்து பிழைப்பதை நாய் விருத்தியென்றார். தென்புலத்தார் என்பவர்கள் அயன் புதல்வர்களாகிய மரீசி முதலிய சில முனிவர்களின் மக்கள் என்பதும் வியாழன், செவ்வாய், புலத்தியர், வசிட்டர் என்பவர்களுடைய மக்கள் நான்கு வருணத்தாருக்கும் பிதிரராகுவர் என்பதுங் கூறப்பட்டன. இப்படலம் 64-ஆம் பாட்டு, ‘என்பினை நரம்பிற் பின்னி’ என்ற சீவக சிந்தாமணிச் (50) செய்யுளைத் தழுவி அமைந்ததாகும்;

"என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும்பு இறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோ யெவற்றி னுக்கும் உறையுளாய்ப் புறந்தோல் மூடும்
வன்புலை யுடம்பே யாவி வருத்திடும் பிணிவே றில்லை."
(ஒழுக்கப். 64)

67-ஆம் பாட்டிலே, நல்லறம் புரிவார்க்குரிய இலக்கணம் கூறினர்,

"பொறுமைகல்வி மெய்தூய்மை ஐம் பொறி தெறலடக்கம்
உறுதிநாண் வெகுளாமை கள்ளாமை யொண்பூதி
மறுவில்சாத னஞ்சிவார்ச் சனைதியானம் வண்பதினுன்
கறமூநல் லறம்புரி பவர்க்கிலக் கணம்ஆமால்." (ஒழுக்கப். 67)

சிவபுண்ணியப் படலம் என்பதனோடு காஞ்சிப்புராண முதற் காண்டம் முடிகின்றது. சிவலிங்கப் பதிட்டையே பிற சிவபுண்ணியங்களில் எல்லாம் சிறந்ததென்றார்.

"மேதகைய தவந்தீர்த்தங் கொடைவேள்வி
துறவுநிலை விரதம் யாவும்
ஓதுசிவக் குறிசிறுவும் பயன்கோடி
படுங்கூற்றின் ஒன்றுக் கொவ்வா. (சிவபுண். 5)

இதனுள் மகேச்சுரவடிவங்கள் இருபத்தைந்தும் கூறப்பட்டன; வடித்த நீரிலே வாசனைப் பொருளிட்டு இறைவனுக்குத் திருமுழுக்குச் சாத்தினால், நூறு ·பரிமேதஞ் செய்த பயனுண்டாமென்றும் தயிர், தேன், கருப்பஞ்சாறு முதலியன ஆட்டுவோர், எண்ணிறந்த வேள்வி இயற்றிய பயனுறுவர் எனவும், திருவொற்றுடை கத்தூரி கர்ப்பூரம் சந்தனஞ் சாத்தினோர் தமர்களை நரகில் நின்று விடுவித்து நன்மை பெறுவரென்றுங் கூறினமையால், வேள்வி சிரார்த்த முதலியவற்றினும் இவ் வழிபாடு சிறந்ததென்பதறியற்பாலது; (78). மாதர் பாடலும், மங்கலநாதமும், அன்பர் பரவும் பணிவிடையிற் சேர்க்கப்பட்டன. அருள் நூல்களைக் கோயிலிற் பாதுகாத்தல் பெரும்புண்ணியமென்பதும் 93-ஆம் பாட்டிலே கூறப்பட்டது.

(105) கலியுகத்திலே இருபிறப்பாளருக்குச் சிவநெறியில் விருப்பு வாராதென்றும், பாஞ்சராத்திரம் புத்த

முதலிய சமயங்களில் விருப்பு ஏற்படுமென்றும் உரைக்கப் பட்டது; (106).

இறைவன், உலகத்தை யொடுக்குவதையும் படைப் பதையும் அழகாக ஒரு பாட்டிற் கூறினர்; (108).

"சகமெ லாமலை மாதொடுந் தன்அகத் தொடுக்கிப்
பகலி ராவுள திலதெனும் பகுப்பில்அக் காலைப்
புகழ்ப டைத்ததா னொருவனே வைகிமுன் போல
அகிலலோகமும் படைத்திடக் கருணைசெய் தருளி."

## சித்திரகவி

சுரகரீசப் படலத்திலே பலவகைச் சித்திர கவிகட் கும், முனிவர் செவ்விய காட்டுக்கள் அமைத்தனர். அவற்றுட் சில வருமாறு:

### தகர விகற்பத்தான் வந்த மடக்கு

தத்தை தித்தித்த தோதி தை தாது தேத்
தொத்து தித்துத் திதித்த தத்தித்துதாத்
துத்தித் தேதத்த தீதுதை தீத்தத்தத்
தொத்த தாது ததைத்துத் துதித்ததே.

உரை நடை:—தத்தை தித்தித்தது ஓது இதை, தாது
தேம் தொத்து உதித்து திதித்தது அத்தித்து
தூ துத்தித்து எதத்த தீது உதை தீ தத்து
அத்து ஒத்த தாது ததைத்து துதித்ததே.

உரை:—கிளிகள் இனியவற்றைப் பேசுந் தினைப்புன மானது, மகரந்தத்தையும் தேனையுமுடைய பூங்கொத்து அரும்ப (மகளிர்) காவலையுடைத்தாய், யானைமருப்பும், தூய நாகமணியும், துன்பத்தினதாகிய தீங்கினை நீக்குந் தீ தாவப்பட்ட, செந்நிறம் பொருந்திய பொற்கட்டிகளும் நெருங்கிப் புகழுந் தன்மையுடைய தாயிருந்தது.

குறிப்பு:—தத்தை = கிளி, இதை = கொல்லை, தினைப்புனம். தேம் + தொத்து = தேத்தொத்து என்றாயிற்று. உதித்து = உதிக்க = அரும்ப, திதித்தது = காவலையுடையதாய்: வினைமுற்று

வினையெச்சமாயிற்று. அத்தித்து என்பதில், அத்தி = யானை. அத்தித்து = யானையினது, அதாவது யானைமருப்பு. தா=தாய, தா + துத்தி = தாத்துத்தி. துத்தி = பாம்பின் புள்ளி. அது பாம்பிற்கு ஆகுபெயராயிற்று. துத்தித்து, என்றது பாம்பினது. அதாவது பாம்பின் மணி. எதத்த = எதத்தினையுடைய, தீ+ தத்து = தீத்தத்து. தத்து = தாவு, அத்து = சிவப்பு, தாது= பொற்கட்டி. ததைத்து = ததைந்து = நெருங்கி. துதித்தது= துதியையுடையது.

## மாலைமாற்றின் ஒருவகை

வீயாவாமா மாவாயாவீ
யாவாயாரா ராயாவாயா
வாயாடேமா மாடேயாவா
மாராமாதோ தோமாராமா

பதப்பிரிவு :—வீயாவாம் ஆமா வாயாவீ
ஆ வாயார் ஆராயா ஆயா
வாய் ஆடு, ஏ, மாமாடு, ஏயா ஆம்
ஆர் ஆம் மாது, ஓ, தோம், ஆரா, மா

மூன்றாம் அடியிலுள்ள ஏ-யும், நான்காமடியிலுள்ள ஓ-வும் அசைகள்.

உரை நடை :—ஆமா வீயாவாம், ஆ, வாயாவீ
ஆராயா, வாயார், ஆயா, வாய் ஆடு
மா மாடு ஏயா, ஆம் ஆர் ஆம், மாதுமா தோம் ஆரா

உரை:—(அம்மலையிலுள்ள) காட்டுப் பசுக்கள் சாகமாட்டா. பசுக்கள், கிடைத்தற்கரிய பூக்களை ஆராய்ந்து வாய்நிரம்பப் (பெற்றுப்புசித்து) மெலியமாட்டா. (அங்கே) பொருந்திய ஆடு கள், பெருமைபொருந்திய அயலிடத்திற்குச் செல்லமாட்டா. அருவி நீரும் ஆத்திமரமும் (அங்குள்ளன). அழகிய மாமரங்கள் குற்றத்தைப் பொருந்தமாட்டா.

குறிப்பு:—ஆமா = காட்டுப்பசு, வாயா=கிடையாத, வீ=பூ, ஆராயா = ஆராய்ந்து, ஆயா = மெலியமாட்டா, மா = பெரிய, மாடு=பக்கம். அயல்; ஆம், அம் என்பதன் விரிவு=நீர், மலையா தலின், அருவிநீர், ஆர்=ஆத்தி ஆம்=உளவாம், மாது=அழகு, மா=குற்றம்.

## திரிபங்கி

### ஒரு பாட்டே, மூன்று பாட்டாகப் பிரிதல்

“சந்தனமார் தடஞ்சார லெலாந்தனி வானளவும்
கொந்துலர்வீ நெடுங்காவி னெலாங்குனிமாந் தருவின்
நந்தியதேன் படுஞ்சூழலெலா நனிமாந்தர் விழை
கந்தநிலாங் கடந்தாழ் கரிபோங்கனி வீழ்ந்தழியும்.”

உரைநடை:—சந்தமார் தடஞ்சாரல் எலாம் மாந்தர்நனி விழை கந்தம் நிலாம், தனிவானளவும் கொந்துலர்வீ நெடுங் காவின் எலாம் கடந்தாழ்கரிபோம், சூழல்எலாம் குனிமாந்தரு வின் நந்திய தேன்படும் கனிவிழுந்தழியும்.

உரை:—சந்தன மரங்கள் பொருந்திய பெரிய மலைப் பக்கங் களிலெல்லாம், மனிதர்கள் மிகவும் விரும்புகின்ற வாசனைகள் நிலவும், ஒப்பற்ற ஆகாயத்தைப் பொருந்திய பூங்கொத்துகளில் மலர்ந்த பூக்களையுடைய நீண்ட சோலைகளி லெல்லாம் மதம் பொழிகின்ற யானைகள் செல்லும், அம்மலை யிடங்களிலெல்லாம், கனி மிகுதியால் வளைந்த மாமரங்களினது மிகுந்த தேன் பொருந்திய பழங்கள் விழுந்தழியும்.

### பிரித்த செய்யுள்கள்

சந்தன மார்    தடஞ்சாரல் எலாம்    தனிவானளவும்
கொந்தலர்வீ    நெடுங்காவினெலாம்    குனிமாந்தருவின்
நந்திய தேன்    படுஞ்சூழலெலாம்    நனிமாந்தர் விழை
கந்த(ம்)நிலாம்    கடந்தாழ்கரிபோம்    கனிவீழ்ந்தழியும்

உரை :—

சந்தன மரத்திற் பொருந்திய பூங் கொத்துக்களில் அலர்ந்த மலரினின் றெழுகும் மிகுந்த தேனுனது வாசனை வீசும்.

பெரிய மலைப்பக் கங்களிலெல்லாம், நீண்ட சோலைகளி லெல்லாம் பொருந் திய இடங்களிலெல் லாம், மதயானை செல்லும்.

ஒப்பற்றவானை அளாவிய (கனிமிகு தியால் வளைந்த) மா மரத்தினின்று மனி தர் மிகவும் விழை கின்ற பழங்கள் விழுந் தழியும்.

## தனிப்பெரும் பேருரை

சைவசித்தாந்த சாத்திரம் பதினான்கனுட் சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கும், சிவஞான போதத்திற்கும் முனிவர் ஒப்பற்ற உரை வகுத்தனர். அருணந்தி சிவாசாரியார் இயற்றிய சிவஞான சித்தியார், பிறசாத்திரங்களினும் விரிவுடையது. அதற்குச் சிவாக்கிரயோகிகள், மறைஞான தேசிகர், நிரம்பவழகிய தேசிகர், ஞானப்பிரகாச முனிவர், சுப்பிரமணிய தேசிகர் என்பாரும் முன் உரைவகுத்தனர். முதல் நால்வரும் ஆசிரியர் சிவஞானயோகிகட்கு முற்பட்டவர்கள். அவர்களுள் மூவர் உரைகள் சைவசித்தாந்தத்திற்கு மாறுபடுவனவல்ல. ஞானப்பிரகாசர் உரைமாத்திரம் சிவ சமவாதத்தைத் தழுவியதாகலின், அது நம்முனிவரால் மறுக்கப்பட்டது. சுப்பிரமணிய தேசிகர் முனிவர் உரையினைத் தமது பதவுரையால் எளிதாக்கினர். அறுவருரையுள்ளும் நமது பாடிய முதல்வரது உரையே தலைசிறந்ததென்பது யாவரும் அறிந்ததே. மாறுபட்ட பல கொள்கைகளை ஆய்ந்தறிந்து, திட்பமான கொள்கையை எடுத்துத் தெளிவாக மொழிவதிலும், பிறர் அறிய வொண்ணா நுட்பங்களைப் புலனாக்குவதிலும் சொற்பல்காவாறு பொழிப்புத் திரட்டுவதிலும், அனைய பிற நயங்களிலும் நம் முனிவர்க்கு இணையாவார் யாருமிலர். சிவஞான சித்தியார் சுபக்கக் காப்பிலே 'மும்மதம்' என்பதற்கு முனிவர் கூறிய உரை மிகவும் நயஞ் சிறந்தது. அது விநாயகப் பெருமானுக்குத் திருமுகம் ஒன்றே யானையின் உறுப்பாக அமைந்தமையின், மும்மதம் என்பது பொருந்தாதென்ப ஒரு சாரார். மும்மதம் என்பது முச்சத்திகளைக் குறிக்கும் என்பர் பிறிதொரு சாரார்; ஒரு கோடு, இரு செவி முதலியன உருவகங்களல்லவாகலின் மும்மதம் என்பதனை மாத்திரம் உருவகமாகக் கருதிப் பொருள்கோடல் தக்கதன்று என்பர். இம் முத்திறக் கொள்கைகளையும் ஆய்ந்து, விநாயகப் பெருமானுக்குக் கழுத்திற்குக் கீழ் யானைவடிவம் இன்மையும், மும்மதம் உருவகம் இன்மையும் எடுத்தியம்பி மும்மதம் என்பது ஒரு மதம், இரு மதங்களை

யும் குறிக்கும் என்று விளக்கினமை காண்க. 'அறுவகைச் சமயத்தோர்க்கும்,' என்ற மங்கல வாழ்த்துச் செய்யுளின் கண்ணே, 'ஓர்க்கும்' என்பதை வேறு சொல்லாக வைத்து, 'ஆராய்ந்து அறியும்' என்று பொருள் கொண்டதும், அறுவகைச் சமயம் என்பது புறப்புறம், புறம், அகப்புறம், என்னும் மூன்று கூற்றிற்படும் ஆறு சமயங்கள் என்றும், அகச்சமயத்தார்க்கு வேதாகமங்கள் வாயிலாக அறியற்பாலதாகிய இறைவன் தடத்தலக்கணமே விளங்கும் எனறும், சித்தாந்த சைவர்க்கு இறைவன் தனிநிலை விளங்கும் என்றும், பொருள் கூறியதும் அச்செய்யுள் ஒன்றின் கண்ணே இறைவன் எண் குணங்களும், பன்னிரண்டு சூத்திரப் பொருளும் குறிப்பால் உணர்த்தப்பட்டன என்பதை விளக்கினதும், பிற உரையாளர் அறியா நுட்பங்களாகும்.

"மறையினு லயனல் மாலால்" என்ற அவையடக்கச் செய்யுளுக்கு முனிவர் இயற்றிய சுருங்கிய செந்தமிழ்ப் பொழிப்பானது அச் செய்யுளினும், எளிதாகக் கற்பார் நினைவில் நிலைக்கும் பெற்றியது.

"மறையினு லயனுன் மாலான்
மனத்தினுன் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவினுலுங்
கூறொணுதாகி நின்ற
இறைவனுர் கமல பாதம்
இன்றியான் இயம்பும் ஆசை
நிறையினுர் குணத்தோர்க் கெல்லாம்
நகையினை நிறுத்து மன்றே."

உரை:—வேதமுதலியவற்றுனும் அறிதற்கரிய முதல்வனது இயல்பை யான் சொல்லுவல் என்றெழுந்த எனது புல்லியவாசை, சால்புடையா ரெல்லாரும் ஏயே இஃதே இவனறிவு என்றெள்ளி நகையாடுதற் கேதுவாம்; (எ - ம்.)

இதன் நுட்பம் கூறுமிடத்து அயனென்பது பதினெண் புராணத்தையும், மாலென்றது இதிகாசத்தையும், மனம் என்றது மிருதி நூலையும், வாக்கென்றது மீமாஞ்சைகளையும், அளவென்றது தருக்கத்தையும் உணர்த்தும்

எனக் கொண்டு, வேதத்தானும் அதற்கங்கமான புராணம் இதிகாச மிருதி மீமாஞ்சை தருக்கங்களானும் கூறுஞ்ச பாதம் என்றமை மிகவும் பாராட்டத்தக்கது.

ஆசிரியர் சிவஞான முனிவர், சிவஞானபோத மாபாடியம் எழுதுவதற்குமுன் சிவஞானபோதச் சிற்றுரை எழுதினர். சிவாக்கிர யோகிகளும் வடமொழிச் சிவஞான போதத்திற்குச் சிற்றுரையும் பேருரையும் வடமொழியின் கண் எழுதியுள்ளனர். அவை நம் முனிவர் உரைகட்கு ஈடாகா என்பதே அறிஞர் கருத்து.

சிவஞானபோதச் சிற்றுரைக் கருத்து முற்றும் பாடியத்துள் அடங்கும். சிவஞானபோத மாபாடியத்து இயல் பினைச் சுருக்கமாகப் பிறிதோரிடத்தில் தொகுத்துக் கூறியதை இங்கே முதற்கண் குறிக்கின்றோம்.

## பேருரைச் சிறப்பு

இந் நூலானது பண்டை மறைப்பொருள் விளக்கும் திருவள்ளுவர், பன்னிரு திருமுறை, பிற அறிவர் நூல் என்பவற்றின் கனிந்த பொருள் நலத்தையும், வடமொழி வேதாகமப் பொருள் திட்பமும் இருமொழிச் சைவநூற் பொருள் ஒருமையும் அறிதற்குரிய தெளிவினையும் ஒருங்கே கொண்டுள்ளது. இதன்கண்ணுள்ள ஒவ்வொரு சொற்றொடரிலும் தமிழ்ச்சுவை பொங்கித் ததும்பும் பான்மையது. வடசொற்களும் வடமொழிச் சுலோகங்களும் அம் மொழியில் உள்ளவாறே எழுதப்படாமல், தமிழ்மொழிப் போக்கிற்கேற்ற வண்ணம் திரிக்கப்பெற்றும் மொழி பெயர்க்கப்பெற்றும் அமைக்கப்பட்டுள்ளன. சைவசித்தாந் தப் பொருளை இனிது விளக்கவல்ல பெருநூல் தென் மொழியினும் வடமொழியினும் இஃதொன்றே யாமெனக் கோடற்கு யாதும் ஐயமில்லை. பேருரை செய்யப்புகுவார்க் கெல்லாம் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக என்றுந் திகழ்தற்குரிய கதிர்மணிநூல் இஃதேயாமெனக் கருதற் பாலது. சிவஞானபாடிய முதற்கண், முனிவர் 'வாழ்க

அந்தணர்' என்ற திருப்பாசுரத்தை அமைத்தனர். இதனால் அவரது ஒப்பற்ற பரோபகார சிந்தை புலனும். இந் நூல் பிறர்க்காக மாத்திரமல்ல, தன்வினை தீர்த்தற்குமாம் என்று அறிவுறுத்துவான், திருவாசகச் சிவபுராண முதற்பகுதியில் 'நமச்சிவாய வாழ்க' என்பது தொடங்கி, முந்தைவினை முழுதும் ஓயவுரைப்பன் யான் என்பது வரை கூறினர். இதனால் முனிவரது தாழ்மனமும், கல்வித் தவச்செருக்கின்மையும் அறியற்பாலன. தேவார திருவாசகச் சிறப்பு மறைகளை எடுத்தாண்டபின் பொதுமறையாகிய வள்ளுவப் பயனை மேற்கொள்வார்,

> "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே உலகு."

என்றனர்.

சைவசித்தாந்த ஆசிரியர் பலரும் பரமாசாரியர் மெய்கண்டாரும் இத் திருக்குறட் கருத்தையும் பிற திருக்குறட் பகுதியையுந் தழுவிக்கொண்டமையான், திருவள்ளுவர் நூலானது சைவச் சார்பாய பொதுமறை என்பது முனிவர் கருத்தாதல் தெளிக.

பாடியத்துள், இதன் பின்னரே தில்லைக் கற்பகவிநாயகர் கழல் பரவுகின்றார். பின் துறைசையாதீன முதல்வரை வழுத்துகின்றார். திருச்சிற்றம்பலம் என்பதை மும்முறை ஒவ்வொரு மேற்கோளுக்குப் பின்னும் கூறினர். இனிச் சிவஞானபோதச் சிறப்புப்பாயிரத்தை முனிவர் விளக்குகின்றார். அது ஆசிரியர் மெய்கண்டாரால் இயற்றப்படவில்லை. சிவஞானபோதத்திறுதியில் 'எந்தை சனற்குமரன்' என்ற செய்யுளும் மெய்கண்டார் திருவாக்கன்று. இவ்விரண்டினையும் உரைத்தார் இன்னாரென்று புலப்படவில்லை.

## சிவஞானபோதப் பொருள்

சிவஞான போதமானது சிவாகம ஞானபாதப் பொருளை ஆராய்ந்து உண்மையை அறிவுறுத்தும் நூல்

என்பது முதற்கண் உரைக்கப்பட்டது. சிவஞானபோதம் என்பதன் சொற்பொருள் பின்னர் விளக்கப்பட்டது. சிவ ஞானம் என்பது, பரஞானம் அபரஞானம் என்று இரு வகைப்படும். பரஞானம் கடவுள் அளிப்பது. அபர ஞானமே சிவாகம அறிவு. போதம்—போதிக்கும் நூல்; சிவாகமத்தின் நிச்சயப் பொருள் இதுவென உணர்த்தும் நூல் சிவஞான போதமாகும் என்றமையால் கடவுள் மாமுனிவர் திருவாதவூரடிகள் புராணத்திலே, சிவம் என்பது பரம்பொருள், ஞானம்-அதனை அறிதல், போதம்-தெளிதல் என்று உணர்த்தினமை ஆசிரியர் சிவஞானமுனிவர்க்கு உடம்பாடன்று போலும். சிவஞானபோதம் எவ்வாறு நிச்சயப்பொருள் உணர்த்தும் எனின், சுவாயம்புவம் என்னும் ஆகமம், பொருள் ஏழென்றது; பாசம் ஐந்தும், உயிரும் கடவுளுமாக அவை ஏழாதல் காண்க. பவுட்காம் மதங்க முதலிய ஆகமங்கள் பொருள் ஆறு என்றன. ஏகன், அநேகன், இருள், கருமம், மாயை இரண்டு என்பன அவை. பராக்கியை முதலிய சில நூல்கள், கடவுள், உயிர், கட்டு எனப் பொருள் மூன்று என்ப. மூன்று என்பதனுள் ஏனையவை அடங்குதலின் சிவஞானபோதம் பதி, பசு, பாசம் என்ற மூன்றினையே முடிவாகச் சுட்டிப்போந்தது. மூன்றிற்குக் குறைவாகப் பொருள் இரண்டு என்பார், அவை சித்து, அசித்து என்பர். ஆனால் உயிராகிய சித்துப் பொருளிற்கும் கடவுளாகிய சித்துப் பொருளிற்கும் வேறுபாடு உணராத இடத்து, உயிரும் கடவுளின் பகுதியேயோ என்று ஐயுறுதற் கேதுவாமாகலின்; கடவுள், உயிர், தளை எனப் பொருள் மூன்று கோடலே பொருத்தம் என்பது அறிக. சிவஞானபோத நூலானது பல ஆகமங்களையும் எடுத்தோதி மேற்கூறியவாறு தெளிவிக்கவில்லை. அது பொருள் மூன்று என்பதைச் சுட்டிச்சொல்லுகின்றதே அன்றிச் சிவாகமக் கருத்து வேறுபாடுகளைப்பற்றி யாதுங் கூறிற்றிலது. ஆதலின் சிவஞானபோதப் பொருளை அடிப்படையாகக் கொண்டு சிவாகமப்பொருளை நிச்சயித்துக் கொள்ளலாமே ஒழியச் சிவஞானபோதம் அவ்வாறு வெளிப்படையாகச் சொல்கின்றதென்பது தவறு. சிவ

ஞானபோதம் யார்க்கு உரியது என்பதை ஆசிரியர் மெய் கண்டார் இறுதிச் செய்யுளிலே இன்றிந்நூல் மும்மை மலர்க்கு என்றமையால் அறிக. அஃதாவது, வீடுபெற விரும்புவாருள் மும்மலமும் உடைய சகலர்க்கு இந்நூல் உரியது என்பதே கருத்து. ஆதலால் இது ஒரு மலம் உடைய விஞ்ஞானகலர் இருமலம் உடைய பிரளயாகலர் என்பார்களுக்காகச் சொல்லப்படவில்லை என்பது ஊகிக்கப் படும்.

## சிறப்புப்பாயிர ஆய்வு

சிறப்புப்பாயிரச் செய்யுளிலே 'மாயிருள்' என்பதற்கு முனிவர் நுட்பமான பொருள் ஒன்று உரைத்தார். இருளானது அகவிருள் புறவிருள் என்று இருவகைப்படும். புற இருளானது கதிரவனால் மாயும். அகவிருள் மாயாதாகலின், புறவிருளைக் கூறுங்கால் அதனை மாய் இருள் என்றார் என்பது முனிவர் கருத்து. அத்தகைய அகவிருள் சிவ ஞானபோதப் பன்னிரு சூத்திரத்தால் மாய்க்கப்படும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

இன்னும் அதனுள் ஆன்மாவை நாடுதல் என்பதையும் பெரும்பெயர்க் கடவுளிற் காண்டலென்பதையும் விளக்கு முகத்தான் தன்னையுந் தலைவனையும் பொதுவாகவுஞ் சிறப்பாகவும் உணரும் முறையை விளக்கி, நூற்பொருள் அனைத்தையும் தொகுத்துச் சுட்டினமை காண்க. சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐந்தவத்தைக்கும் தனித்தமிழ்ச் சொற்களமைத்த பெருமை நம் முனிவர்க்கே உரியது. அவையாவன, நனவும், கனவும், உறக்கமும், பேருறக்கமும், உயிர்ப்படங்குதலும் என்பன.

சைவர்கள் எல்லாச் சமயங்களையும் அவற்றின் நூல்களையும் தழுவ முயன்ற ஒரு காலத்திலே, எல்லாவித நூல்களும் இறைவனால் ஆக்கப்பட்டன என்றும் வெவ்வேறு பக்குவ நிலையில் உள்ளார்க்கு வெவ்வேறு நூல் என்றுஞ் செப்பினர். ஒவ்வொரு நூலும் ஒவ்வொன்றைப் பெரியதோர் உண்மையாகப் போற்றவே பன்னூற் கொள்கைகள்

முரண்படுவனவாம் அன்றே. அம் முரண்பாட்டினை நீக்கு வதற்குத் தூலாருந்ததி நியாயம் என்பதை மேற்கொண்ட னர். அது யாதெனில் கூறுதும்: அருந்ததி என்னும் பெயருடைய விண்மீன் நுட்பமாக வானில் உள்ளது. அதனைப் புதிதாகப் பார்க்க முயலும் ஒருவனுக்கு நேரே அதைச் சுட்டிக்காட்டினால் அவன் எளிதில் கண்டுகொள்ளமாட்டான். அதன் பக்கத்திலுள்ள பெரிய நட்சத்திரம் ஒன்றை முதலில் அவனுக்குக் காட்டி அவன் அதை உற்றுநோக்கி உணர்ந்த பின்னர், அது அருந்ததி அன்று அதன் பக்கத்திலே சிறிதாகத் தோன்றுதலே அருந்ததி என்று அறிவுறுத்துவதாகும்.

## பொருளொருமை

ஆசிரியர் சிவஞானயோகிகள் இதனைக் கருவியாகக் கொண்டு வேதாகமப் பொருளொருமை காட்டுகின்றார். வேதத்தில் கிரியாகாண்டப் பொருள் ஒருவனுக்கு ஒவ்வாத இடத்து, அதன் ஞானகாண்டமாகிய உபநிடதப்பொருளை ஆய்தல்வேண்டும். உபநிடதங்களுள்ளும் பொது உப நிடதமாகிய சுபால முதலியவற்றின் பொருளை அதர்வசிரசு முதலிய சிறப்பு உபநிடதப் பொருளால் தெளியவேண்டும்.

சிறப்பு உபநிடதங்களின் பொருளைச் சிவாகமஞான காண்டப் பொருளால் தெளியவேண்டும். சிவாகம ஞான காண்டப் பொருளைச் சிவஞானபோதத்தால் துணியவேண் டும் என்பதே முனிவர் கருத்து. இக்கொள்கையின் வைத்தே வேதாகமசாரம் சைவ சித்தாந்தம் என்று கூறு வதும், அவற்றுள் கொள்ளத்தகாதனவற்றைக் கீழ்ப்பக்குவ முடையார்க்கு என்று சமாதானம் ஓதுவதும் நம்மவர் வழக்கமாயிற்று. இக் கொள்கையானது நூல்களை ஒற்றுமைப் படுத்தும் பொருள்கோண் முறைக்கு ஏற்றதே யாயினும் வரலாற்று ஆராய்ச்சியினை மறைவுபடுத்தி அஃதறியாதார்க்கும் அறிந்தார்க்கும் கருத்து வேறுபாடு விளைக்கின்றது. இப்பொருள்கோண் முறை வேறு, வரலாற்றுமுறை வேறு, என்று கொண்டு இரண்டின் பயனை

யும் கைக்கொள்ளுவதுடன், வரலாற்றுமுறை அறியப் படாத காலத்தே பொருள்கோண் முறை நிலைபெறலா யிற்று என்று கருதுவதே அறிவிற்குப் பொருந்துவதாகும்.

## தூய்மை

ஞான நூலறிவானது கடவுளிடம் இருந்து மக்கட்கு வந்ததென்பது உண்மையே. கடவுள் ஒன்றைத் திட்ட மாகக் காட்டினால் அன்றி நாம் ஒன்றையும் அறிய முடி யாது. கடவுள் அருள்பெற்ற பெரியோர் பண்டைக் காலத்தில் இயற்றிய நூல்கள் மறைவுற்றும் சிதைவுபட்டும் உருமாறிய காலத்தே பல மக்கட்பிரிவினரது கூட்டுறவால் எழுந்த இப்போதுள்ள வடமொழி வேதம், ஆகம முதலி யன இப்போதுள்ளவாறே விண்ணுலகத்தில் கடவுளால் கொடுக்கப்பட்டு நிலத்தின்கண் இறங்கி மிளிர்கின்றன என்றுகோடல் வரலாற்று முறைக்கு முற்றும் மாறுனதே. இவற்றைப்பற்றிய ஆராய்ச்சியை ஈண்டு விரிவஞ்சிவிடுக் கின்றேம். இப்போதுள்ள வடமொழி வேதாகமங்கள் சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் பிறவற்றையும் ஒருங்கு கொண்டுள்ளன. முன்னவற்றைப் பெற்றிருப்பதாலேயே அவை நம்மால் தழுவப்படுதற்குரியன. தமிழிலே சைவ சித்தாந்த நூல்கள் நம் சமயக் கருத்துக்கள் பலவற்றைத் தெளிவாக உணர்த்துவதால் வட நூலாராய்ச்சி தமிழில் இல்லாதவற்றைத் தெளிவுபடுத்தவே பயன்படவேண்டும். ஞானகாண்டப் பொருள்கொண்டே கிரியாகாண்டப் பொருளைத் துணியவேண்டும் ஆதலின், சிவஞானபோத முதலிய ஞானநூல்களின் பொருளுக்கு ஏற்ற கிரியை களையே சைவர்கள் மேற்கொள்ளற் பாலர். இப்போது சைவர்க்குரிய கிரியைகள் சிவாகமக் கிரியா காண்டத்தின் கண்ணுள்ளன. ஆனல் சிவாகமக்கிரியா காண்டம் மாசு படிந்துள்ளது. அதனைத் தூய்மைப்படுத்திச் செவ்வனே போற்ற வேண்டுமாயின் சிவஞானபோதம் முதலிய சைவ சித்தாந்த நூற்பொருளோடு மாறுபட்ட கருத்துக்களைக் கிரியாகாண்டத்தினின்று ஒதுக்கி அதனைத் தெளிவுபடுத்த வேண்டும்.

## மறையவர் முரண்

வேதவாதியர் முழக்கத்தால் சைவர்கள் தங்கள் சிவாகம நூலுக்குரிய பெருமையுணர்ந்திலராதலின் முனிவர் சிறப்புப் பாயிரத்திலேயே "சைவாகமப் பிரமாணியம்" என்ற ஒரு தலைப்பின்கீழ் வேதம், சிவாகமம் என்னும் இரண்டையும் ஒற்றுமைப்படுத்த முயல்கின்றார். வேதவாதியர், ஆகமம், தந்திரம் என்பவைகளை ஒரு காலத்தில் இகழ்ந்தனரென்பது அதனுட் காணப்படுகின்றது.

சிறப்புப்பாயிரம் 13-ஆம் பக்கம், வாசிட்டலைங்கமென்ற நூலில் தந்திரவழி ஒழுகினோர் மாமூடர் என்று கூறப்பட்டது. பதும புராணத்திலே, திராவிட தேசத்திலே சித்திரசேனன் என்பான், பாசண்டர் கூற்றைபற்றி வைதிக ஒழுக்கத்தைக் கைவிட்டுப் பாசுபத வழியொழுகி நரகத்தில் வீழ்ந்தான் என்றும், சூதசங்கிதையில், மொழி பாஞ்சராத்திரம், காபாலங் காளாமுகம்சாத்தம் பவுத்த, மாருகதந் தன்னிற்—கழிபாசுபத நூல் சாம்பவத்தில் தீக்கை காதலிப்பீர் வேதியரிற் கடையர் காணீர் என்றும் வருவன காண்க.

சிவஞான பாடியம் 14-ஆம் பக்கம் தீக்கைப்பேறு வைதிகர்க்கின்மைக்குக் காரணம் பக்குவமின்மையே என்று முனிவர் இறுத்தது காண்க.

17-ஆம் பக்கம் சைவாகமத்துள், உலக நூல், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம் என நூல்களை ஐவகைப்படுத்து மாந்திரம் ஒழிந்த நான்கும் புறநூல் என்றமையால் வைதிகம் புறச்சமய நூலேயென்பதும், வேதாந்தத்திலே ஏகனே ஆன்மா என்பதால் அது மறுக்கத் தக்கதென்பதும் முனிவர் எடுத்தோதி, அவற்றிற்குத் தெளிவுரைக்கும் வாயிலாக, வேதத்தைத் தழுவிக்கொண்டனர். சிவாகமத்துள் மறுப்புரைக்கும் இடத்து வைதிகம் என்றது மீமாஞ்சை, வைசேடிகம், தருக்கமென்ற நூல்களை யெனவும், வேதாந்தமென்றது வியாசரியற்றிய ஏகான்மவாத நூலை எனவுங் கூறினர். உண்மை வைதிகம்

இவற்றின் வேறென்பதும், உண்மை வேதாந்தம் சைவ உப நிடதங்கள் என்பதும் முனிவர் கருத்து.

## மறைமுடிவு

சைவசித்தாந்தக் கருத்துக்களையுடைய வேதப் பகுதியும் உபநிடதப் பகுதியுமே, வேதம் வேதாந்தமென்பதும் அவற்றின் ஒளிகொண்டே பிற பகுதிகளின் பொருள் அறியற் பாலதென்பதும் முனிவர் கருத்து. வியாசநூல் பிரம சூத்திரம் என்று ஒன்றுள்ளது. சில சைவசித்தாந்திகள் வியாசர் செய்த ஏகான்மவாதநூல் பிரமசூத்திரத்தின் வேறு என்பர். ஆனல், அது எஃது என்று அவர்கள் காட்டுவதில்லை. எவ்வகையான நூலுக்குஞ் சித்தாந்தப்பொருள் கொள்ள விரும்புவார், ஏகான்மவாத நூலுக்கும் அவ்வாறே பொருள் கொள்ளுவர். பிரமசூத்திரமென்ற நூலுக்கு ஆசிரியர் சங்கரமுனிவர் (சங்கராசாரியர்) ஏகான்மவாதப் பொருள் எழுதினர். அவர் எழுதிய நூலே சங்கரபாடியம். ஆசிரியர் இராமாநுசர் வைணவத்திற் கேற்ப விசிட்டாத்துவிதப் பொருள்கொண்டார். தமிழ்க் கந்தபுராண ஆசிரியராகிய கச்சியப்ப சிவாசாரியார் அது சைவசித்தாந்தக் கருத்துடையதென்றார். அவர் பாடியம் எழுதவில்லை; மேலே காட்டிய மூவர் கருத்தும், முடிவிலே ஏகான்மவாதச் சார்புடையதே. பிரம சூத்திரத்தின் வேறாக வியாசரியற்றிய ஏகான்மவாதநூல் ஈதெனத் தெளிவாக விளங்கவில்லை.

ஆசிரியர் அருணந்தி சிவாசாரியார் பகவற்கீதையைக் கண்டித்தனர். ஆசிரியர் சிவஞான முனிவர் அதற்குச் சித்தாந்தப்பொருள் கொண்டனர். அவ்வாறே கந்தபுராணப் பெருந்தகையாரும் பிரம சூத்திரத்திற்குச் சித்தாந்தப் பொருள்கொண்டனர் போலும்.

கந்தபுராணம் பாயிரம் 46-ஆம் பாட்டு வருமாறு:—

“ எத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருள்
மாத்திரைப் படாவெனு மாசில் காட்சியர்
பார்த்துணர் பான்மையாற் பல்வ கைப்படச்
சூத்திர மானவுஞ் சொற்று வைகினன்.

ஞானத்தை நல்கிப் பாசத்தை யொழிப்பதே தீக்கை யெனப்படும். ஒருமலமாத்திர முடையவர்க்கு இறைவன் தானே உயிர்க்குயிராய் உண்ணின்று உண்மை யுணர்த் துவன். அவன் உள் நின்றுணர்த்தாது, சதாசிவமூர்த்தி யாய்நின்று இருமலமுடையார்க்கு உண்மை யுணர்த்துவன். சகலருக்கு ஞானசாரியனை அதிட்டித்து நின்று செய்வன். ஞானசாரியர்கள் ஓம முதலிய சடங்கியற்றிச் செய்யுந் தீக்கை சிவஞானத்திற்கு ஒருவனை உரியவனாக்கும். சிவஞானமொன்றே வீடுபேறு உதவவல்லது. தீக்கையால் ஞானங் கைவரும். ஞானமின்றித் தீக்கையான் மட்டுமே முத்தி கிடையாதென்பதே முனிவர் கருத்து. ஆசிரியர் சிவஞானயோகிகள் நான்கு வருணத்திற்கும் உரிய ஆகம விதிகளைத் தழுவுகின்றவர். அவர்காலத்துச் சிவாகமங்களை ஒழுங்காக ஆய்ந்து சூத்திரருள் வாழ்நாள் முழுதுந் துறவு பூண்ட நைட்டிகப் பிரமசாரிகளே சைவாசாரியராதற் குரியர் என்பதே சிவாகமக் கருத்தென்பதை இனிது விளக் கினர். பிறப்புப் பற்றிய நால்வருணக் கொள்கை சைவ சித்தாந்தத்திற்கு ஒத்ததன்றென்பார் முனிவரது கருத் தினைத் தழுவாதிருக்கலாம். ஆனால், முனிவரைக் குறை கூறுதல் நன்றன்று. தாம் மெய்யென நம்பியதை அவர் எழுதினர். அது அக் காலத்தே வரலாற்றாராய்ச்சியின்மை பற்றி வந்த இழுக்காகும். கால இயல்பு ஆசிரியர் நூல் களிலே காணப்படுதல் இயல்பே.

சிவஞான பாடிய அவையடக்கத்துள், பிற சமயங் களின் கொள்கைகளை ஆசிரியர் சுருக்கமாகவும் விளக்க மாகவுந் தொகுத்துள்ளார். அதை இனி வெளியிடப்படும் மெய்கண்டார் நூலாராய்ச்சியிற் காண்க.

## பொருள் நுட்பம்

சிவஞானபோதச் சூத்திரப்பொருளை ஆசிரியர் கருத் திற்கிணங்கச் சுருக்கமாகக் கூறுவதுடன், இந்நூல் முடிவு பெறும்.

முதற் சூத்திரக் கருத்தாவது:— அவன் அவள் அது என்ற மூவகையான வெவ்வேறு பகுதிகளை உடைய உலகமானது தோன்றி, நின்று, அழிதலாகிய முத்தொழிற்படுதலால், அது ஒருவனால் தோற்றுவிக்கப்பட்டு நிலைபெறுவதாகிய உள்பொருளே. யாரால் அது தோற்றுவிக்கப்படுகிறதென்னில் அதனை ஒடுக்கினவன் யாரோ அவனாலே அது தோற்றமுடையதாகும். ஒடுக்கினவன் அதனைப் படைப்பது எதனாலெனில் உயிர்களினது ஆணவமலம் நீங்குவதற்காக; ஒடுக்குவது கருமமலம் பக்குவப்படுவதற்காக; எல்லாம் ஒடுங்குங் காலத்தே அவற்றை ஒடுக்கின முதல்வனே ஒடுங்காது நிற்றலின், அவனாலேயே மீளவும் ஒடுங்கின உலகமுண்டாகும். ஆதலால் சங்கார முதல்வனே உலகிற்கு முழுமுதற்கடவுளென அறிக.

இரண்டாம் சூத்திரத்தின் பொருள் வருமாறு:—சங்கார காரணனாகிய முதல்வன் உடலிலே உயிர்கலந்திருத்தல் போல உயிர்களோடு கலந்து அவையேயாய்ப் பொருள் தன்மையால் அவற்றின் வேறுமாய் உடனறிதல்பற்றி உடனுமாய்நின்று உயிர்கள் இருவினையினாலே இறப்பும் பிறப்பும் புரியும்படி அவ் இருவினைகளைச் செலுத்துவதற்கு ஆதாரமான தனது ஞானசத்தியோடு பிரிவின்றி நிற்பன்.

மூன்றாஞ் சூத்திரப் பொருள் வருமாறு:—ஆன்மா இல்லை என்று கூறுவார் உடல், பொறி, மனம் முதலியவற்றை முறையே இது ஆன்மாவல்ல, இது ஆன்மாவல்ல என்று கழித்து, ஒன்றும் ஆன்மா அன்றாதலின் ஆன்மா சூனியம் என்பர். அங்ஙனம் கூறுவதொரு அறிவு உண்மையின் அவ்வறிவுடையது ஒன்றே ஆன்மா என்றனர் ஆசிரியர். ஆன்மா உலகப்பொருளும் அல்ல, தனி முதலாகிய இறைவனும் அல்ல; இரண்டிற்கும் வேறாயுள்ளது என்பது.

முதற் சூத்திரத்தால் பதி உண்மையும், 2-ஆம் சூத்திரத்தால் பாச உண்மையும், 3-ஆம் சூத்திரத்தால் பசு உண்மையும் கூறப்பட்டதாதலின் இம் மூன்று சூத்திரங்களும் பிரமாண இயல் எனப்படும்.

நான்காஞ் சூத்திரப் பொருள் வருமாறு:—உயிரானது அந்தக்கரணங்களுள் ஒன்றன்றாயினும், அநாதியே பற்றி உள்ள ஆணவத்தால், அறிவு மறைப்பெற்று, அமைச்சரோடு கூடிநின்று தொழில் நடத்தும் அரசன்போல அந்தக் கரணங்களோடு கூடிநின்று அது நனவு, கனவு, துயில், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்னும் ஐந்தவத்தைப் படுகின்றது.

ஐந்தாஞ் சூத்திரப்பொருள் வருமாறு:—ஆன்மாவினால் தனக்குப் புலனாவனவற்றை அறியும் மெய், வாய், கண் மூக்கு, செவி, என்பன தம்மையும் தம்மைச் செலுத்தும் ஆன்மாவையும் அறியமாட்டா. அதுபோல உயிர்களும் அருள்சத்தியாலே வினைப்பயன்களை அறிந்து அனுபவிக்கின்றன எனினும், தம்மையும் தம்மைச் செலுத்தும் திருவருளினையும் அறிய மாட்டா. திருவருள்சத்திமுன் உயிர்கள் தொழிற்படுதல் காந்தத்தின் முன் இரும்பு தொழிற் படுதல் போலாதலின் திருவருள்சத்தியையுடைய இறைவன் விகாரப்படுதல் இல்லை என்று தெளிக.

ஆறாஞ் சூத்திரப் பொருள் வருமாறு:— தோன்றும் உலகம் அழியுந் தன்மையது. ஆதலால் இறைவன் உலகத்துப் பொருள்போல அறியப்படுவனாயின் அவனுக்கும் அழிவு உண்டாம். ஆதலால் அவன் அங்ஙனம் அறியப் படமாட்டான்; அவன் எவ்வாற்றானும் அறியப்படாதவன் எனின் அவன் சூனியப் பொருளாவான், அவன் அங்ஙனம் அன்மையின் ஒருவாற்றால் அறியப்படுபவனாயுள்ள பேரறிவுப் பெரும்பொருள் சிவசத்து என உணர்க.

நான்காஞ் சூத்திரத்திலே உயிரின் இலக்கணமும், ஐந்தாஞ் சூத்திரத்திலே பாச இலக்கணமும், ஆறாஞ் சூத்திரத்திலே பதி இலக்கணமும் போந்தமையின் இம் மூன்றும் 'இலக்கண இயல் 'எனப்படும்.

ஏழாஞ் சூத்திரக் கருத்து வருமாறு:— சிவசத்தியின் முன் அசத்துப் பொருள்கள் நிலைபெறாமையின் சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்தனுபவியாது,

பாசம் அறிவில்லாத சடமாகலின், சத்தாய சிவத்தை அறிந்து அனுபவியாது. ஆதலால் சத்தேயாகவும் அசத்தே யாகவும் இல்லாத சதசத்தாகிய ஆன்மா இரண்டையும் அறிந்து அனுபவிக்கும்.

எட்டாஞ் சூத்திரக் கருத்து வருமாறு:—பல பிறவிகளிலே இயற்றிய பெருந்தவத்தினால், உயிர்க்குயிராய கடவுள் குரு வாய்த் தோன்றி உயிரை நோக்கி, 'நீ நின்மெய் இயல்பு அறியாது, ஐம்புல வேடர் கூட்டுறவினால், மயங்கி இடர்ப் பட்டாய்' என்று அறிவுறுத்த உயிரானது அக் கூட்டுறவில் நீங்கி, இறைவனோடு அத்துவிதமாய் நிற்கும் நிலையினை உணர்ந்து அம் முதல்வன் திருவடிகளை அணையும்.

ஒன்பதாவது சூத்திரக் கருத்து :—பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் அறியப்படாத முதல்வனை அம் முதல் வன் அளித்த ஞானமாகிய கண்ணினாலே தன் அறிவின் கண்ணே ஆய்ந்தறிக. பிறவித் துயராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாகத் தோன்றும் பதிஞானத்தால் முதல் வனைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டுத் திருவஞ் செழுத்தினை விதிப்படி நினைக்க.

ஏழு, எட்டு, ஒன்பது என்ற மூன்று சூத்திரங்களும் இறைவனை அறியும் உபாயம் உணர்த்தலின் 'சாதனவியல்' எனப்படும்.

பத்தாஞ் சூத்திரக் கருத்து :— முதல்வன் உயிரோடு கலந்து, உயிரேயாய் நின்றமைபோல, உயிரும் தான் என வேறு காணப்படாது, அம்முதல்வனேயாய் ஒற்றுமைப் பட்டு, அவன் பணியிலே வழுவாது நிற்பின், ஆணவம், கன்மம் மாயை என்ற மூன்றும் பற்றறக் கழியும்.

பதினோராஞ் சூத்திரக் கருத்து :—கண்ணுக்கு உருவத் தைக் காட்டித் தானும் அதனைக் காண்கின்ற உயிர்போல முதல்வன் உயிர்க்குப் பொருள்களை உணர்த்தித் தானும் உணர்ந்து பேருதவி புரிவதைக் கடைப்பிடித்துச் செய்யும் அன்பாலே, சிவானந்தம் விளையும்.

பன்னிரண்டாஞ் சூத்திரக் கருத்து :— சிவன் செங்கமலம் மலர்போல விரிந்து விளங்கிய மு திருவடியை அணைய ஒட்டாது மறத்தலைச் செ மும்மல அழுக்கை ஞானநீரால் கழுவி, அயரா முதல்வனை அணைந்தாரோடுங் கூடி, மலமயக் அவ்வன்பரது திருவேடத்தையும் திருக்கோயிலை என வழிபடுவன்.

கடைசி மூன்று சூத்திரமும் 'பயன் இயல்' எ

முற்றிற்று



